# மனோன்மணீயம்

பேராசிரியர் சுந்தரம் பிள்ளை
இயற்றியது.

பதிப்பாசிரியர் : பி.ஸ்ரீ.

பதிப்பாளர்: செம்பியன்
தயாரிப்பு: முல்லை முத்தையா



அன்பு வெளியீடு
புதுச்சேரி

# பதிப்பாசிரியர் குறிப்பு

மனோன்மணீயம் என்ற இந்த நாடகத்தை ஆசிரியரே முதலாவதாக 1891-ல் வெளியிட்டார். அடுத்த ஆண்டில் 'கமலாம்பாள் சரித்திர' ஆசிரியரான திரு. ராஜமையர் இந் நாடகம் பற்றிய விமர்சனம் ஒன்றை ஆங்கிலத்தில் எழுதி வெளியிட்டார். அந்தக்கட்டுரை சென்னைக் கிறிஸ்தவ கலாசாலைப் பத்திரிகையில் பிரசுரமாகி, ஆங்கிலப் பயிற்சியுடையவர்களுக்கு இந்நூலின் அருமை பெருமைகளை நன்கு உணர்த்தியது. ஷேக்ஸ்பியரின் போக்கைத் தழுவி அந்த மகா நாடகங்களின் கருத்துப் பொருத்தத்துடன் ஒரு புதிய இலக்கியப் பெரு முயற்சி வெற்றி பெற்று விட்டதாக அந்த நாளிலேயே தமிழும் ஆங்கிலமும் ஒருங்கே பயின்றிருந்த அறிஞர்களும் இலக்கிய ரசிகர்களும் கருதுவாராயினர்.

இந்த நாடக நூல் கலாசாலை வகுப்புகளில் அடிக்கடி பாடமாக உபயோகிக்கப் பெற்று வருகிறது. ஆங்கிலம் அறியாத பொது மக்களாலும் பிரியமாக வாசிக்கப்பட்டு வருகிறது. நாடக மேடைகளில் நடிப்பதற்கும் இந்த நாடகத்தை இசைவித்து உபயோகித்துக் கொள்வதுண்டு. இம்முயற்சியைப் பின்பற்றி இதற்கு ஈடாக வேறொரு தமிழ் நாடக நூல் நாளது வரை தோன்றாததே இதன் தனிச் சிறப்புக்கு ஒரு தக்க சான்றாகும்.

பதிப்பாசிரியப் பண்பில் டாக்டர் சாமிநாதையருக்குநிகராகத் திகழ்ந்து, தமிழ்ப் பெரும்புலமையுடன் ஆங்கிலத்திலும் தக்க பயிற்சியும் நிகரற்ற ஆராய்ச்சித் திறனும் வாய்க்கப் பெற்றிருந்த எனது பேரன்பர் காலஞ்சென்ற பேராசிரியர் திரு. எஸ். வையாபுரிப்பிள்ளை 36 ஆண்டுகளுக்கு முன் இந்த நாடக நூலுக்கு ஒரு நல்ல பதிப்பை அளித்து உதவினார். அந்தப் பதிப்பின் ஒரு தனிச் சிறப்பு ஆங்கிலத்தில் திரு. கே. என். சிவராஜபிள்ளை எழுதியிருந்த விவரமான குணச்சித்திர ஆய்வுரை ஆகும்.

அத்தகைய சிறப்பு வாய்ந்த விமர்சனக் கட்டுரைகள் தமிழில் எழுதப் பெற வேண்டும் என்ற ஆசை தூண்ட, 'தினமணி'

ஆசிரியர் திரு. ஏ. என். சிவராமனது விருப்பத்திற்கு இணங்கி, சுமார் பத்தாண்டுகளுக்கு முன் 'தினமணிப்' பத்திரிகையில், 'மனோன்மணீயம் விளக்கமும் விமரிசனமும்' என்ற தலைப்பில், சில கட்டுரைகளைத் தொடர்ச்சியாக எழுதி வந்தேன். அக் கட்டுரைகள் பொதுவாகத் தமிழறிஞர்களால் பெரிதும் பாராட் டப் பெற்றதுடன், 'மனோன்மணீய' நாடகப் பிரியர்களின் உள்ளத்தைச் சிறப்பாகக் கவர்ந்தன. அவை முற்றும் திருந்திய வடிவில், இந்நூலுக்கு ஒரு விசேஷ முன்னுரையாக அமைந்திருக் கின்றன. இந்த நாடக பொக்கிஷத்திற்கு இம்முன்னுரை ஒரு திறவுகோலாக உதவும் என்று நம்புகிறேன்.

அறுபத்திரண்டு ஆண்டுகட்குமுன் மனோன்மணீய ஆசிரியர் டாக்டர் உ. வே. சாமிநாதையருக்கு எழுதிய அருமையான கடிதம் ஒன்றும் இப்பதிப்பில் வெளியிடப்பட்டுள்ளது. 1935-ம் ஆண்டில் இது 'கலைமகள்' இதழில் வெளிவந்தது. காரியாலயத் தினர் இசைவு பெற்று, தில்லித் தமிழ்ச் சங்கத்தார் உதவியது.

இந்நூல் தமிழகத்தில் ஒவ்வொரு வீட்டிலும் ஒரு நல்லணி யாக இடம் பெறவேண்டும் என்ற நோக்கத்துடன், இம் மலிவுப் பதிப்பு உருவாகியிருக்கிறது. இதை வாசகர்களின் கைக்கும் அணியாகச் செய்து தந்திருக்கிறது அன்பு வெளியீடு.

2, கால்வாய்க்கரை வீதி
ராஜா அண்ணாமலைபுரம்
சென்னை-28.
10-5-58

பி. ஸ்ரீ.

# 1896-ல் ஆசிரியர் எழுதிய கடிதம்

*[மனோன்மணீய ஆசிரியர் சுந்தரம்பிள்ளை டாக்டர் சாமிநாதையரின் நண்பர்களில் ஒருவர்; மனோன்மணீய நாடகத்தின் பகுதிகள் பாடமாக வைக்கப்பட்ட காலங்களில் ஐயரவர்களை வேண்டி அவர்கள் செய்த திருத்தங்களை விருப்பத்தோடு ஏற்று மகிழ்ந்தவர்.]*

சிவமயம்.

தயவுசெய்து அனுப்பித்த எழுத்தும் திருத்தங்களும் கை சேர்ந்தன. நேற்று சாயரக்ஷை வரையும் இரண்டு பிரசங்கங்கள் எழுதி வாசிக்க வேண்டிய அவசர அலுவல் வழக்கமானவற்றோடு தொடர்ந்து கொண்டமையால் சற்றும் சாவகாசமில்லாமல் மறுபடிக்கும் வந்தனத்திற்கும் காலம் தாழ்த்தமை மன்னிக்க வேண்டுகிறேன். திருத்தங்களைக் கவனித்து மேலும் யாதேனும் சந்தேகம் தோற்றுகிறவைகளைத் தெரிவித்துக் கொள்வேன். கண் வியாதியோடு இவ்வளவு எனக்காகச் சிரமம் எடுத்துக் கொண்டதற்காக மனப்பூர்வமாக நன்றி பாராட்டுதலன்றி மற்றென்ன உபசாரம் யான் சொல்லத் தக்கது? கண் வியாதிகள் அறிந்த நல்ல வைத்தியரிடம் அன்றிச் சாதாரணமானவர்களுடைய வார்த்தைகளைக் கேட்டு யாதும் பிரயோகிக்கத் தக்கதன்றே. இப்போது ஏது தன்மையிலிருக்கிறதென்று அறிய அவாவுகிறேன். **தாங்கள் தமிழுக்கு ஒரு கண்.** தங்கள் கண்ணுக்கு வருத்தமென்று கேட்க மனம் சகிக்கிறதில்லை. இனியும் தங்களால் ஆகவேண்டுமவை அனந்தம். சகாயத்திற்கு ஒன்றோ இரண்டோ ஆள் அவசியம். அவ்வகைச் செலவிற்கு என்ன செய்யக்கூடியதாக இருக்கும்? என்னாலியன்றவை செய்யஆயத்தம். தஞ்சாவூரில் மகா-ா-ா-ஸ்ரீ, கல்யாண சுந்தரமய்யர் அவர்களை யான் சென்ற ஆண்டு கண்ட காலை இவ்வகையான முயற்சிக்குத் தாம் அனுகூலிக்கும் விருப்பமுடையராகப் பேசினர். அவர்கள் ஒரு வாக்குச் செலவிடுவதானால் மடங்களில் அழியும் பொருளில் எவ்வளவு இதில் கதியடையக் கூடாததாகும்? அவர்களைத் தாங்கள் ஏன் பிரேரிப்

# பொருளடக்கம்

# ஆசிரியரின் வரலாறும் தமிழ்த் தொண்டும்

## சேரநாடு அளித்த தமிழ்ச் செல்வர்

பண்டைத் தமிழகத்தின் முப்பெரும் பிரிவுகளில் மலையாளம் என்றும் கேரளம் என்றும் இன்று சொல்லப் பெறும் சேரநாடும் ஒன்றாகும். தமிழர்களின் முடியுடை மூவேந்தர்களில் சேரனும் ஒருவனாவன். இன்று நம் தமிழகத்தினின்றும் பிரிந்திருக்கும் அந்த நாடு சிலப்பதி காரம் இயற்றிய இளங்கோவடிகளையும், பாடும் பக்த மணி களான குலசேகராழ்வார் சேரமான்பெருமாள் நாயனார் என்ற இருவருரையும் தந்து தமிழிலக்கியத்திற்கு வளமும் வனப்பும் அளித்திருக்கிறது எனபது சரித்திரப் புகழ் பெற்ற செய்தி. அதே நாட்டில் தமிழிலக்கிய மறுமலர்ச் சிக்கு ஒரு முக்கிய காரணமாக அமைந்த மனோன்மணீய நாடகமும் தோன்றியுள்ளது.

சேரநாட்டு மக்களை இந்நாளில் மலையாளிகள் என்று குறிப்பிடுகிறோம். மலையாளி என்றால் மலைநாட்டில் வாழ் பவன். மனோன்மணீய ஆசிரியரான சுந்தரம் பிள்ளை மலை யாள நாட்டில் பிறந்து வளர்ந்த தம்மை,

> கொடுமலை யாளக்
> குடியிருப்(பு) உடையேன்

என்று தமது மனோன்மணீய நாடகப் பாயிரத்தில் பெரும் பணிவுடன் அறிமுகப் படுத்திக் கொள்கிறார்.

சேரநாடு மலையாள நாடு ஆகி, அந்த நாட்டு மொழியும் தமிழினின்று வேறுபட்ட இன்றைய மலையாளமாகக்

இழைத்து விட்டது. எனினும், தமிழ் மக்கள் சேரநாட்டின் பல பகுதிகளிலும் காணப்படுகிறார்கள். இத்தகைய தமிழ்க் குடும்பங்களில் ஒன்று ஆலப்புழைப் பெருமாள் பிள்ளையின் குடும்பம். ஆலப்புழை ஒரு துறைமுகப் பட்டினம்: அப்பட்டினத்தில் பெருமாள் பிள்ளை வியாபாரத் துறையில் ஈடுபட்டிருந்தார். இவரது அருமைப புதல்வரே மனோன்மணீய நாடக ஆசிரியரான சுந்தரம் பிள்ளை.

1855-ம் ஆண்டில்—இந்தியச் சிப்பாய்களின் சுதந்திரப் போராட்டம் தொடங்கியதற்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்—பிறந்தவர் சுந்தரம் பிள்ளை. இவர் தந்தையாருக்கும் தமிழப பற்று அதிகம். இக் குடும்பத்தினர் 'செந்தமிழின் இராசதானி' என்று மதிக்கத்தக்க மதுரை மாநகருக்கு அருகிலுள்ள பிரதேசத்திலிருந்து வெகு காலத்திற்குமுன் ஆலப்புழையில் குடியேறி இருந்தவர்கள். மொழிப்பற்றிலும் நாட்டுப்பற்றிலும் தமிழராகவே வாழ்ந்தார் பெருமாள் பிள்ளை. மதுரைச் சோமசுந்தரக் கடவுளைக் குலதெய்வமாகக் கருதி வந்தார். அந்தப் பெருமான் அருளால் பிறந்த பிள்ளை என்ற நம்பிக்கையை உள்ளத்திற் கொண்டே பெருமாள் பிள்ளை தம் புதல்வருக்குச் சுந்தரம் என்னும் பெயரைச் சூட்டினார்.

பெருமாள் பிள்ளை தேவாரம் திருவாசகம் முதலிய சமய நூல்களிலும் திருக்குறள் என்ற தமிழர் பொது மறையிலும் ஈடுபாடு உள்ளவர். தமது புதல்வருக்கு இளமையிலேயே தமிழ்ப்பற்று ஏற்படும் முறையில் வீட்டுக் கல்வி கற்பித்து வந்தார். தமிழக் கல்வி கற்பித்ததைக் காட்டிலும் அதிக அளவில் தமிழ்ச் சுவையை ஊட்டி வந்தார் என்று கருதுவது பொருத்தமாகும். எனினும், தமிழ் நாட்டிலேயே பிறந்திருந்தால் தாய் மொழியை இளமையிலேயே நன்கு அனுபவித்துக் கற்றி

ருக்க முடியும் என்ற நினைவு சுந்தரம் பிள்ளையின் உள்ளத்தை விட்டு நீங்கவே இல்லை. இந்த நினைவுதான் எத்தகைய தமிழ்க் காதலாக நாடகத்தின் பாயிரத்திலேயே தன்னை வெளியிட்டுக் கொள்கிறது!

## ஆங்கிலப் பயிற்சியும் ஆசிரியத் தொழிலும்

சுந்தரம் பிள்ளை இளமையிலேயே சிறந்த அறிவுள்ள மாணாக்கர் என்று பெயர் பெற்றார். ஆலப்புழையில் ஜில்லாப் பள்ளிக்கூடத்தில் தொடங்கிய கல்வி திருவனந்தபுரத்திலுள்ள உயர்தரப் பள்ளியில் வளர்ச்சி அடைந்தது. மாணவர்களும் ஆசிரியர்களும் இவரது அறிவுக் கூர்மையை வியந்து பாராட்டி வந்தனர். 1871-ம் ஆண்டில் பிரவேசத் தேர்வில் (அக்காலத்து மெட்றிகுலேஷன் பரீட்சையில்) தேர்ச்சியடைந்தார். 1876-ல் பி. ஏ. பரீட்சையில் தேர்ந்து பட்டம் பெற்றார். இவரது கலாசாலைப் படிப்பு நிகழ்ந்தது திருவனந்தபுரத்து அரசர் கல்லூரியில்.

உடனே அந்தக் கலாசாலையிலேயே ஆசிரியராக நியமிக்கப் பெற்றார். அப்போது இவருக்கு வயது இருபத்தொன்று. திருவாங்கூர் அரசாங்கத்தில் உத்தியோகம் கிடைக்கக் கூடிய வாய்ப்பு இவருக்கு இருந்தபோதிலும், இவர் கல்வித்துறை வாழ்க்கையையே விரும்பி ஆசிரியத் தொழிலை ஏற்றுக்கொண்டு முழு மனத்துடன் தொண்டாற்றி வந்தார்.

ஆசிரியப் பதவியேற்றுக் கொண்ட பின்பும் சுந்தரம் பிள்ளை தம்மை மாணாக்கராகவே கருதி வந்தார். கற்பிக்க வேண்டிய பாடங்களையெல்லாம் முன் கூட்டியே நன்கு கற்று, வேறு துணைநூல்கள் பலவற்றையும் நுட்பமாக ஆராய்ந்து தம் மாணவர்களுக்குப் பாடப் பொருளை அமுதமாக ஊட்டி வந்தார். தமக்கென்று கற்பிக்கும்

ஒருவகை வசீகர முறையையும் வகுத்துக் கொண்டார். மாணவர்களுடன் மாணவராய்ப் பழகி ஐயந்திரிபுகளைப் போக்கி அவர்களுடைய பேரன்பிற்கும் பெரு மதிப்புக்கும் உரியரானர்.

இவர் முதலில் போதித்தது சரித்திர பாடம். அப்போது திருவிதாங்கூரின் வரலாற்றை ஆராயத் தொடங்கினர். கல்வெட்டுகளைச் சோதித்துச் சில சரித்திரச் செய்திகளைக் கட்டுரைகள் வாயிலாக வெளியிட்டார். இவரது பெரு முயற்சியால் சிலாசாசன நிலையம் ஒன்று திருவிதாங்கூரில் நிறுவப்பட்டது. சுந்தரம் பிள்ளையே அந்த நிலையத்திற்கும் கௌரவத் தலைவராக அமர்ந்து ஆராய்ச்சித் தொண்டுகள் ஆற்றி வந்தார்.

சரித்திர ஆர்வம் போல் தத்துவ சாஸ்திர ஆர்வமும் இவரை ஆட்கொண்டது. அரசர் கல்லூரியில் தத்துவ சாஸ்திர ஆசிரியராகவும் பணியாற்றி வந்தார். ஏற்கெனவே சமய நூல்களில் பற்றுள்ளவர்; வேதாந்த விசாரணையிலும் விசேஷ ஈடுபாடு உள்ளவர். மேலை நாட்டுத் தத்துவ விசாரணை முறைகளையும் அறிந்தவர்.

இவர் திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த கோடகநல்லூர்ச் சுந்தர சுவாமிகளைக் குருவாகக் கொண்டு வேதாந்த விசாரணைகள் செய்வதுண்டு. 'இம்மகானை அடிக்கடி சந்தித்துத் தத்துவ விசாரணைகளைச் சுந்தரம் பிள்ளை நிகழ்த்தி வந்தார்' என்று ஆசிரியரின் குடும்பத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த ஆராய்ச்சிப் பேரறிஞர் திரு. வையாபுரிப் பிள்ளை தமது 'தமிழ்ச்சுடர் மணிகள் (முதற் கோவை)' என்ற நூலில் (பக்கம் 197) கூறியுள்ளார்.

கோடகநல்லூர் வேதாந்த குருவின் நினைவுதான் சுந்தர முனிவர் என்ற நாடக பாத்திரத்தின் படைப்புக்கே

காரணமாகும். தமது ஞான குருவைத்தான் நாடகத்தில் வரும் ஜீவக வழுதி என்ற பாண்டிய மன்னனின் குல குருவாக மாறிப் பிறக்கச் செய்து விட்டார் இவர் :

**சுந்தர முனிவன் சிந்துர அடியும்,**
**வாரிசம் போல மலர்ந்த வதனமும்,**
**கருணை அலையெறிந்(து) ஒழுகும் கண்ணும்,**
**பரிவுடன் முகிழ்க்கும் முறுவலும், பால்போல்**
**நரைதரு தலையும், புரையறும் உரையும்,**
**சாந்தமும் தயையும் தங்கிய உடலும்,**
**மாந்தளிர் வாட்டும் மேனி வாணி !**
**எண்ணுந் தோறும், குதித்து**
**நண்ணும் என்னுளம் மன்னிய தவத்தே**

**(அங்கம் 1. களம் 2.)**

*எனறு கதா நாயகியின் வாக்கில் உருவாகும் முனிவரின் சித்திரம் இந்த நாடக ஆசிரியரின் உள்ளத்தைக் கொள்ளைக்கொண்ட கோடகநல்லூர்க் குருமூர்த்தியின் ஞான செளந்தரிய சொரூபம்தான் என ஊகிப்பது தவறாகாது.*

*இத்தகைய ஞான குருவின் நற்சீடர் நல்ல நல்ல தத்துவ நூல்கள் தமிழில் தோன்ற வேண்டும் என்று ஆசைப்பட்டார். அந்த நூல்கள் ஐரோப்பியப் பேரறிஞர்களின் ஆராய்ச்சி மனப்பான்மையைத் தழுவி அமைய வேண்டும் என்றும், எனினும் அவற்றின் உயிர்நிலைக் கருத்துக்கள் நமது வேதாந்த சாரமாகவே இருக்கவேண்டும் என்றும் விரும்பினார். இப் பேராசிரியரின் கொள்கைகள் அத்வைத வேதாந்தத்தின் சாரமாக இருந்தபோதிலும், அவை சைவ வைணவ சித்தாந்தங்களின் சமரச நிலைக்குப் பொருத்தமாகவும் இருந்தன; மேலைநாட்டுத் தத்துவ விசாரணைகளுக்கும் இசைந்ததாக இருந்தன.*

இந்த ஆசிரியரின் 'நூற்றொகை விளக்கம்' தத்துவ சாஸ்திர விஷயமாக இவர், செய்த பல சொற்பொழிவு களிலிருந்து தொகுக்கப்பெற்ற ஒரு புத்தகம்தான். இது 1888-ல் வெளியிடப்பெற்றது. இது வெளிவந்த மூன்ற வது ஆண்டில் மனோனமணீய நாடகம் முதலாவதாக அச் சேறியது.

நவீன விஞ்ஞான முறைக்கு இசைந்தவாறு அறிவுத் துறைகளை இவ்வாசிரியர் நூற்றொகை விளக்கத்தில் பாகுபாடு செய்து தந்திருக்கிறார்; தமது கருத்துக்களை யும் சேர்த்தே அத்தகைய பாகுபாட்டை உருவாக்கியுள் ளார். மனோன்மணீய நாடகத்திலும் விஞ்ஞானக் கருத் துக்கள் ஆசிரியரின் சொந்தக் கருத்துக்களுடன் கலந்து தரப்படுவதை வாசகர்கள் நன்கு அறிவர்.

இத்தகைய பேரறிவாளர் ஆசிரியப் பதவிகளை எவ்வ ளவு திறமையாக வகித்திருக்கவேண்டும்! இவர் திரு நெல்வேலியில் ஆங்கில உயர்நிலைப் பள்ளிக்குத் தலைமை ஆசிரியராகவும் இருந்தார். 1877-ம் ஆண்டில் அந்தப் பதவியில் நியமிக்கப்பெற்றார். அந்த உயர்நிலைப் பள்ளி தான் 'ஹிந்து கலாசாலை' ஆக வளர்ந்திருக்கிறது. சுந்தரம் பிள்ளையின் பெருமுயற்சியே உயர்நிலைப் பள்ளியை இரண்டாவது வகுப்புக் கல்லூரியாக உயர்த்தி இப்போ துள்ள வளர்ச்சி நிலைக்கும் உயிர்நிலையாக உதவியது இவர் திருநெல்வேலியில் இருந்த காலத்திலேதான் கோடகநல்லூர்ச் சுவாமிகளுக்கு மாணவராகி நமது வேதாந்த நுட்பங்களையும் சமய நூல்களின் உட்கருத்துக் களையும் கற்றுக் கேட்டுச் சிந்தித்துத் தெளிவடைந்தார். இக்காலத்திலேயே மனோன்மணீயம் இயற்றவும் தொடங்கி விட்டார்.

திருவனந்தபுரம் அரசர் கல்லூரியில் தத்துவ சாஸ் திர ஆசிரியராக இருந்த டாக்டர் ஹார்வி அப்பதவியி

லிருந்து விலகியபின், அவருடைய மாணுக்கராக இருந்த சுந்தரம் பிள்ளையே 1879-ல் அப்பதவியில் அமர்ந்து, திற மையாக நிர்வகித்து வந்தார். 1880-ம் ஆண்டில்தான் இவர் எம். ஏ. பட்டம் பெற்ருர். தத்துவப் பேராசிரியப் பதவியை வகித்ததுடன் அறிவுத்துறை ஆயுள் மாணவரா கவே இருந்து மேலும் மேலும் தமது அறிவுப் பரப்பை விசாலமாக்கிக் கொண்டார். கற்ருர்: கற்பித்தார். சிறப பாகத் தமிழ இலக்கியப பணியிலும் ஈடுபட்டார். ஒவ்வொரு நாளும் பத்து மணி நேரம இவர் வேலை செய்வதுண்டு.

## குடும்ப நிலையும் வாழ்க்கையும்

ஆசிரியர் சுந்தரம் பிள்ளையின் வாழ்க்கையில் 21-ம் வயது குறிப்பிடத்தக்க முதலாவது 'மைல்'கல் ஆகும். கலாசாலைக்குப் போய்க் கல்வி பயிலும் வேலையை முடித்துக் கொண்டு, மேலும் மேலும் அறிவைப பெருக்கிக் கொள்வ தற்கும், இல்லறம் நடத்துவதற்கும் வசதியாக வருமானம தரத்தக்க பதவியையும் சம்பாதித்துக்கொண்ட வயது இது. இதே வயதில்இவர் திருமணமும் செய்துகொண்டார். சிவகாமி அம்மை என்பது இவர் மனைவியாரின் பெயர்.

திருவனந்தபுரம் அரசர் கல்லூரியில் தத்துவப பேரா சிரியராக அமர்ந்த 1879-ம் ஆண்டு வேறொரு 'மைல்'கல் லாகக் கருதத் தக்கது. இதற்கு ஓராண்டுக்கு முன்பே இவரது அன்னையார் திருநெல்வேலியில் காலமாகி விட் டார். தத்துவ ஆசிரியத் தொழிலுடன் தமிழிலக்கிய வளர்ச்சிக்கு இசைந்த உழைப்பிலும் இவர் மேன்மேலும் ஈடுபட்டார். திருநெல்வேலியில் தொடங்கிய மனோன்மணீ யம் திருவனந்தபுரத்தில் முற்றுப்பெற்றது. திருநெல் வேலியில் ஆட்சி செலுத்திய பாண்டியனின் புதல்வியா கிய மனோன்மணியின் கனக் காதலும் சேர மன்னனாகிய

புருஷோத்தமனைக் கண்ணுற்று முற்றுப் பெற்றது தானே !

1882-ம் ஆண்டின் இறுதியில் திருவிதாங்கோட்டின் அரசரான விசாகம் திருநாள் மகாராஜாவின் வற்புறுத்தலுக்கு இணங்க இவர் அவரது அரண்மனையில் உயர்ந்த வேலையொன்றை ஏற்றுக்கொண்ட போதிலும், பழைய தத்துவப் பேராசிரியப் பதவிக்கே 1885-ல் மறுபடியும் போய்விட்டார். அது முதல் இறுதிக்காலம் வரை அதே பதவியில்தான் அமர்ந்திருந்தார். 1886-ல் இவர் தந்தையான பெருமாள் பிள்ளை காலமானார்.

1884-ம் ஆண்டில் **சைவப் பிரகாச சபை** என்ற ஒரு சபையைத் திருவனந்தபுரத்தில் நிறுவி, அதன் வாயிலாகச் சைவத் தொண்டும் தமிழ்த் தொண்டும் புரிவதில் இவர் சிரத்தை கொண்டிருந்தார். அடுத்த ஆண்டிலேயே அச்சபைக்கு ஒரு கட்டிடமும் கட்டிவைக்க இயன்ற முயற்சிகளை மேற்கொண்டு அந்த நோக்கத்தையும் நிறைவேற்றி வைத்தார்.

மனோன்மணீயம் வெளிவந்த காலத்திலே சுந்தரம் பிள்ளை ஆங்கிலத்திலும் கட்டுரை எழுதித் திருஞானசம்பந்தர் கால ஆராய்ச்சியை மேற்கொண்டு, தமிழிலக்கியப் பரப்பிலே ஒரு 'மைல்'கல்லாக அந்த ஏழாவது நூற்றாண்டுக் காலத்தை நிர்ணயித்திருக்கிறார். பத்துப் பாட்டு என்ற சங்க இலக்கியம் குறித்தும் இவர் தமது ஆங்கிலக் கட்டுரையில் ஆராய்ச்சி செய்திருக்கிறார்.

1894-ல் திருவிதாங்கூர்ப் பழைய மன்னர்களின் கால ஆராய்ச்சி குறித்த கட்டுரைகள் வெளியிடப் பெற்றன. 1895-ல் திருஞானசம்பந்தர் கால ஆராய்ச்சிக் கட்டுரை நூல் வடிவில் வெளியிடப் பெற்றது. லண்டனிலுள்ள சரித்த ஆராய்ச்சிக் கழகம் இவருக்கு ஒரு பட்டம் அளித்துக்

கௌரவித்தது. வேறொரு ஆராய்ச்சிக் கழகம் எம். ஆர். ஏ. எஸ். பட்டத்தால் இவரைக் கௌரவித்தது. 1896-ல் சென்னை அரசாங்கம் ராயபகதூர் என்னும் பட்டத்தை இவருக்குச் சூட்டியது.

1897-ல் தமது 42-ம் ஆண்டிலேயே சுந்தரம் பிள்ளை காலமானார். மேலும்மேலும் அறிவையும் ஆராய்ச்சித்திறனை யும் பெருக்கிக் கொள்வதிலேயே கண்ணும் கருத்துமாய் இருந்தவருக்குத் தமது உடல் நலத்தைப் பேணிக் கொள்வ தற்கும் அவகாசம் இல்லாமற் போய்விட்டது. இவரது மறைவு தமிழிலக்கிய மறுமலர்ச்சியின் தொடர்ந்த வளர்ச் சியை ஒருவாறு தடைப்படுத்திவிட்டது என்றே சொல்ல வேண்டும்.

ஆசிரியர் சுந்தரம் பிள்ளைக்கு ஒரே புதல்வர். நட ராஜப் பிள்ளை என்பது அவர் பெயர். திருவிதாங்கூர்ப் பழைய அரசர்களின் கால ஆராய்ச்சி குறித்து ஆசிரியர் சுந்தரம் பிள்ளை மேற்கொண்டிருந்த பேருழைப்பின் நினை வுக் குறியாக அக்காலத் திருவிதாங்கூர் அரசாங்கம் மாதந் தோறும் இருபது ரூபாய் இக் குடும்பத்திற்கு அளித்து வர ஏற்பாடு செய்தது.

ஆசிரியர் சுந்தரம் பிள்ளையின் நெருங்கிய நண்பர் களில் இசைப் புலவர் திரு. டி. இலக்குமணப் பிள்ளை, சுவாமி வேதாசலம் என்ற மறைமலையடிகள், திரு. வி. பி. சுப்பிரமணிய முதலியார் முதலான அறிஞர்களைக் குறிப் பிடலாம். இவருடைய நண்பர்களில் சிலர் இவரைக் குரு வாகவே மதித்து, இவரது ஆராய்ச்சிக் கொள்கைகளைப் பொன்போல் போற்றி வந்தார்கள்.

## தமிழ்த் தொண்டு

திரு. நடராசப் பிள்ளை என்ற தமிழன்பரைத் தம் அருமைப் புதல்வராகக் கொண்டு மகிழ்ந்திருந்த ஆசிரியர்

சுந்தரம் பிள்ளையின் ஞானப் புதல்வியாக மனோன்மணீய நாடகத்தின் கதாநாயகியான மனோன்மணியைக் குறிப்பிடலாம். தமிழ்த்தொண்டை ஒரு பெருந்தவமாகக் கொண்டு இவர் படைத்து விட்டிருக்கும் மனோன்மணி இவரது தவப் புதல்விதான். சுந்தர முனிவரிடம் மனோன்மணிக்கு உள்ள பக்தியைத்தான் பாருங்கள்.

நாடகத்தில் வரும் கதாபாத்திரமாகிய நடராசனின் பெயரைத் தமது அருமைப் புதல்வருக்கு இந்த ஆசிரியர் இட்டு வழங்கியது கூர்ந்து நோக்கத் தக்கது. இந்த நாடகம் இவரது வாழ்க்கையில் மலர்ச்சி பெற்ற மலர்தானே.

தமிழில் நாடக நூல் இல்லையே என்று இவர் கருதி உழைத்து வெளியிட்டிருக்கும் மனோன்மணீயம் என்ற இந்த நாடக நூலைக் காட்டிலும் சிறந்த இலக்கிய நாடகம் நாளது வரை வெளிவரவில்லை. இந்த நூலைப் பற்றிய ஆய்வுரை (விமரசனம்) ஒன்று முதல் முதல் **கமலாம்பாள்** என்ற நவீனத்தின் ஆசிரியராகிய இராஜமையரால் ஆங்கில மொழியில் கிறிஸ்தியக் கலாசாலைப் பத்திரிகையில் எழுதப்பெற்றது.

இந்த நாடகம் நடிப்பதற்காக எழுதப் பெறவில்லை; கற்று அனுபவிக்கவே இயற்றப் பெற்றிருக்கிறது. தாய் மொழிக்கு இசைந்ததொரு பணி செய்யவேண்டும் என்ற ஆசை பேராசையாகித் தூண்டவே இவர் இந்நாடகத்தைப் பண்டிதர்களுக்கும் முற்போக்காளர்களுக்கும் ஒருங்கே ரஞ்சகமாக அமைக்கத் துணிந்தார். இதை நமது இலக்கிய மறுமலர்ச்சி நெறியில் சிறந்த முதலாவது 'மைல்' கல் என்று குறிப்பிடலாம்.

பழைய இலக்கிய முறைகளுடன் புதிய முறைகளையும் இசைவிக்க வேண்டும் என்பதும், இப்புது முறைகள் மேலை நாட்டுப் பேரறிஞர்களின் இலக்கியப் போக்கைத்

தழுவி அமைய வேண்டும் என்பதும இந்த ஆசிரியரின் ஒரு பெரும கொளகை. புதிய விஞ்ஞானக் கருத்துக்களு டன பழைய வேதாந்தக் கொளகைகளை இசைத்தும, தெயவ பகதியுடன தேச பகதியை இணைத்தும, சங்க காலத்துக் காதல் நெறியை ஒரு வகையில் லட்சியக் காத லாகக காட்டியும் இந்த ஆசிரியர் இந்த நாடக நூலை வள ரும தமிழின் இனறியமையாத ஒரு நல்லணியாக உரு வாக்கியுளளார்.

தமிழச சுவை நாடகச் சுவை கவிச் சுவை என்ற மூவகைச சுவையும கலந்து இலக்கிய இன்பம் ஊட்டும முறையில் இந்த நாடகம் அமைந்திருபபதால் இது ஒரு சிறந்த தமிழிலககியமாக மதிககப் பெறுகின்றது. இதில் அமைந்திருக்கும 'சிவகாமி சரிதம்' ஒரு தனிப் பெருஞ சிறபபு வாயந்தது.

ஆஙகிலக் கருத்துச செல்வம அழியாத தமிழ் உருவம பெற்று இந்நூலில் இடம் பிடித்திருப்பதால், தமிழும ஆங்கிலமும கலந்து பெற்ற அருமபெறல் மகவு என்று இந்நாடகத்தைச் சொல்லலாம எனபர் ஆராயசசி அறிஞர் திரு. வையாபுரிப் பிள்ளை.

ஆசிரியரது 'நூற்றொகை விளக்க'மும ஒரு சிறந்த தமிழப பணிதான. இந்த நூலில் ஆசிரியர் சுந்தரம பிளளை ஆஙகில விஞ்ஞானச் சொற்களுககு உரிய மொழி பெயர்ப்புககளைத் தர முயன்றிருக்கிறார். கலைச் சொல் ஆக்கம் குறித்து இந்நாளில் முயற்சி செயது கொண்டி ருபபவர்கள இத்துறையில் ஆசிரியர் சுந்தரம் பிள்ளையின் முயற்சிகளையும் போக்கையும இயன்ற அளவிற்குப் பின் பற்றுவது நலமாகும்.

ஆஙகிலக் கட்டுரைகள் வாயிலாக இவர் செய்திருக் கும் பணியையும் மறக்க முடியாது. திருமுருகாற்றுப்

படை, நெடுநெல் வாடை, மதுரைக் காஞ்சி ஆகிய முப் மணிகளை இவர் ஆங்கிலத்தில் சுவைபட மொழிபெயர்த் திருக்கிறார். தமிழிலக்கிய சரித வழியில் சிறசில 'மைல்' கற்களை நாட்டியதும் இவரது சிறந்த தமிழ்ப் பணிகளில் ஒன்றாக மதிப்பிடத் தக்கதுதான.

42 வயதிறகுள இந்த ஆசிரியர் செய்திருக்கும் தமிழ்ப் பெரும்பணி அதிசயமானது. தமது ஆசிரியத் தொழி லுக்குச் சற்றும் குறைவு ஏறபடாமலேயே இவர் தமிழ்ப் பணிகள் புரிந்து வந்தார் என்பதை நினைத்துப் பார்க்கும் போது நமது அதிசய உணர்ச்சி அதிகரிக்கிறது.

தமிழிலக்கிய வரலாறு ஒன்றை விரிவான முறை யில் எழுதி வெளியிட வேண்டும் என்ற ஆசையும் இவ ருக்கு இருந்தது. 'இதறகுரிய கருவிகளைச் சேகரிப்பதிலும், ஆங்கிலத்திலுள்ள பல இலக்கிய வரலாறுகளைக் கற்பதி லும், பற்பல தமிழிலக்கியங்களின் காலங்களை வரையறுத் தற்குரிய சான்றுகளைத் தேடித் தொகுப்பதிலும் இவர் முயன்றவண்ணமாயிருந்தனர்' என்றும், 'தாம் கடைசியாய் எடுத்துக் கொண்ட இலக்கிய வரலாறு முடியுமுன் இவர் நோய்வாய்ப் பட்டனர்' என்றும் திரு. வையாபுரிப் பிள்ளை 'தமிழ்ச் சுடர்மணிகள்' என்ற தமது நூலில் 'ஆசிரியர் சுந் தரம் பிள்ளை' என்ற தலைப்பில் கூறியுள்ளார்.

தாம் மேற்கொண்ட இறுதிப் பெருமுயற்சி முடிவ தற்கு முன்பே சுந்தரம் பிள்ளை காலஞ் சென்றார். 'உதக மண்டலம் (Ooty) சென்று சில காலம் வசித்து வர எண் ணினார். செல்லும் வழியில் திருக்குற்றாலத்தில் சில நாட்கள் தங்கினார். அங்கே பிளவை கண்டது. தமது இருப்பிடமாகிய திருவனந்தபுரத்திற்கு மீண்டும் சென்றார். ஏற்கெனவே நீரிழிவு நோயுள்ளவராதலாலே, பிளவைக்கு ரண சிகிச்சை செய்தது அபாயகரமாய் முடிந்தது'. (திரு. வையாபுரி பிள்ளையின் 'தமிழ்ச் சுடர்மணிகள்')

இப்பெரியாரின் நினைவுக்குறி ஒன்றும் நாட்டிலோ, பல்கலைக் கழகங்களிலோ அமைக்கப் பெறவில்லை. ஆனால் இவரது மனோன்மணீயம் அழியாததொரு நினைவுச் சின்னமாகவே திகழுகின்றது. சுந்தரம் பிள்ளையின் நாடகப் பண்புடன் வேறு நற்பண்புகளுக்கும் இந்த நாடகநூல் சான்று தருகின்றது.

தமது தந்தையாரிடம் இவருக்குள்ள பக்தி மனோன்மணிக்குத் தந்தையான ஜீவக வழுதியிடம் உள்ள பக்தியை நினைவூட்டுகிறது. இவரது விஞ்ஞானக் காதல் நடராஜன் என்ற கதாபாத்திரத்தின் விஞ்ஞானக் காதலில் பிரதிபலிக்கிறது. கருணாகரர், நிஷ்டாபரர் என்ற சுந்தர முனிவரின் இரு சீடர்களின் தத்துவ வாதங்களில் இந்த ஆசிரியரின் வேதாந்த விசாரணை பிரதிபலிக்கிறது.



# மனோன்மணீயமும் ஆசிரியரும்

## மறுமலர்ச்சியின் வித்து

தமிழின் மறுமலர்ச்சிக்கு மூலகாரணம் பாரதியின புரட்சிக் கவிதைதான் என்று இந்நாளில் சாதாரணமாய்க் கூறுவதுண்டு. பாரதியாரின் கவிதையும் பழைய தமிழ்க் கவிதையின் பரம்பரையிலே ஊறிவந்ததுதான. முக்கிய மாக இராமலிங்கசுவாமி பாரதியார் கவிதைக்கு ஒருவாறு வழிகாட்டியவர் எனலாம். எனினும், இராமலிங்க சுவாமி யின் கவிதையை மறுமலர்ச்சித் தமிழ் என்று சொல்ல முடியாது.

சாதிசமய பேதங்கள ஒழிய வேண்டுமென்றும, 'கண்மூடிப பழக்கமெல்லாம மண் மூடிப' போக வேண்டு மென்றும, இராமலிஙக சுவாமி புரட்சிகரமான கொளகை களைப பாடியிருந்தபோதிலும, அவர்வரையில் வாழையடி வாழையாக வந்த பழைய தமிழக் கவிகளில் கடைசியான வர் இராமலிஙகர் என்றுதான் சொல்ல வேண்டும. பாரதியாருக்கு முன எவரையாவது புதுமைக் கவி என்று குறிப்பிட வேண்டுமெனறால், மனோனமணீய ஆசிரியர் சுந்தரம்பிள்ளையைத்தான அப்படிச் செல்லமுடியும.

## புதிய கருத்துக்கள், புதிய நடை

மனோன்மணீயத்தில் எத்தனையோ புதுமைக கருத் துக்களைப பார்க்கலாம; ஆஙகில இலக்கியக் கருத்துக் களையும விஞ்ஞானக் கருத்துக்களையும பார்க்கலாம். 'ஸைகாலஜி' என்ற புதிய உளநூற் கருத்துக்களையும பார்க்கலாம்.

எத்தனை பெட்டியுள்
　　வைத்துநாம் பூட்டினும்,
வானுள மின்னொளி
　　'வடக்கு நோக்கி'யைத்
தான் அசைத்(து) ஆட்டும்
　　தன்மைநீ கண்டுளை ?
போதம் கரைந்து, மேல்
　　பொங்கிடும் அன்பைப்
பூத யாக்கையோ
　　தடுத்திடும் ? புகலாய்

*என்று இராமலிங்க சுவாமி போன்ற ஒரு கவிஞர் பாடியிருக்க முடியுமா? ஆங்கிலக் கல்வியிலும் கலைகளிலும் ஊறிப்போன ஆசிரியர் சுந்தரம் பிள்ளையின் தனிச் சிறப்பு வாய்ந்த வாக்கு இது.*

*ஆங்கிலக் கவி மரபிலும் ஆங்கில நாடக மரபிலும் ஈடுபட்ட இவருள்ளம் ஆங்கில நடையின் போக்கையும் தமிழிலே கொண்டுவந்து சேர்த்திருக்கிறது. இதற்கு ஓர் உதாரணம் :*

இருசரம் இன்றி
　　எப்போ ரிடையும்
ஏகார் மதியோர் ;
　　இதில்வரு கே(டு)என் ?

*இப்பகுதி தமிழ் ஒன்றே தெரிந்த பண்டிதர்களுக்குச் சரியாக விளங்குவதில்லை. (இருசரம்) என்பது வில்லம்பு சொல்லம்பு என்ற இரண்டையும் குறிக்கும் என்று உரை எழுதினார் நவீன உரையாசிரியர்களில் தலைசிறந்து விளங்கிய பண்டிதர் சடகோபராமானுஜாசாரியர். ஆங்கிலப் பயிற்சியுள்ளவர்களுக்கோ* 'He has two strings to his bow' *என்ற ஆங்கில வாக்கியம் ஞாபகத்திற்கு வந்துவிடும்.*

ஓர் உபாயம் பயன்படாவிட்டாலும் வேறொரு உபாயத்தில் காரியசித்தி செய்துகொள்ள உத்தேசிக்கிறான் என்பது கருத்து. ஆனால் இப்படித் தமிழரை மயங்கவைக்கும் ஆங்கில மரபை ஆபூர்வமாகத்தான ஆசிரியர் கையாளுகிறார்.

பொதுவாக, இந்த ஆசிரியரின் புதுமைத் தமிழ் ஆங்கில நடையையும தனதாககிக் கொள்ளுகிறது; புதுமைகளான ஆங்கில நயங்களையும் பொருளழகுகளையும் தமிழாககித்தான உபயோகித்துக்கொளகிறது.

**ஊக்கமே பாக்கியம் ;**
**உணர்விலார் வேறு**
**பாக்கியம் ஊழ்எனப்**
**பகர்வ தெலாம்பாழ்**

என்று விதியைப் பழிக்கும புதுமைக் கருத்து எவ்வளவு இயறகையாகத் தமிழாகிவிடுகிறது !

இன்னும ஓர் உதாரணம பார்க்கலாம. கிரகங்களின் செயலென்றும், நட்சத்திரங்களின் செயலென்றும் சோதிட சாஸதிரிகள செல்லுகிறார்களல்லவா? அந்த நம்பிக்கையைக கண்டிககும செயயுட் பகுதி ஆங்கிலக் கருத்துக்களைத் தழுவியபோதிலும், எப்படி அருமையான தமிழாகிவிடுகிறது பாருஙகள :

**வான் காடதனில்**
**வறிதே சுழலும்**
**மீன்காள் ! வேறும்**
**உளதோ விளம்பீர் ?**
**மதியிலா மாக்கள்**
**விதியென நும்மேல்**
**சுமத்தும் சுமையும்,**
**தூற்றும் சும்மையும்,**

**உமக்கிடு பெயரும்**
**உருவமும் தொழிலும்,**
**அமைக்கும் குணமும்,**
**அதில்வரு வாதமும்**
**யுக்தியும் ஊகமும்**
**சக்தியும் பகைமையும்**
**ஒன்றையும் நீவிர்**
**உணரீர் !**

## பாரதிக்கு முன்னமே

*சோதிட நிந்தனை போன்ற புதுமைக் கொள்கைகளில் ஆசிரியர் சுந்தரம்பிள்ளை பாரதியாருக்கும் ஒரு வழிகாட்டி தான.*

**சோதிடம் தனை இகழ்**

*என்பது போன்ற புதிய ஆத்திசூடி வாக்கியங்களில் சில, மனோன்மணீயக் கருத்துககளின் எதிரொலிகளோ என்று சொல்லும்படி இருக்கின்றன.*

*தேசபக்திக் கருத்துகள் சிலவற்றிலுமகூட மனோன் மணீய ஆசிரியர் பாரதியாருக்கு வழிகாட்டினாரோ என்று கூடச் சிலர் வாதிக்கும்படி அத்தகைய கருத்துக்களையும் இந்த நாடக நூலில் காணலாம.*

*ஆசிரியர் சுந்தரம பிள்ளையும் சுதந்திரத்தை உயிராக வற்புறுத்தியிருக்கிறார். உரிமைகளுககாகப பாடுபட வேண்டும் என்கிறார். தேசாபிமானமும், அக்கிரமத்தைக் கண்டு கொதித்தெழும் நெஞசும இன்றியமையாதன என் கிறார். பாஷாபிமானமும் தேசாபிமானமுமே பொருளாக மதிக்கத் தக்கவை என்கிறார்.*

**அந்தணர் வளர்க்கும் செந்தழல் தன்னிலும்**
**நாட்டபிமானம் உள் மூட்டிய சினத்தீ**
**அன்றோ வானோர்க்கு என்றுமே உவப்பு ?**

என்ற அடிகளில் பாரதியாரின் தேச பக்தி வெறியையும் வீர வெறியையும் கூடப் பார்க்கிறோமல்லவா !

பாரதிக்கு முன்னமே இத்தகைய புதுமைத் தமிழ நூல் ஒன்று தோன்றியது தமிழர்களின் பாக்கியம எனறே சொல்லவேண்டும். இந்நூலைத தமிழ் இலக்கிய மறு மலர்ச்சிக்கு வித்தென்றும, பாரதியாரையும கவிமணி தேசிக விநாயகம பிளளையையும இம மறுமலர்ச்சியின ஆரமப விளைவு என்றும கருதலாம்.

எனவே, தமிழ மறுமலர்சசியில் சிரத்தையுள்ளவாகள் எல்லாம மனோன்மணீயத்தை நனறுகக் கறகவேண்டும. மறுமலர்சசியின் முதலாவது முயறசியே இவ்வளவு தூரம வெற்றியடைந்திருபபது பாராட்டத்தக்கதல்லவா ?

## தமிழில் ஒரு புதிய படைப்பு

இந்த நாடகம் 1891-ம ஆணடில் அதாவது, பாரதி யார் பள்ளிச் சிறுவராகவும விளையாட்டுப் பிளளையாகவும இருந்த காலததிலேயே அச்சேறி உலாவத் தொடஙகி விட்டது. இது ஷேக்ஸபியர் நாடகஙகளின் ரகத் தைதச சேர்ந்தது. லிடடன பிரபு செயயுளாக ஆக்கி யிருந்த 'இரகசிய வழி' (The Secret Way) என்னும ஆங கிலக் கதையை முதல் நூலாகக கொண்டது. எனினும மனோனமணீயத்தைதத தமிழர்களா ஒரு புதிய கலா சிருஷடி யாகிய முதல் நூலாகவே மதிககுமபடி வெற்றி பெறறிருக் கிறார் ஆசிரியர். லிட்டன பிரபுவின் கதையை ஒரு தமிழக் கதையாகவே உருமாறிப பிறக்கும்படி இவர் செய்து விட்டார். தமிழச சரித்திர சம்பந்தமான ஒரு கதையோ என்று கூடப் பிரமிக்குமாறு செய்திருக்கிறார்.

நாடகத்தில் வரும் பிரதான பாத்திரங்களை யெல்லாம லிட்டனின் ஆஙகிலக்கதையிலும் காண்கிறோம. கதா நாயகியான மனோன்மணி, அவள் தந்தையான ஜீவகன்,

இவர்களுடைய ஞானத் தந்தையான—அதாவது குருவான—சுந்தர முனிவர், மந்திரியான குடிலன், சேரமன்னனாகிய புருஷோத்தமன் இவர்கள் எல்லாம் இரவல் பாத்திரங்களே. மனோன்மணிய சுந்தர முனிவருக்குப் பக்தி அதிகம். குடிலனுக்கு வஞ்சனை அதிகம். அவ்வளவுதான்.

கதாநாயகியும் அவளுடைய தந்தையும் நாடக பாத்திரங்களாவதற்கு இன்றியமையாத மாறுதல்களையே பெற்றிருக்கிறார்கள். மற்றபடி, கதையின் முக்கிய அம்சங்களில் கூட இந்த நாடகம் முதல் நூலாகிய ஆங்கிலக் கதையின் போக்கைத் தழுவியே செல்லுகிறது. கதையை நாடகமாக்குவதற்காகக் கூட்டியும் குறைத்தும் ஆசிரியர் கையாண்டிருக்கும் உபாயங்களோ, ஷேக்ஸ்பியரைத் தழுவிய ஒரு புதுமுறை.

எனினும், கதையைத் தமிழ்க் கதையாக்கி நாடகத்தையும் தமிழ் நாடகமாக்கிவிட்ட அறிவுத் திறமையை யாரே பாராட்டாமலிருக்க முடியும்?

உயர்ந்த லட்சியங்களையும் வேதாந்தக் கொள்கைகளையும் தமிழுருள்ளத்திறந்து அழகுமாறும்படி அமைத்திருக்கும் ரீதியும் பாராட்டத்தக்கது, எப்படிப் பார்த்தாலும் இந்த நாடகத்தைத் தமிழ் இலக்கியத்தில் ஒரு புதிய சிருஷ்டி என்றும். தமிழ் மறுமலர்ச்சிக்கு வித்து என்றும் தைரியமாகச் சொல்லலாம்.

## பழமைக்கும் புதுமைக்கும் பாலம்

மனோன்மணீயத்தைத் தமிழின் மறுமலர்ச்சிக்கு வித்தாக மதிப்பிடுவதோடு, பழமைக்கும் புதுமைக்கும் ஒரு பாலமாகவும் கருதலாம். பாயிரத்துடனும் கடவுள் வணக்கத்துடனும் இந்த நாடகம் ஆரம்பமாவதே பழமையோடு உள்ள தொடர்பை ஒருவாறு வற்புறுத்திக் காட்டுகிறது.

**வேத சிகையும் விரிகலையும் மெய்யன்பர்**
**போதமும் போய்த்தீண்டாப் பூரணமே !-பேதமற**
**வந்தெனைநீ கூடுங்கால் வாழ்த்துவர் யார்? வாராக்கால்**
**சிந்தனையான் செய்ம்முறைஎன் ? செப்பு**

என்று கடவுள் வணக்கம் செய்து கொண்டு ஷேக்ஸ்பியர் நாடகங்களைப் பின்பற்றி எழுந்த இந்நாடகத்தைத் தொடங்குவது சற்று விசித்திரமாகவே இருக்கிறதல்லவா?

இத்தகைய வேதாந்தப் போக்கு நாடகத்தின் ஒவ்வொரு அங்க முடிவிலும் தன்னை வெளியிட்டுக் கொள்ளுவதைக் காண்கிறோம். இந்த நாடகக் கதையைத் தத்துவ சோதனை செய்கிறவர்களுக்கும் அநுகூலமாய் அமைந்திருப்பதாக ஆசிரியரே தமது முகவுரையில் ஒப்புக்கொண்டிருக்கிறார்.

கடவுள் வணக்கத்தை அடுத்துத் தமிழ் வணக்கமும் செய்து கொள்கிறார் ஆசிரியர். தமிழைத் தெய்வமாகக் வழிபடுவதும் ஒரு பழைய சம்பிரதாயம்தான்.

**மறைமுதற் கிளந்த வாயான்**
**மதிமுகிழ் முடித்த வேணி**
**இறைவர்தம் பெயரை நாட்டி**
**இலக்கணம் செய்யப் பெற்றே**
**அறைகடல் வரைப்பில் பாடை**
**அனைத்தும் வென்(று), ஆரியத்தோ(டு)**
**உறழதரு தமிழ்த்தெய்வத்தை**
**உள்நினைந்(து) ஏத்தல் செய்வாம்**

என்பது சிவநேசர் ஒருவரது வாக்கு.

கடலாடை உடுத்த நில மடந்தையின் வதனம் போல விளங்குகிறதாம் பரதகண்டம். அந்த வதனத்திலே பிறை போன்ற நெற்றியாகப் பிரகாசிக்கிறதாம் தட்சிணப் பிரதே

சம. அந்த நெற்றியிலே இட்ட திலகம போலத் திகழுகிற தாம தமிழ்நாடு. தமிழகம என்ற திலகத்தின வாசனை ஆன தமிழ்மொழி என்கிறார் ஆசிரியர்.

இத்தமிழ் மொழியை,

**எத்திசையும் புகழ் மணக்க**
**இருந்தபெருந் தமிழணங்கே!**

என்று இவர் உளங்குளிர வாய்குளிர அழைக்கிறார்.

இவ்வளவு நாட்டுப்பற்றுடனும் மொழிப்பற்றுடனும் தமிழத் தெய்வத்தை வாழ்த்தும வாழ்த்து இது:

**பல் உயிரும் பலஉலகும்**
**படைத்தளித்துத் துடைக்கினும் ஓர்**
**எல்லையறு பரம் பொருள்முன்**
**இருந்தபடி இருப்பதுபோல்,**
**கன்னடமும் களிதெலுங்கும்**
**கவின் மலையாளமும் துளுவும்**
**உன்உதரத்(து) உதித்தெழுந்தே**
**ஒன்றுபல ஆயிடினும்,**
**ஆரியம் போல் உலகவழக்(கு)**
**அழிந்தொழிந்து சிதையாஉன்**
**சீர்இளமைத் திறம்வியந்து**
**செயல் மறந்து வாழ்த்துதுமே.**

கன்னடம முதலிய தென்னகமொழிகளுக்குத் தமிழே தாய் என்று கூறுகிறவர் வங்காளி ஹிந்தி முதலிய ஆரிய மொழிகளைப் பெற்றெடுத்த வடமொழிபோல் நம் தாய் மொழி இறந்து போய்விடவில்லை என்கிறார். பல உலகங் களையும உயிர்களையும படைத்துக் காத்து அழிக்கும பரம் பொருள போல் இன்றும் என்றும இளமையாகவே இருக்கிறாளாம் தமிழத்தாய்.

உலகிலுள்ள மற்ற மொழிகளை வென்றுவிட்ட போதி லும், ஆரியத்தோடு உறழ்தரு தமிழ்த் தெய்வம் 'என்றும்' 'இரு மொழியும் நிகர்' என்றுமே பாடியிருக்கிறார் பழைய சிவநேசர். அத்தகைய தமிழ்க் காதலையும் வென்று விடு கிறது ஆசிரியர் சுந்தரம் பிள்ளையின் தமிழ்க் காதல்.

ஆனால் 'பரம்பொருள் முன் இருந்தபடி இருப்பது போல்' தமிழும் வளர்ச்சி பெறாமல் இருந்தபடி இருக்கிறது என்றோ, இருந்தபடியே இருந்துவிட வேண்டும் என்றோ ஆசிரியர் கருதவில்லை. 'பூர்வார்ஜிதச் சிறப்பெல்லாம் பூர்விகர்கள் சிறப்பு. அந்த அந்தத் தலைமுறையார்களுக்கு அவரவர்கள் தாமே ஈட்டிய பொருளளவும் சிறப்பே யொழிய வேறில்லை . . . . அருமையாகிய பூர்வ நூல் களைப் பாதுகாத்துப் பயின்று வருதலாகிய முதற் கடமை யோடு, அவ்வழியே முயன்று அந்த அந்தக் கால நிலைக்கு ஏற்றவாறு புது நூல்களை இயற்ற முயலுதல் தமிழ் நாடு என்னும் உயர்குடியில் பிறக்கும் ஒவ்வொரு தலைமுறை யாருக்கும் உரித்தான இரண்டாம் கடமையாய் ஏற்படுகின் றது' என்பது இவர் கொள்கை. இக்கொள்கையோடுதான் இவரே இந்த நாடகம் அமைக்கத் துணிந்தார்.

திரு சி. வை. தாமோதரம் பிள்ளை, டாக்டர் உ. வே. சாமிநாதையர், திரு ஆறுமுக நாவலர் போன்றவர்களைத் தமிழ்த் தெய்வத்தின் பழைய நகைகளைப் புதுப்பித்த வர்கள் என்று ஆசிரியர் குறிப்பிடுகிறார். புதிய புதிய நூல் களை இயற்றித் தமிழை அழகு செய்கிறவர்களைத் தமிழ்த் தெய்வத்திற்குப் புதிய அணிகள் செய்து போடுகிறவர்கள் என்கிறார். இப் புதியவர்களில் இவரும் ஒருவர்.

'நான் அப்படிப் பிரமாதமாக நகை ஒன்றும் என் அருமைத் தமிழ்த் தாய்க்குச் செய்து போடவில்லை; இந்த நாடகத்தைத் தன் காலின் சிறு விரலுக்கு ஒரு "மிஞ்சி"

யாகத் தமிழன்னை ஏற்றுக்கொண்டாலும் அதுவே போதும்!' என்று அவை யடக்கமாகச் சொல்லுகிறார் ஆசிரியர். இந்தப் பணிவையும் அன்பையும் மட்டுமல்ல, இந்தப் பணியையும் தமிழன்னை ஒரு நல்ல புதிய ஆபரண மாக மனமுவந்து ஏற்றுக் கொண்டாள் என்பது உறுதி.

இவர் தம் புதுப் பணியைக் குறிக்கும்போது 'நாற் கவிப் புதுப் பணி' என்றுதான் சொல்லுகிறார். பழைய மரபிலே வந்த ஆசு, மதுரம், சித்திரம், விஸ்தாரம் என்ற நாலவகைக் கவிகளோடு கூடிய புதுப் பணி என்று இவர் கூறுவதிலிருந்து, இவருடைய புதுமை வேறு, பாரதி யாரின் புத்தப் புதுமை வேறு, என்று ஊகித்துக்கொள் ளலாமல்லவா?

இந்த நாடகம் ஏறக்குறைய வாசக நடைக்குச் சமமான பாவால் பெரும்பாலும் ஆக்கப்பட்டிருந்தாலும், இதுவும் பழைய அகவற்பாவே. பாரதியார் போல் புதிய சந்தம், நாடோடி மெட்டு, முதலியவற்றை இவர் கையாளவில்லை. இராமலிங்க சுவாமியைப் போல் கும்மி கண்ணி முதலிய மெட்டுக்களையும் கையாளவில்லை. புதிய புதிய கருத்துக் களையும் பழைய பாவகையிலேயே அமைத்திருக்கிறார்.

இவற்றையெல்லாம் ஆலோசிக்கும்போது மனோன் மணீயத்தைப் பழமைக்கும் புதுமைக்கும் பாலமாகச் சொல் வது பொருத்தம் என்றே தோன்றுகிறது.



# தமிழ்க் காதலும் ஆராய்ச்சிக் காதலும்

ஊர்வலத்திலே இராமனைப் பார்த்த மிதிலைப் பெண்கள், 'ஆஹா, காதல் என்பதை உருவம் இல்லாத ஒரு பண்பு என்றல்லவா நினைத்திருந்தோம்! அதற்கும் இப்படி ஓர் உருவம் உண்டா? ஓஹோ, அந்த வடிவந்தானோ இந்த ராமன்?' என்றெல்லாம் வியந்தார்களாம். அது போல, 'தமிழ்க் காதலின் உருவந்தானோ நமது மனோன்மணீய ஆசிரியர்!' என்று வியந்து பாராட்டும்படி இருக்கிறது இப் பேராசிரியரின் தாய்மொழிப் பற்று.

அப்படி யில்லாவிட்டால் பின்வருமாறு பாடி யிருப்பாரா?

**சதுமறை ஆரியம் வருமுன்**
**சகமுழுதும் நினதாயின்,**
**முதுமொழிநீ அநாதியென**
**மொழிகுவதும் வியப்பாமே!**

என்பதை ஆராய்ச்சி அறிஞரின் வாக்கு என்றுமட்டும் கருத இயலுமா?

இதற்கு ஆசிரியரே பின்வருமாறு ஒரு குறிப்பும் எழுதினார்: 'ஆரிய பாஷை பிரபலப்படுமுன் தமிழ் போன்ற ஒரு மூல பாஷை ஐரோப்பாவிலும் ஆசியாக் கண்டத்திலும் பரவியிருந்தது என்பது பல பாஷைகளையும் கற்றுணர்ந்த ஆங்கிலேய பண்டிதர்களின் துணிபு.' இக் கொள்கையை அப்படியே இந் நாளில் மொழிநூற் புலவர்கள் ஒப்புக்கொள்வார்கள் என்று தோன்றவில்லை.

ஆனால் இன்றும் வியந்து பாராட்டுகிறோம் ஆசிரியரின் அபாரமான தமிழ்க் காதலை.

இத்தகைய பாட்டைத் 'தாழிசை' என்று சொல்வதுண்டு. பன்னிரண்டு தாழிசைகளில் பொங்கி வருகிறது இந்த ஆசிரியரின் பாஷாபிமானம, நூல் முகபபிலேயே 'உலகத்திலேயே தமிழதான் ஆதி பாஷை, அநாதி பாஷை, மூல பாஷை' என்று சொல்வதோடு திருபதியடையாமல், இம் மொழியை அறிவுத் தெய்வமாகிய கலைமகளின் வலது கண்ணாகவும் கறபனை செயகிறார் நமது ஆசிரியா.

## காதலா ? சண்டையா ?

(அன்புப போர்)

'கலைமகள உத்தமமான கிழக்குத் திசையை நோக்கிக் கொண்டிருக்கிறாளாம. அபபடியானால் வடமொழி அவளது வலது விழியா? தென மொழியாகிய தமிழ மொழிதான் வலது விழியா? உஙகளுக்குக் கிழககு மேறகுத் தெரியுமா?' என்று பரிகசிக்கிறார், வடமொழியே தமிழ மொழியைக் காட்டிலும் சிறந்தது என்று சொல்லுகிறவர்களை. இத்தகைய மொழிச் சண்டை இந்த நாளிலும ஓய்ந்த பாடில்லையே! ஆனால் இந்நாளில் மனோன்மணீய ஆசிரியரின் தமிழ்க் காதலைத்தான் காணவில்லை.

தேவார திருவாசகங்களைக் காட்டிலும வேதமே சிறந்தது என்று சொல்லுகிறவர்கள்மீதும ஒரு சொல்லம்பு தொடுக்கிறார் நமது ஆசிரியர்.

**மனம் கரைத்து மலம் கெடுக்கும்**
**வாசகத்தில் மாண்டோர்கள்,**
**கனம் சடைஎன்(று) உருவேற்றிக்**
**கண்மூடிக் கதறுவரோ ?**

என்பது இவர் வாக்கு.

*'திருவாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார்' என்று தமிழர்கள் அபிமானிக்கும் தமிழ் வேதம் திருவாசகம். இத் தமிழ் வேதத்திற்கும் வடமொழி வேதத்திற்கும் போட்டியோ பூசலோ வேண்டியதில்லை. எனினும், ஒருவகைப் போட்டி மனோன்மணீய காலத்துக்கு முன்பும் தமிழ் நாட்டிலே இருந்தது எனக் கருதலாம். கி. பி. 17-ம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒரு சிவநேசர் பின்வருமாறு பாடியிருக்கிறார்:*

**வேதம் ஓதின்**
**விழிநீர் பெருக்கி**
**நெஞ்சம்நெக்(கு) உருகி**
**நிற்பவர்க் காண்கிலேம் !**
**திருவா சகம் இங்(கு)**
**ஒருகால் ஓதின்,**
**கருங்கல் மனமும்**
**கரைந்(து)உகக் கண்கள்**
**தொடுமணற் கேணியில்**
**சுரந்துநீர் பாய,**
**மெய்ம் மயிர் பொடிப்ப**
**விதிர்விதிர்ப்(பு) எய்தி**
**அன்பர் ஆகுநர்**
**அன்றி,—**
**மன்பதை உலகில்**
**மற்றையர் இலரே !**

*இந்தப் பழம் புலவரையும் மிஞ்சிவிட்டார் ஆசிரியர் சுந்தரம் பிள்ளை தமது தமிழ்க்காதலிலும், திருவாசகக் காதலிலும். இதனால் அந்தப் புலவருக்காவது, இந்த ஆசிரியருக்காவது வடமொழி வெறுப்பு உண்டு என்று அர்த்தமில்லை. வடமொழியில் உள்ள சமய நூல்களின் பொருளையும் இலக்கியக் கருத்துக்களையும் இருவரும் தழுவியவர்களே.*

மனோன்மணீய நாடக நடையும் இந்த ஆசிரியருக்கு வடமொழித் துவேஷம் கிடையாது என்பதற்கு ஒரு சாட்சி. இவரது கம்பீரமான தமிழ் நடைக்குத் தமிழ்ச் சொற்களோடு வடசொற்களும அபேதமாக உறவாடி உதவுகின்றன.

எந்த நூலில் ஈடுபாடு ஏற்பட்ட போதிலும், அது மற்ற நூல்களைக்காட்டிலும் மேலானது என்று உணர்ச்சி மேலீட்டால் ஒருவர் சொல்லக்கூடும். இந்த ஆராயச்சி யுகத்திலும், விவேகியான ஒரு நண்பர், 'ஷேக்ஸ்பியரும் கம்பரும ஆண்டாளும் ஷெல்லியும் பாரதியாரின ஒரு பாட்டிலுள்ள ஒரு வரிக்கும் ஈடாகப் பாடியிருக்கவில்லை' என்று பொருள்படச் சொன்னதுண்டு !

மனோனமணீய ஆசிரியரோ கவிதை யுள்ளம் படைத் தவர். தனிமையாக இருந்து திருவாசகத்தைப் படித்துப படித்து உருகிக்கொண்டிருந்தார் என்று ஊகிககலாம; எவ்வளவு நீண்ட தனிமையிலும் பொழுது போகக ஒரு நூல் வேண்டுமென்றால், 'அளவிற் சிறிய திருவாசகம் என்ற இந்த ஒரு வாசகமே போதும்!' என்று எண்ணும பக்திநிறைந்த மனநிலை வாய்ந்தவர் இவர்.

யுகாந்த காலத்திலே சிவபெருமான் ஒருவரே தனிமை யாக மிஞ்சியிருப்பார் என்று சிவபுராணங்கள் சொல்லு கின்றன அல்லவா? அந்த நெடுந்தனிமை கழிபபதற்குத் தமக்கு உதவுமென்றே சிவபெருமான் திருவாசகத்தில் ஒரு பிரதியை முன் கூட்டியே கருதிவைத்துக் கொண்டார் என்று பாடுகிறார் மனோன்மணீய ஆசிரியர் :

**கடைஊழி வரும்தனிமை**
**கழிக்க அன்றோ, அம்பலத்துள்**
**உடையார்உன் வாசகத்தில்**
**ஒருபிரதி கருதினதே ?**

ஒரு சமயம திருவாசகம் பாடிய மாணிக்க வாசக சுவாமியிடம் சிவபெருமானே மனிதவேடம் பூண்டு வந்து, ஆசிரியர் சொல்லச சொல்லப் பாடல்களை எழுதிக்கொண்டார் என்பது சைவர்களுக்குள்ளே வழஙகும ஒரு கதை. அந்தப் பாடல்களைப பிரதிசெய்து வைத்துக் கொள்ளவேண்டுமெனறு சிவபெருமானே ஆசைபபட்டு வந்தார் எனபது ஓர் அழகிய கதை அல்லவா? இந்த அழகிய கதையை மனோன்மணீய ஆசிரியர் தமது ரஸிகமனோபாவத்துடனும், வாழக்கை அனுபவத்துடனுமம கலந்து, 'அபபடி அபபெருமான பிரதி செயதுகொண்டது யுகாந்த காலத்திலே தமககு நேரபபோகும அந்த நெடுந்தனிமையில் பொழுது போககுவதறகுத்தான்!' எனறு கூறுவது எவ்வளவு ரஸமாயிருககிறது!

## ஆராய்ச்சிக் காதல்

ஆசிரியர் சுந்தரம பிள்ளை கவிஞர், ரஸிகர், ஆராய்ச்சிக்காதலரும் கூட!

> **ஒருபிழைக்கா அரனார்முன்**
> **உரை இழந்து விழிப்பாரேல்,**
> **அரியதுன(து) இலக்கணமென்(று)**
> **அறைவதும் அற்புதமாமே?**

என்று நக்கீரர் கதையைக குறிபபிடுவது இவரது ஆராய்ச்சிக்காதலை அறபுதமாக வெளியிடுகிறது எனலாம.

பாண்டியன தன காதலியின் கூந்தலில் பூ இல்லாமலும் வாசனை உண்டென்று கருதி, அந்த அகக் கருத்தை உணர்ந்து பாடுகிறவர்களுக்குப் பெருநிதி கொடுப்பதாகச் சொல்லிப பொற்கிழி ஒனறு கட்டிவைத்தான். அது தெரிந்து மதுரைச சொக்கநாதரின் பக்தனான தருமி என்பவன் தன் வறுமை தீரவேண்டுமென்று, தனக்கு இஷ்ட தெய்வம் பாடிக்கொடுத்த பாட்டை அரசனிடம் காட்டி

னர். அரசன் அதைச் சரிபார்க்கச் சங்கப் புலவர்களிடம் அனுப்பி வைத்தான்.

உடனே அந்தப் புலவர்களின் தலைவரான நக்கீரர் பூ இல்லாமல் கூந்தலுக்கு இயற்கையாகவே மணமுண்டு என்று அந்தப் பாட்டில் கூறியிருப்பது குற்றம் என்றார். சிவபெருமான் நேரில் தோன்றி நெற்றிக் கண்ணைத் திறந்து தகிக்க ஆரம்பித்த போதிலும், நக்கீரர் 'குற்றம் குற்றமே' என்று சாதித்தாராம்.

'ஆராய்ச்சியாளருக்கு இருக்க வேண்டிய மனநிலை இது!' என்று கருதும் ஆசிரியர் சுந்தரம் பிள்ளை அந்த நிலையில் அந்த ஒரு பிழைக்காகச் சிவபெருமானும் 'உரை இழந்து விழி'த்தார் என்று சாதுரியமாகச் சொல்லுகிறார்.

'சிவபெருமானே குற்றம் செய்தாலும் குற்றம் குற்றம் தான்' என்ற நக்கீரர் மனப்பான்மையே ஆராய்ச்சி மனப்பான்மையாக இருக்கவேண்டும் என்று சொல்லும் மனோன்மணீய ஆசிரியர் தமது ஆராய்ச்சி நெறியிலும் நக்கீரரை வழிகாட்டியாகக் கொண்டார் என்று கருதலாம். இதனால், கனம் ஜடை என்று வேதங்களைக் கண் மூடி உருவேற்றுவதைக்காட்டிலும் தமிழர்களுக்கு விளங்கும் திருவாசகத்தை மனம் உருகப்பாடுவது பயன்தரும் என்றும், ஒரு சாதிக்கு ஒரு நீதி சொல்லும் மனு முதலான ஸ்மிருதிகளைக் காட்டிலும் சமரச நூலான திருக்குறள் சிறந்தது என்றும் இந்த ஆராய்ச்சியாளர் சொல்வதாக ஊகிக்கலாம். இது தவிர, இவரது ஆராய்ச்சித் திறமையை உள்ளபடி நாடகத்தினிடையே அங்கங்கே பார்க்கலாம்.

## ஆராய்ச்சியும் கவிதையும்

'சிவபெருமான் நெற்றிக் கண்ணைத் திறந்தபோதிலும் குற்றம் குற்றமே!' என்று கூறிய நெஞ்சுத் துணிவு ஆராய்ச்சி உலகத்திற்கே ஒரு வழிகாட்டி என்று கருதும்

ரியர், 'கூந்தலுக்கு இயற்கை மணம் கிடையாது, பூவின் சேர்க்கையால் ஏற்படும் செயற்கை மணம் தான் உண்டு' என்று கருதிய நக்கீரர் மனநிலையைக் கவிதை உலகத்திற்கும் ஒரு வழி காட்டியாகக் கொள்கிறார் என்று தோன்றுகிறது. உள்ளது உள்ளபடியே வருணிக்கவேண்டும் என்ற இத்தகைய மன நிலையோடு இயற்கைப் பாங்கம் வாய்ந்த சங்க நூல்களையே உயர்ந்த தமிழ்க் கவிதையாக மதித்தவர் இவர்.

ஆனால் நக்கீரர் கருதிய கவிதை யிலக்கணம் அந்த ஆராய்ச்சித்திறமைபோல் அவ்வளவு சரியானதா? காதலனான அரசன் காதலுணர்ச்சியின் மேலீட்டினால் தான் 'காதலியின் கூந்தலுக்குச் செயற்கை மணமும்வேண்டுமோ?' பூவா இதை மணம் செய்யப்போகிறது? பூவுக்கு அல்லவா இது அழகு தரவேணும், மணம் தரவேணும்?' என்றெல்லாம் கனவு காணத் தொடங்கினான். அந்தக் காதற் கனவைத்தான் கவிஞனுடைய மனோபாவம் வெளியிட்டது. 'வண்டே' நீ ஆராய்ந்து அறிந்திருக்கும் பூக்களில் இந்தக் கூந்தலைக் காட்டிலும் வாசனையுள்ள பூவும் உண்டோ?' என்று வண்டைக் கேட்டுக்கொண்டே காதலன் காதலியை நெருங்குவதான துறையிலே அமைந்த கவிதையில்தான் நக்கீரர் குற்றம் கண்டுபிடித்தார்.

நக்கீரரின் மனநிலை விஞ்ஞானியின் மனநிலை; ஆராய்ச்சிக்காரரின் மனநிலை; மனோபாவத்தையே கவிதையின் மூலதனமாகக் கருதும் மனநிலை அன்று; அத்தகைய கவிதைகளில் மூழ்கிக்கிடக்கும் ரஸிகர்களின் மனநிலையும் அன்று. பகுத்தறிவுவாதமும் புகைப்படம் பிடிக்கும் மனப்பான்மையும் உயர்ந்த கவிதைக்கு அவ்வளவாகப் பொருத்தம் அல்ல. எனவே, நக்கீரரின் ஆராய்ச்சி-மனப்பான்மையை நாம் பாராட்டியபோதிலும், கவிதை விஷய

மாகச் சிவபெருமான் கட்சியே நியாயம்!—என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது.

ஆசிரியர் சுந்தரம் பிள்ளையோ ஆராய்ச்சித் துறையிலும் கவிதைத் துறையிலும் ஒருங்கே நக்கீரரைப் பின் பற்றியவர். இந்த மனநிலை-இந்த நாடகத்திற்கு ஓர் அருந் துணையாக அமைந்திருக்கிறது; அறிவுத் திறமையாலும் புலமைத்திறமையாலும சம்பாஷணைகளையும் குணாதிசயங் களையும் ஒழுங்கு செய்ய உதவியிருக்கிறது. இந்த நாடகத் திலுள்ள கவிதைப் பகுதிகளிலும் கூடக் கவித்திறமை யைக் காட்டிலும், அறிவுத்திறமையும் ஆராய்ச்சித்திறமை யும் புலமைத்திறமையும அதிகமாய்ப் பிரகாசிக்கின்றன.

இவர் ஷேக்ஸ்பியர் நாடகங்களைப் படித்துப் படித்து ஆராய்ந்திருக்கிறார். ஷேக்ஸ்பியரைச் சிறப்பாகவும், ஆங் கில இலக்கியத்தைப் பொதுவாகவும ஆராய்ந்து படித் திருக்கிறார். அங்கங்கே கண்ட சிறப்புக்களையும அழகு களையும கருத்துச் செல்வங்களையும் தமிழிலே கொண்டு வந்து காட்ட வேண்டும். தமிழ மக்களோடு பங்கிட்டுக் கொள்ளவேண்டும் என்றெல்லாம ஆசைப்பட்டிருக்கிறார், ஆத்திரப்பட்டிருக்கிறார்.

அன்னிய பாஷை இலக்கியங்களைத் தமிழ்க் கண்ணோடு பார்த்திருக்கிறார். ஒருபுறம் தமிழ்க் காதலை வளர்த்துக் கொண்டே போனார்; மறுபுறம் ஆராய்ச்சி அறிவையும் தீட்டித்தீட்டிக் கூராக்கிக்கொண்டே போனார், 'ராஜ பாஷை' என்ற திமிருடன் நம்மவரை அடிமைகொண் டிருந்த ஆங்கில பாஷையையும தமிழுக்குத் தொண்டு செய்ய உபயோகித்துக் கொண்டார்.

இத்தகைய தமிழ்க் காதலையும், இத்தகைய ஆராய்ச் சித் திறமையையும் நாடக முகப்பிலுள்ள பாயிரத்திலேயே சிறிதளவு பார்த்துவிட்டோம். இனி, நாடகத்தைப் பார்க்க ஆரம்பிக்கலாம்.

# மனோன்மணீயம்

## விளக்கமும் விமரிசனமும்

ஆசிரியர் சுந்தரம் பிள்ளையின் தமிழ்க்காதலும் ஆராய்ச்சிக்காதலும் இவரை மனோன்மணீயம் என்ற இந்த இலக்கிய நாடகத்தைச் செய்யுமாறு தூண்டிவிட்டன. இயல் இசை நாடகம் என்ற முத்தமிழில் நாடகத் தமிழானது தன் பூர்வ நிலை தாண்டி ஏன் இலக்கியமாகப் பரிணமிக்கவில்லை என்பது குறித்து இவரது நுண்ணறிவு ஆராய்ந்து பார்த்திருக்கவேண்டும்.

நாடகத்தமிழ் தன் பழைய நாட்டிய வடிவு அல்லது கூத்து வடிவிலேயே அடங்கிநின்று, நாடக இலக்கியமாக நம் மக்களிடையே மலர்ச்சி பெறாமல் போனதற்குப் பல காரணங்கள் உண்டு. இசையுடன் நடைபெற்ற நாட்டியம் ஒருவகை இசை நாடகமாகப் பரிணமித்தபோதிலும் இயற்றமிழுடன் கலந்து நாளடைவில் காளிதாசரின் சாகுந்தலம் போன்ற நாடக இலக்கியத்தை அளிக்காமற்போனது தமிழிலக்கியத்திற்கு ஒரு மகத்தான நஷ்டம் என்பதை நன்கு உணர்ந்துகொண்டதும், இத்துறையில் ஒரு நல்ல நாடக நூல் இயற்றித் தமிழ்ப்பணி புரியவேண்டும் என்ற அவா நமது ஆசிரியரின் உள்ளத்தை ஆட்கொண்டது.

வடமொழியிலுள்ள நாடகங்களுக்கு ஒப்பாகத் தமிழில் ஒன்றும் இல்லையே என்று ஆசிரியர் வருந்தியபோதிலும், இவர் உள்ளம் ஷேக்ஸ்பியர் நாடகங்களை ஆராய்ந்து அத்தகைய பாணியில் நாடகமொன்றைத் தமிழில் இயற்ற வேண்டுமென்றே துணியலாயிற்று. ஆங்கில இலக்கிய

வானில் நிகரின்றி ஒளிவீசும் ஷேக்ஸ்பியரின் மேதைதான் இவர் இதயத்தைப் பெரிதும் வசிகரித்தது.

சுந்தரம்பிள்ளை தமது நாடகத்துக்கு உரிய கதையையும் தமிழர் கதைகளிலிருந்தோ, இதிகாச புராணக் கதைகளிலிருந்தோ தேர்ந்தெடுத்துக் கொள்ளவில்லை; தாமாக ஒரு கதையைக் கற்பித்துக்கொள்ளவும் இல்லை. லிட்டன் பிரபு எழுதிய ஆங்கிலக் கதையை அல்லவா எடுத்துக் கொண்டார்? அந்த இரகசிய - கதையைத்தான் எப்படித் தமிழில் தமிழர் மனோபாவத்திற்கு ஒரு புது விருந்தாகும்படி அமைத்துக்கொண்டிருக்கிறார்!

## 1. கதாநாயகி

மனோன்மணீயத்தின் கதாநாயகியான மனோன்மணி ஆங்கில மூலக் கதையில் **ஆர்க்கியோப்** (Argiope) என்ற பெயருடன் தோற்றம் அளிக்கிறாள். இவளுடைய விவாக ஏற்பாடு, திருமணம் குறித்த தூது, பாதுகாப்பான ஓர் இடத்துக்கு இவளை அனுப்பத் தந்தை உடன்படுவது, முதலிய அம்சங்களும், இறுதியாகக் காதலன் இவளைச் சந்திப்பது, மாலையிடுவது ஆகிய நிகழ்ச்சிகளும் மூலக்கதையைப் பின்பற்றி அமைந்திருப்பனவே.

மனோன்மணி தோன்றுகிற காட்சிகள் அதிகமாய்க் காணப்படவில்லை. எனினும் இவளது உருவ அழகும் குண அழகும் நம்மை ஆரம்பத்திலேயே வசிகரித்துவிடுகின்றன. முதல் அங்கத்தின் முதற்களத்திலேயே சுந்தர முனிவர் ஜீவக மன்னனை நோக்கி,

**உன்னையும் உன்குலத்து உதித்த நம்மனோன்மணி**
**தன்னையும் சங்கரன் காக்க! தயாநிதே!**
**அன்பும் அறமுமே யாக்கையாக் கொண்ட**
**நின்புதல்வியை யான் காண நேசித்தேன்**

என்று கூறுவது கதாநாயகியைக் காணவேண்டுமென்ற விருப்பத்தை நம் உள்ளத்திலும் அதிகரிக்கச் செய்கிறது.

ஒரு நகரவாசி இவளை 'மனோன்மணி அன்னை' என்று குறிப்பிடுகிறான். அன்பே உயிராக அழகே உடம்பாகக் கருணையும் அறிவும் அழகும் ஓர் உருவாகத் தோன்றியவள் என்று சொல்லி வாழ்த்துகிறான். இவளது சிறப்பானது தென்றற் காற்றிலே கலந்துவரும் ஒரு திவ்ய பரிமளம் போல் நம்மை வசீகரித்து, நம் உள்ளத்திலே இவளுக்கு ஆசிரியர் அளித்திருக்கும் ஸ்தானத்தை உறுதிப்படுத்துகிறது.

தமிழ்ப் பெண்களுக்குரிய சிறந்த பண்புகளுடன் மனோன்மணியாக மாறிப் பிறந்துவிடுகிறாள் மூலக்கதையில் வரும் பெண்மணி.

இவளது குணசித்திரம் நம் கண்முன் படிப்படியாக வளரவில்லை. காதல் விஷயமாக இவள் நிலை மாறுபடுவதைக் காண்கிறோம்; ஆனால் இது தக்க பருவத்தில் எந்த கன்னிப் பெண்ணுக்கும் ஏற்படக்கூடிய மனமாற்றம் தான். நாடக பாத்திரத் தன்மையில் வளர்ந்து மனோன்மணியின் குணசித்திரம் ரஸிக உள்ளத்திற்குத் திருப்தி அளிக்காவிட்டாலும், இவளது மனத்தூய்மையும் ஆன்ம சௌந்தரியமும் இந்தக் குணச்சித்திரத்தை நமது நினைவில் பதிந்து நிற்கச் செய்துவிடுகின்றன.

முதல் அங்கத்தில் இரண்டாம் களத்தில் நாம் முதலில் மனோன்மணியைச் சந்திக்கிறோம். கதாநாயகியும் தோழி வாணியும் கழல் விளையாடுகிறார்கள் கன்னிமாடத்திலே. அப்போது இருவரும் மாறிமாறிப் பாடிக்கொண்டே ஆடும்போது, தங்கள் உள்ளத்தை ஒருவருக்கொருவர் புலப்படுத்துகிறார்கள். இந்த நிலையில் காதலை வாழ்க்கையின் ஈராசைக்கியாக மனோன்மணி ஒப்புக்கொள்ளவில்லை.

மனோன்மணிக்கும காதல் உணர்ச்சி தோன்றும் என்பதைச் செவிலித்தாய் குறிப்பிடும்போது, 'நெருப்பையும் கறையான் அரிக்குமோ?' என்கிறாள் இவள். இதே மனோன்மணி காதலுணர்ச்சிக்கு வசமானதும தன் மன அமைதியை இழந்து,

**எங்கு இருந்தன இவ்அன்றிற் பேய்கள்!**
**நஞ்சோ நாவிடை? நெஞ்சம் துளைக்கும்!**

என்று புலம்புகிறாள்.

மனோன்மணி தந்தையிடம அன்பு உள்ளவள்; தந்தைக்குக் கீழ்படிந்து நடக்கும இயல்பினள். நட்பிற்கு இசைந்த குணநலங்களும இவளிடம் காணபபடுகின்றன. பக்தியும வேதாந்த மனப்பான்மையும இவள் உள்ளத்தில் பகுத்தறிவுக்கு அப்பால் உள்ள சிந்தனைகளையும் தோற்றுவிக்கின்றன. உரையாடல் இல்லாமலேயே உள்ளமும் உள்ளமும நிலையை உணர்ந்துகொள்ள முடியும என்ற நம்பிக்கை இவளுக்கு உண்டு. போதம கரைந்து பொங்கும் அன்பு உடலின் தடையை மீறி, ஒத்தநிலையில் உண்மை உள்ள உள்ளத்தைத் தொட்டுவிடும என்கிறாள். சுந்தர முனிவரின வேதாந்த மனபபான்மை காதல் நிலையிலும் இவளைக் கைவிடவில்லை.

காதலுணர்ச்சி அடைவதற்கு முன் இவள் 'சுந்தர முனிவரை நினைக்க நினைக்க என உள்ளம தவத்திலே குதித்துவிட விரும்புகிறது' என்கிறாள். காதலுணர்ச்சி பெற்ற பின்பும தவத்தைக் குறித்துப் பேசுகிறாள். 'தவமே சுபகரம்' என்கிறாள். ஆனால் உண்ணாவிரதம் பூண்டு தவம் புரிவதோ, காடுபுகுந்து தவம் கிடப்பதோ அவசியமில்லை என்கிறாள்.

**தந்தைதாய் ஆதியா வந்த தன்குடும்ப
பந்த பாரத்தினை ப்பேணித் தனது
சொந்தமாம் இச்சைகள் துறந்து, மற்றவர்க்கு
எந்த நாளும் சுகம் இயைந்திடக் கடமையில்
முந்துகின்றவரே முதல் தவ முனிவர்**

என்று தவத்தைப பற்றிய தன கருத்தை வெளியிடு கிருள். இககருத்தும சுந்தர முனிவரின தவக் கொளகை களுடன் பொருநதுவதுதான்.

இத்தகைய அறிவுக கூரமை மனோன்மணியிடம காணபபட்டாலும், தவம இவளை வசீகரிபபதற்குக் கார ணம 'பேதைமைப பெணமை' எனறு சொல்லுகிருர் களே, அத்தகைய பெணமை—மனபபானமையும தான! சுந்தர முனிவருடன வாதம செயது தெளிநத பின் இவள உளளம தவத்தை நோககியது எனபதில்லை; அவரது தோறறமே தன உளளத்தைத் தவத்தில் செலுத்தப பார்பபதாக அலலவா சொலலுகிருள ?

எனவே, இவளது அறிவுக கூர்மை ஆழந்து ஆராயும சக்தி பெறறிருககவில்லை எனறு கருதலாம. சுந்தரரிடம குருபக்தி கொண்டிருப்பதுபோலத்தான தந்தையிடத்தி லும 'அனனையும பிதாவும முனனறி தெயவம' எனபது போனற பக்தி கொண்டிருககிருள. தோழியான வாணியின் சுதந்திர மனபபான்மை இவளிடம காணபபடவில்லை.

வாணிமீது இவள் கொண்டிருக்கும நட்புக் காதலும சாதாரணமாகத் தோழியரிடையே காணப்படும் பழக்க உணர்ச்சிதான். புருஷோத்தமன் மீது இவளுக்கு ஏற்படும் காதலுணர்ச்சிக்குககூட வழக்கத்தையோ பழக்கங்களையோ மீறிச் செல்லும ஆற்றல் இல்லை.

ஒரே ஒரு சந்தர்ப்பத்தில்தான் மனோன்மணி தந்தைக் குக் கீழபபடியவில்லை என்று செல்லவேண்டும. பலதேவனை

மாலையிட மறுத்துப் புருஷோத்தமனுக்கு மணமாலை சூட்டும வாய்ப்பே இது. இந்தச் சந்தர்ப்பத்திலும தன் கனைக் காதலனைக் கண்ணாரக் கண்டு உணர்ச்சி வெள்ளமிடத் தன்னையும் தன் தவ உணர்ச்சி கடமையுணர்ச்சிகளையும் மறந்த நிலைதான் இவளது இச் செயலுக்குக் காரணமாயிற்று. இதற்கு இவளுடைய சுதந்திரக் காதலுணர்ச்சி காரணமல்ல என்றே சொல்லிவிடலாம.

மனோனமணி ஒரு சாதாரணப பெணமணிதான. காதலின் வேகத்திலோ, தாமாவேசத்திலோ, துணிந்து தனக்கென்று ஒரு சுதந்திரவழி வகுத்துக்கொளளும ஆறறல் பெறாத பெண்மணி. எனினும இவள 'குணம எனனும் குன்றேறி நிற்கின்றாள்' எனற கருத்தை நம உளளத்தில் தோற்றுவிக்கிறாள. பகுத்தறிவுக கண்கொண்டு ஆராய்ந்து பார்க்கும ஆறறல் பெற்றிராவிட்டாலும, பகதி எனற அஙகுசத்தால் தன உணர்ச்சிகளையும செயல்களையும இவள அடககியாளும ஆறறலையும பெறறிருககிறாள எனற அபிபபிராயமும நமககு ஏறபடுகிறது.

தோழியான வாணிக்கு முறறும முரண்பட்ட நிலையில் மனோனமணி நம கண்முன தோனறுகிறாள். இவள மீது நமக்கு ஏற்படும் அன்பையும வெனறுவிடுகிறது நம் மரியாதை யுணர்வு. தவச் செல்வரான சுந்தரரின் பாராட்டுக்கு உரியதாகும குணச்சித்திரம நமது மதிபபையும் மரியாதையையும் தூண்டுவதாகத் தானே இருக்கவேண்டும்.

தந்தையின் விருப்பத்திறகாகத் தன காதலையும துறந்து தந்தைக்குரிய கடமையைச் செலுத்தவேண்டும் என்ற மனநிலையை ஓர் அரசிளங்குமரியின் மனநிலை என்று சொல்வதைக் காட்டிலும, முனிவரால் வளர்க்கப்பெறும் ஒரு தவப் பெண்ணின் மனநிலை என்றுதான் சொல்லவேண்டும்.

புருஷோத்தமனைக் கண்டவுடன் அவன் நிற்குமிடத்திற்கு விரைந்து நடந்து மாலை சூட்டுகிறாளே, அப்போது தான் 'இவளும் இந்நிலவுலகப் பெண்மணி; மற்றைப் பெண்களைப்போல் காதலை மீற முடியாதவள்' என்ற உண்மை நமக்கு நன்கு புலனாகிறது. இந்தப் பெண்மை நிலைதான் வாணியின் காதலுள்ளத்தைப் புரிந்துகொண்டு, தன்னை எத்தனையோ இன்னல்களும அபாயங்களும சூழ்ந்திருந்த நிலையிலும், வாணி தன் இஷ்டப்படியே காதலனை மணந்து கொள்ள வேண்டும் என்று அரசனிடம் மன்றாடி அதற்குரிய கட்டளையும பெறுகின்றது. வாணியின் காதலைக் காப்பாற்றுவதுபோல், நாராயணனின் உயிரையும் காப்பாற்றுவதும மனோன்மணியின் சாதாரணப் பெண்மதி தான்.

இத்தகைய நிகழ்ச்சிகளே இக்கதாநாயகியை ஒரு வகைப் பளிங்குச் சிலைபோன்ற நிலையிலிருந்து உயிரோவியமாக்கப் பார்க்கின்றன. இத்தகைய சந்தர்ப்பங்களை அதிக அளவில் ஆசிரியர் படைத்திருக்கலாம். எனினும அப்படிச் செய்யாதது ஒரு குறைதான் என்று, திரு. கே. என். சிவராஜ பிள்ளை போன்ற இலக்கியத் திறனாய்வாளர் கருதுவர்.

## 2. கதாநாயகியின் கனாக் காதலன் (புருஷோத்தமன்)

கதாநாயகியை விசேஷ உயிரோட்டமும் உணர்ச்சி வேகமும் இல்லாத ஒரு தூய பளிங்குச் சிலையின் நிலை பெறுமாறு அமைத்திருக்கும் ஆசிரியர் புருஷோத்தமனையும் இந்தக் கனாக் காதலிக்கு இசைந்தவொரு கனாக் காதலனாகவே அமைக்கப் பார்க்கிறார்.

இந்த வஞ்சி வேந்தன் ஒரு சிறந்த போர் வீரன். தன் வீரத்தை நன்குணர்ந்து அதற்கு இசைந்த கௌரவத்

தைக் காப்பாற்றிக்கொள்ளவேண்டும் என்ற மன உறுதியும் பிடிவாதமும் நேர்மைக்கு முரண்பாடு கண்டால் கோப முரண்டும் உள்ளவன்.

எனவே, குடிலனது குறுக்கு வழியை அறவே வெறுத்து,

**சேரன் விஜயமும்**
**திருடான் !**

என்று உரக்கக்கூறி வஞ்சகன் நடுங்கி வாய் மூடுமாறு செய்துவிடுகிறான்.

புருஷோத்தமனை முன கோபக்காரன் என்றே குடிலன் கேள்விப்பட்டிருக்கிறான் (மூன்றும அங்கம, முதற்களம).

**தூண்டிடு சினத்தன் ;**
**தொழுதிவில் மீள்வன்**

(ஐந்தாம் அங்கம், முதற்களம)

என்பது தன் மனத்தராசில் புருஷோத்தமனை எடைபோட்டுப பார்க்கும குடிலன் கருத்து.

ஜீவக வழுதியின் தூதனை பலதேவனிடம் புருஷோத்தமன் நடந்துகொளளும் விதமும, தன் உதவியை நாடி வந்த குடிலனை நடத்திய விதமும், ஜீவக வழுதியின் புதல்வியால் மாலை சூட்டப்பெற்று மகிழ்ந்த நிலையில்கூட அந்தப் பாண்டிய வேந்தனிடம் கடுமையாகப் பேசிய விதமும், புருஷோத்தமனைப் பற்றிய குடிலன் கருத்தில் பாதி உண்மைதான் என்பதைப் புலப்படுத்துகின்றன.

இராஜதந்திரம் அறியாத ஒரு போர் வீரன் இவன். 'போர்க்களமே ! நீ தான் என் வீடு; வீர கௌரவமே என் மூச்சுக் காற்று !' என்பது இவன் ஜீவநாடி. இத்தகைய முரட்டு மனப்பான்மையைக் குறித்து மனித சுபாவங்

களை நன்கு அறிந்திராத ஜீவக வழுதியும் ஒருவாறு தெரிந்து கொண்டிருக்கிறான்.

**ஒருவன் தனதுஅடியிணை அடைந்து உறவே**
**பெரிதுவிரும்பினும் பெருமை பாராட்டுவன்!**

(மூன்றாம் அங்கம், முதற்களம்)

என்று புருஷோத்தமனின் பிரபுத்வ சுபாவத்தைக் குறிப்பிடுகிறான் ஜீவகன்.

'நான் பிடித்த முயலுக்கு மூன்றே கால்' என்பது போன்ற ஒரு வகைத் தன்னரசு - மனப்பான்மையைப் புருஷோத்தமனின் பிரபுத்வத்தின் ஒரு முக்கிய அம்சமாக நாம் காணகிறோம். இந்த அம்சத்திலே இவன் மனோன்மணியின் அடங்கி நடக்கும் சுபாவத்திற்கு முற்றும் மாறுபட்டவன் எனலாம்.

இந்தக் குணத்திசய முரண்பாட்டின் விளைவாகக் காதலர் இருவரும் கருத்தொருமித்து வாழ்க்கை நடத்துவர் என்றே நாம் ஊகிக்கலாம்.

இந்த முரண்பாட்டுடன் காதலர்களின் குணச்சித்திரங்களிலுள்ள விசேஷ ஒற்றுமைகளும் சேர்ந்து, 'இவர்கள் சரியான தம்பதி; நல்ல வண்ணம் வாழக்கூடியவர்கள்' என்றே நம்மை எண்ணச் செய்கின்றன. உருவ அழகிலும் ஒருவருக்கொருவர் பொருத்தம் தானே !

'இருளெலாம் ஒளிவிட இலங்கிய' மன்மத உருவம் என்று புருஷோத்தமனைக் குடிலன் நேரில் கண்டதும் கூறித்திகைத்து நிற்கிறான் (ஐந்தாம் அங்கம், முதற்களம்). அழகே உடம்பாகப் பெற்றுப் பாண்டிய குலமாகிய பாற் கடலில் எழுந்த முழுமதி போலத்தோன்றுகிறாள் மனோன் மணி மக்களின் கண்களுக்கு (முதல் அங்கம், முதற்களம்).

இந்த அழகுப் பொருத்தத்துடன் குணப்பொருத்தங்களும இக்காதலர் வாழ்க்கையை மலர்ச்சி பெறச்செய்யக் கூடியனவே. புருஷோத்தமனின் வீரப்புகழுடன் குணச் சிறப்புக்களும் சுந்தர முனிவரின் உள்ளத்தையும் கவர்ந் திருக்கின்றன. பெயருக்கு இசைந்தபடியே புருஷோத் தமன் ‘பொருவிலாப புருடன்’ என்று சொல்லி இவனை,

**பூங்கொடி படரப் பாங்காம் தருவே**

(முதல் அங்கம், நான்காம் களம்)

என்று தம் அபிப்பிராயத்தை ஜீவகனிடம் தெரிவிக்கிறார் முனிவர்.

வேறொரு பொருத்தமும் இக்காதலர்களுக்கு உண்டு. இருவரும கணக்கண்டு காதல் கொளவதைத்தான ஊன்றி நோககுங்கள். ஞானத்தில் மேமபட்ட சிந்தையன் புரு ஷோத்தமன் எனறு குடிலனும கேள்விப்பட்டிருக்கிறன். ‘புலனாரக் காண்பதுவே பொருள்’ என்ற லோகாயதக் கொளகையைப் புருஷோத்தமனும கண்டிக்கிறன் (ஐந்தாம் அங்கம, முதற்களம).

**பூதப் பொருட்கே புலன் துணைஅன்றி,**

**போதப் பொருட்குப் போதும் போதம்.**

என்பதுதானே மனோன்மணியின் மதக் கொள்கை போன்ற மனக் கருத்தும் (மூனறும அங்கம, மூன்றும களம்). இத் தகைய மனப் பொருத்தமும் இந்தக் காதலர்களின் மணத் திற்கு ஒரு பொருத்தம்தான் என்றே கருதலாம்.

மனோன்மணியின் இம மனநிலைக்குச் சுந்தர முனிவர் காரணமாவார் என்பது வெளிப்படை. புருஷோத்தமனது இத்தகைய மனநிலைக்கும் சுந்தர முனிவரின் ஞானோப

தேசம காரணமாயிருக்க முடியுமா என்பது ஒரு சூட்சும மான கேள்வி.

புருஷோத்தமனது வேதாந்த மனநிலையை சுந்தர முனிவர் நேரடியாக உருவாக்கியிராவிட்டாலும், இந்த முனி வரது ஞான பொக்கிஷத்திறகும் அந்தச் சேர மன்னனது குணபொக்கிஷசாலைக்கும் ஏதோ ஒருவகைத் தொடர்பு இருக்கவேண்டியதுதான் என்றே தோன்றுகிறது. இதைக் குறிப்பாக உறுதிப்படுத்துகிறது சுந்தர முனிவரின் சீடருள் ஒருவரான கருணாகரரின் வாக்கு (மூன்றும் அங்கம், நான் காம களம்).

புருஷோத்தமனுக்கு மனோன்மணி கனககாதலி; மனோன்மணிக்குப புருஷோத்தமன் கனக்காதலன. கன வில உருவாகிவந்த காதலுருவங்களை இருவரும நம்புகிறார் கள்; சாதாரண ஸ்தூல உண்மைக்கும மேலான உண்மை என்று மதிக்கிறார்கள். அந்தக் கனக் காட்சிகளின் மோகன சக்திக்கு இருவரும ஐயம கொள்ளாது உட்படுகிறார்கள்.

இபபடி மனம ஒன்றி மணமும் நடைபெறுகின்றது. இது காதலர்களின் நம்பிக்கைக்கு வெற்றிதான். ஆனால் இநத வெறறிக்காக இவர்கள பாடுபடவில்லையே; தங்கள பகுத்தறிவைக் கொண்டு முயறசி ஒன்றும செயய வில்லையே !

‘இபபடியெல்லாம இறையருளால் அறபுதம நிகழும; அன்று நிகழ்ந்ததுபோல் இன்றும நிகழக் கூடும’ என்பது சுந்தரமுனிவரின் மதம. சுந்தரம் பிள்ளையின விஞ்ஞான வேதாந்த மனப்பான்மையிலும இக் கொள்கைக்கு இடம உண்டு. எனவே, மனோன்மணீய நாடகத்தின அடிப படைத் தத்துவமாக அமைந்துவிட்டது இந்தக் கொள்கை.

## 3. கதாநாயகியின் தோழி
### (வாணி)

மனோன்மணி-புருஷோத்தம தம்பதியைக் காட்டிலும் வாணி-நடராஜ தம்பதியிடம் மனித உணர்ச்சிகளை அதிக அளவில் பார்க்கிறோம். மனோன்மணிக்கும் புருஷோத்தம னுக்கும் இடையே காதல் தடையற்ற ஏதோ ஒரு தெய்விக பிரவாகம் போல் காண்கிறது. வாணிக்கும் நடராஜ னுக்கும் இடையே உள்ள காதலோ ஒரு தெளிந்த நீரோடை; முதலில் தடையுற்று முடிவில் சரியாகப் போகிறது. இக் காதல் ஒரு பனிப் பொலிவு வாய்ந்தது.

கன்னிப்பருவத்தில் கன்னிமாடத்திலே மாலைப்பொழு தில் கழல் விளையாடும் வாணியையும் மனோன்மணியையும் சந்திக்கிறோம். கழலாடும்போது ஒவ்வொருவரும் மாறி மாறிப் பாடுவதுண்டு. மனோன்மணி கழலாடிக்கொண்டே சிவபெருமான் காமதகனம் செய்த கதையைப் பாடுகிறாள், 'உதவியற்ற பெண்கள் மீது அம்புபோடும் சூரன் யோக நிலையில் இருந்த சிவபெருமானை நெருங்கியதும் சாம்ப லாய்ப் போய்விட்டானே!' என்று சொல்லும் மனோன் மணியின் உள்ளம் காதல் இல்லாத கன்னி உள்ளம்.

வாணி பதில் சொல்லும்போது மன்மதனுக்கு வக்கா லத்து வாங்கிவிட்டதுபோலப் பாடுகிறாள். இப்பாட்டில் பிரதிபலிக்கிறது வாணியின் காதலுள்ளம். 'மன்மதன் எரிந்து போனாலும் அவன் எய்த மலரம்பு நெருப்புமயமான சிவபெருமானுக்கும் ஆறாத வடுவாகிவிட்டதே; அப்படி யானால் வெற்றி யாருக்கு?' என்பது வாணியின் கட்சி.

மனோன்மணியோ மறுபடியும் தன் கட்சியையும் சிவபெருமான் கட்சியையும் சேர்த்துப் பேசுகிறாள்; காம தகனத்தை வற்புறுத்துகிறாள்.

பளிச்சென்று வாணி 'காமன் எரிந்தால்தான் என்ன? பரமேசுவரன் உடம்பிலும் பாதி கரிந்து விட்டதல்லவா?' என்று பதில் அளித்துப் பாடுகிறாள். பரமேசுவரன உடம்பில் ஒரு பாதி பெண்ணாகி விட்டதல்லவா? சிவபெருமான் சிவப்பு; பார்வதி கறுப்பு; இதைத்தான் 'கரிந்தது பாதி' என்று சமத்காரமாய்க் குறிப்பிடுகிறாள் வாணி.

மனோன்மணியோ மன்மதனுடைய தோல்வியையும், அவன் உருவம் இழந்து திரிவதையும் மறுபடியும் வற்புறுத்துகிறாள். வாணியோ தன் கொள்கையைக் காதல் பொங்கும் உள்ளத்துடன் கடைசியாக வற்புறுத்தி விட விரும்பி,

**உருவம் காந்தால் என் ?**
**ஓர் மலர் அம்பினால்**
**அரைஉரு ஆனார்என்(று)**
**ஆடாய் கழல்!**
**அந்நட ராஜரென்று**
**ஆடாய் கழல் !**

என்று பாடுகிறாள்; பாடிப் பெருமூச்செறிகிறாள.

'அரை உரு ஆனார்.... ......அந்நடராஜர்' என்ற சிலேடையில் 'அப்படி இளைத்துப போனார் அவர்!' என்னும் பொருளை அழுத்தமாக வெளியிட்டவள அதற்காக ஏன் இப்படிப பெரு மூச்சுவிட வேண்டும்? மனோன மணிக்குத் தெரியாதா தன் தோழியின் இரகசியம்?

வாணியின் காதலன் பெயருமம நடராஜன் தானே. மனோன்மணி சிரித்துக் கொண்டே,

**ஏதடி வாணி! ஓதிய பாட்டில்**
**ஒருபெயர் ஒளித்தனை பெருமூச் செறிந்து ?**
**நன்று நன்று நின்நாணம் !**

என்று பரிகசிக்கிறாள்.

பிறகு வாணியின் காதல்நிலையை உள்ளபடி அறிந்து கொள்ள விரும்பிய மனோன்மணியை நோக்கி,

**தந்தையும் கொடியன் : தாயும் கொடியள் ?**

என்று தன் குறைகளைச் சொல்லத் தொடங்குகிறாள். இவள் காதலித்த நடராஜனை அவர்கள் ஒப்புக் கொள்ளவில்லை யென்பதும், மந்திரி மகனாகிய பலதேவனுக்கே அவளை மணஞ் செய்விக்க விரும்பினர் என்பதும் மனோன்மணிக் குத் தெரிந்த விஷயம் தான்.

'உனக்கேன் இந்த முரண்டு? அவர்கள் இஷ்டப் படியே நடந்துகொள்ளலாமே' என்பதுதான் மனோன்மணி தோழிக்குச் சொல்லும் ஆலோசனை. இந்த ஆலோசனை யும், இவள் சுந்தர முனிவரைக் குறித்தும் ஞானவாசிஷ்டம் போன்ற வைராக்கிய நூல்களைக் குறித்தும் சொன்ன வையும் வாணியின் காதலுள்ளத்தைச் சிறிதும் பாதிக்க வில்லை. தன் தோழி காதற்சுவை அறியாதவள்; அறிந் தும் தவப் பேச்செல்லாம் பறந்துபோகும் என்பதுதான் வாணியின் திட நம்பிக்கை.

வாணி உள்ளத்தில் முன்னமே மலர்ந்த காதல் மனோன்மணி உள்ளத்தில் பின்னே மலரத்தான் போகிறது. எனினும், வாணியின் காதல் மனோன்மணியின் காதலிலிருந் தும் பிரித்து உணர்ந்து கொள்ள வேண்டிய ஒரு தனி ரகத்தைச் சார்ந்ததாகும்.

தந்தைக்குக் கீழ்ப்படிய வேண்டும் என்பதற்காக மனோன்மணி மணமாலை கொண்டு பலதேவன் எதிர்வரவும் துணிகின்றாள் (ஐந்தாம் அங்கம்,மூன்றும்களம்) வாணியோ, பலதேவனுக்கு மாலை சூட்ட வேண்டும் என்ற

சொல்லை நஞ்சினும் கொடியதாகக் கொண்டு நடுங்குகிறான் (முதல் அங்கம், இரண்டாம் களம்).

'வதுவையும் வேண்டிலர், வாழ்க்கையும் வேண்டிலர், ஒரு மொழி வேண்டினர், உரைத்திலேன் பாவி!' என்று வாணி மனோன்மணியிடம் பச்சாத்தாப உணர்ச்சியுடன் கூறும்போது, எவ்வளவு வசீகரமாய்க் காண்கிறது இந்தக் காதலியின் குண சித்திரம்! நாணம் இயற்கையாக உள்ள எந்தக் காதலியும் இப்படித்தானே நடந்து கொண்டிருக்கக் கூடும் (முதல் அங்கம், இரண்டாம் களம்). அருமையான இயற்கைச் சித்திரம் இது.

வாணியின் காதலுணர்ச்சியைக் காதல்வெறியென்று சொல்வதற்கில்லை. இவளது மன உறுதியையும் ஒழுக்க உயர்வையும் பண்பாட்டையும் ஒருங்கே புலப்படுத்தும் காதல் இது.

வாணியின் காதல் குருட்டுக் காதலும் அன்று. அறிவுக் கண்ணை மலர விழித்து இக் காதலரை இவள் உள்ளம்—இவளது சித்த சக்தி—தேர்ந்தெடுத்திருக்கிறது.

**மறப்பனோ என்உளம் மன்னிய ஒருவரை ?**
**ஆடவராக மற்று எவரையும்**
**நாடுமோ நான் உள அளவும் என் உளமே ?**

(முதல் அங்கம், இரண்டாம் களம்)

என்ற வாணி வாக்கிலே குருட்டுக் காதலையோ காதல் வெறியையோ காண்பதற்கில்லை.

தன் காதல் நிறைவேறா விட்டாலும் மனோன்மணி ஞான வைராக்கியத்துடனும் தியாக புத்தியுடனும் சொந்த இச்சை கருதாது [illegible]க்காகவோ முனிவருக்

காகவோ தவவாழக்கை வாழக கூடியவள் தான். வாணியோ, காதல் இலலாவிட்டால சாதல் எனகிறாள (முதல் அங்கம், இரண்டாம களம).

இது உணர்சசி வசமான பேசசு மட்டுமன்று; இவளது திட சஙகறபம. மன உறுதியும சித்த சக்தியும இவளுக்கு உண்டு என்பதறகு, மனோனமணியின காதல் பூர்த்தியான பின்பே தான் மணந்து கொளளபபோவதாக இவள சங் கறபம செயவதும ஓர் அரும்பெருந சான்றாகும.

மன வலிமையில்லாத ஜீவகன் திடசங்கற்பம கொண்ட வாணியை நோககி,

**நலமே சிறந்த குலமே பிறந்த**
**பலதேவனும் ஒரு பாக்கிய சிலாக்கியன்**

என்று குடிலன் மகனைக் குறிபபிட்டும, வாணியின் காத லனைப'பித்தன' என்று இகழ்ந்தும பேசுகிறான. அதறகு வாணி தைரியமாக 'நா எழாது அடக்கும' நாணத்தை யும அடககிக் கொண்டு,

**நேசமில் வதுவை நாச காரணமே**

எனகிறாள.

இந்த உரையாடலில் உண்மையான வெற்றி வாணிக் குத்தான். ஜீவகனது நிலை பரிதாப நிலையாகவே காண கிறது. (முதல் அஙகம, நான்காம களம).

**பலதேவனுக்கே உடன்படல் கடமை**

என்று அரசன் சொல்ல, 'இலையெனில்?' என்று எவ்வ ளவு துணிச்சலாக எதிர்த்துக கேட்கிறாள் வாணி! இப் படித் தைரிய லட்சுமியாகக் காட்சியளிக்கும வாணியின் குணசசித்திரம எபபடி வளர்ந்து வருகிறது பாருஙகள்!

இந்தத் தைரிய லட்சுமிக்கு முன் கிழ அரசனின் குருட்டதிகார மாட்சியும் கிழத்தந்தை சகடனின் லௌகிகப் பேயாசையும் வெளிப்பட்ட கள்வர் போல் விழிக்கின்றன.

இத்தகைய காதலியின் பேச்சிலும் காதல் தனக்குரிய ஆவேச நிலையில் வெளியிட்டுக் கொள்ளாமல், மனோதத்துவக்கலைஞன் ஒருவன் பற்றற்ற பாவனையில் காதலின தத்துவத்தை உணர்த்துவது போல், தன்னை வெளியிட்டுக் கொள்வது குறிப்பிடத்தக்கது. வாழ்க்கையாகிய பாலையில் காதல் தருவாகத் தழைக்கிறது என்றும், வாழ்க்கை நெறியில் தாகமும தாபமும் நீக்கும் ஊற்றுய ஊறுகிறது என்றும் இவ்விதமாகக் காதல்-வேதாந்தம் பேசுகிறுள வாணி. இது ஒரு குறையென்றே ரஸிகர் கருதுவர்,

காதல் எனபது உணர்சசிகளின் சக்கரவர்த்தி. இந்த உணர்சசியின் வசமாகிப பேசும பேச்சல்ல வாணி காதலின் நிலைமை குறித்துப் பேசும பேசசு. தன கைபபிடியில் காதலை அடக்கி வைத்துக்கொண்டு மனோதத்துவ சிந்தனைகளைக் கவிச்சுவையுடன வெளியிடுவது போல் அல்லவா பேசுகிறுள ?

மனோதத்துவ ரீதியில் பார்த்தாலும வாணியின் பேச்சில் குறைபாடு இல்லாமல் இல்லை. இவள் கருதுவதுபோல் பகுத்தறியும் மனவலிமைக்கும் காதலுக்கும் தொடர்பே இல்லையென்றுதான் சொல்ல முடியுமா? பலதேவனை விட்டு நடராஜனைக் காதலனுகத் தேர்ந்தெடுத்ததில் இவள் பகுத்தறிவுக்கு இடமே இல்லையா ?

நடராஜனின் அறிவுத் திறமையும் ரஸிகத்தன்மையும் வேறு குண நலன்களும் இவள் பகுத்தறிவையும் வசீகரித்துத்தானே இருக்கவேண்டும் ? குடிலபுத்திரன் ஒரு சாதாரணப் படைவீரன் ; விசேஷ அறிவுத்திறமை இல்

லாதவன்; சன்மார்க்கப் பெருநெறி பிடித்து ஒழுகாதவன். இத்தகைய பேர்வழியைக் காட்டிலும் இயற்கையழகுகளில் ஈடுபட்டுத் தியான சிந்தனைகளில் மூழ்கிக் களிக்கும் நடராஜன்தானே வாணியின விவேகத்தையும் கவர்ந்திருக்கக் கூடும்? உருவ அழகிலும் பலதேவன எங்கே, நடராஜன் எங்கே?

ஆனால் இந்தக் காரணங்களைத் தன் காதலனுக்கு அனுகூலமாக வாணி எடுத்துக் காட்டவில்லை. தந்தையும் அரசனும—ஒருவன் பண ஆசையாலும், மற்றவன் அறியாமையாலும்—நடராஜனை விரும்பவில்லை; வெறுத்துப் பேசவும் முன்வருகிறார்கள். 'அப்பேர்ப்பட்டவர்களின் துரபிபிராயங்களை மறுத்துத்தான் என்ன பயன்?' என்று கருதியே வாணி நடராஜனது பண்புகளையும பண்பாட்டையும எடுத்துக்காட்டாமல் இருந்துவிடுகிறாள் என்று கருதலாம்.

இந்த நிலையில் வாணி 'நேயமும் ஆக்கபபடும் பொருள் ஆமோ?' என்று பொதுவாகப் பகுத்தறிவை மீறிச் செல்லும காதலின சக்தியை வறபுறுத்தியிருக்கவும் கூடும. இது எபபடி யிருந்தபோதிலும, வாணி பாடும காதலின நிலைமை இவளது உரையாடலின இயறகையான பகுதியாக அமையவில்லை. எனினும், இபபகுதி மனோன் மணீய நாடகத்தின் அருமையான கவிச் சித்திரப பகுதிகளில் ஒன்றாகும்.

மனோன்மணியைப் போல் வாணியைச சுந்தர முனிவரின் வேதாந்தமோ ஞானசொரூபமோ ஆட்கொண்டிருக்கவில்லை. மனோன்மணியின் தவக்கொள்கையோ, பகுத்தறிவைக் கடந்த சிந்தனைகளோ இவள உள்ளத்தில் இடம் பெற்றிருக்கவில்லை. பொதுவாக வாழ்க்கையின் பிரத்தியட்ச உண்மைகளையே இவள் அறிந்து ஒழுகி வருகின்றாள்.

இத்தகைய வாணியும கடைசியாக வேதாந்தம் பேசிக்கொண்டே மனோன்மணியுடன் ஒத்துப போவதைக் காண்கிறோம். தவத்தைக் குறித்து ஒரு புதுமைப் பெருங் கொள்கையைமனோனமணிவெளியிட்டதும்,வாழ்க்கையைத் துறக்காமலே முதல்தவ முனிவராகலாம் என்ற புரட்சி கரமான கருத்தை அந்தக் கொளகையில் கண்டு கொண்டதும வாணி,

**அத்தகைத் தவம் இங்கு அடியேன்தனக்கும்**
**ஒத்ததே யன்றோ ?**

என்று சொல்வதையும் கேட்கிறோம.

மனோனமணி மீதுள்ள நட்புக்காதலாலும, சுந்தர முனிவரின் ஞானவைராக்கிய மகிமையால் இவனை அறியாமலே உள்ளத்தில வளாநதுகொண்டிருந்த பக்திக்காதலாலும, இவாகளுடைய வேதாநத பாஷையை வாணியும் கிளிபபிளளைபோல சொல்லுகிறாள் எனறு கருதவுமகூடும.

வாணியின குணசசித்திரம கதாநாயகியின குணசசித்திரத்துடன பூரணமடும நிலையிலே தான பொதுவாக உருவாககப பெறுகினறது எனபதில ஐயமிலலை. மனோன மணி ஒரு ஞானக குழநதை யெனறால வாணியை உணாசசி பாலூட்டிச சீராட்டி வளாதத அறிவுப புதல்வியெனறு சொல்லக்கூடும.

மனோனமணியின ஞானம மரபுகளையும் தெயவம போல் வழிபடுகிறது. வாணியின உணாசசி வசமான அறிவுத்திறனோ பொருளறற மரபுகளையும் அறிவுக் கணணை மூடும வழக்கஙகளையும் உதறித்தளளக கூடிய புரட்சி நிலைக்கும சென்றுவிடுகிறது.

மனோனமணி தன் அனபுத் தந்தைக்கும் ஞானத் தந்தையாகிய குருவுக்கும் கட்டுபபட்டு நடக்கும பகதியுள்

ளம் கொண்ட பெண். வாணியின் பக்தியோ பொது வாகத் தன்னையும் தன் காதலையும் சுற்றிப் பிரதட்சிணம் செய்துகொண்டிருப்பது தான்!

இந்தக் குணநிச்சயத்திற்கு உரிய வித்து முதல் அங் கத்தில் இரண்டாம் களத்தில் கன்னிமாடத்தில் நடை பெறும் கழல்விளையாட்டுக் காட்சியிலேயே காணப்படு

தன் காதல்நோயை மனோன்மணியைப் போலவா இவள் அனுபவிக்கிறாள்? கதாநாயகியின் காதல் ஏதோ ஒரு நோய் போலவே முதல் முதல் காணப்படுகிறது. வாணியின் காதலிலோ இத்தகைய பலவீனம் காணப் படவில்லை. வாதாடி வழக்குரைத்தும், தன் நோக்கத்தை நிறை வேற்றிக் கொள்ளப் பார்க்கிறது வாணிகாதல்.

மரபுகளை எதிர்த்துப் பேசும் புரட்சிகரமான மனநிலை யையும் அந்தக் கழல்விளையாட்டிலேயே காண்கிறோம். காமதகனக் கதையில் 'வெற்றி சிவனுக்கல்ல, காமனுக்குத் தான்!' என்றல்லவா இவள் சொல்லுகிறாள்?

## 4. வாணியின் காதலன்

(நடராஜன்)

வாணியின் காதலன் என்றால் தந்த யோக்கியதை இருக்கத் தானே வேண்டும்.

சுத்தமே பித்தன்,
சொல்லுக்(கு) அடங்கான்,
தனியே உரைப்பான்
தனியே சிரிப்பான்!

என்று வாணியின் தந்தையாகிய சகடன் சொல்லுகிறபடி அவ்வளவு மோசமாக இருப்பானோ நடராஜன்? இயற்கைப்

பொருளழகுகளையும் அமைப்புகளையும் உற்று நோக்கி வியந்து பரவசமாகும் நிலையைத் தான் சகடனது லோகாயதக்கண் இப்படிக் கண்டு காட்டுகிறது.

சகடனுக்கு மனிதனை மதிக்கத் தெரியாது; மனிதனுடைய செல்வத்தையும் செல்வாக்கையும் தான் மதிக்கத் தெரியும். மூளையைப்பற்றிக் கவலையில்லை கிடையாது; பணப் பையைப்பற்றிய கவலை ஒன்றுதான்.

இப்பேர்ப்பட்ட ஆசாமிக்கு இயற்கை யழகுகளில் உள்ளத்தைப் பறிகொடுத்த நடராஜன் சுத்தப் பயித்தியம் தானே!

**எங்கெனும் ஒரு பூ**
**இலைகனி அகப்படில்**
**அங்கங்(கு) அதனையே**
**நோக்கி நோக்கித்**
**தங்கா மகிழ்ச்சியில்**
**தலை தடுமாறுவன்.**
**பரற்கலும் அவனுக்(கு)**
**அகப்படாத் திரவியம்;**
**ஆயிரம் தடவை**
**ஆயினும் நோக்குவான்.**
**பேயனுக்(கு) அளிக்கவோ**
**பெற்ற னம் பெண்ணை ?**

என்று சகடன் சொல்வது சகஜம் தானே, இயற்கைப் பித்தனை அறிவானோ பேராசைப் பித்தன்? கவிதையுள்ளம் புரியுமோ காரியவாதிக்கு?

உலகத்தை நன்கு தெரிந்துகொள்ளாத ஜீவகனுள்ளத்திற்கும் நடராஜன் ஒரு புதிர் தான், விளங்காத புதிர்; எனினும் விளங்கிவிட்டது என்று மயங்கவைக்கும் புதிர்!

**அழகிருந்(து) என்பயன் ?**
**தொழிலெலாம் அழிவே !**

என்று கூறும் ஜீவகன் வாணியின் உள்ளத்தைக் கவர்ந்த உருவ அழகை ஒப்புக்கொள்ளத்தான் செய்கிறான். இந்த உள்ளத்தின் அழகுதான் புலனாகவில்லை!

மந்திரி குடிலனுக்கு உலகம் தெரியும்; மனித உள்ளம் ஒரு திறந்த புத்தகம். நடராஜனது நிலைமையும் அவனுக்குத் தெரிந்ததே. தெரிந்தும் அவனை இகழ்கிறான்; அரசன் அவனை வெறுக்குமபடியே செய்கிறான். சகடன் பணத்தைக் கொண்டு உலகத்தை அளப்பது போல், குடிலன் சூழ்ச்சியைக் கொண்டு உலகத்தை ஜெயிக்க விரும்புகிறவன். எனவே, நடராஜனின் உள்ளத்தின் அழகைப் பாராட்ட முடியவில்லை. இந்த அழகை இந்த மந்திரி பார்த்தும் பாராதவன்தான்!

சுந்தர முனிவருக்கு வேண்டியவர்களில் நடராஜன் ஒருவன். 'முனிவர் பிரியன்' என்று குடிலன் குறிப்பிடுகிறான். சேரர் மன்னனாகிய புருஷோத்தமனுக்கு மனோன்மணியை மணஞ் செய்விகக வேண்டுமென்று தீர்மானித்து யாரைத் தூது அனுப்பலாமென்று ஆலோசித்த சுந்தர முனிவர், 'அதற்கு நடராஜன் தான் நமபிக்கையான பேர் வழி; கலியாணத்தைச் சிறப்பாக முடித்துவைப்பான்' என்று அரசனிடம சொல்லுகிறார். இந்த விதமாகச் சுந்தர முனிவரின் பிரியத்திற்கும் நன்மதிபபிறகும் பாத்திரமான நடராஜன் வாணியின் காதலைப் பெறக்கூடிய தகுதி வாய்ந்தவனாக இருந்ததில் அதிசயமில்லை.

நடராஜன் நல்லவன்; உருவ அழகும் உள்ளத்தின் அழகும் ஒருங்கே வாய்ந்த ஆனந்த புருஷன். எனினும் கம்பீரமான குணாதிசயம் வாய்ந்தவன என்று சொல்ல முடியாது.

சாதாரண மக்களின் சுபாவத்தோடு, ஓரளவு மாறு பட்ட சுபாவமுடையவனே தான். செயல்களில் ஈடுபடு வதைக்காட்டிலும், இயற்கையழகில் ஈடுபட்டுத் தன் போக்கிலே தியானம் செய்துகொண்டு போகும் இயல் புள்ளவன். மனித இயற்கையை நன்றாகத் தெரிந்து, செயல்–திறமையால் பலரையும் கவரும் இயல்பு வாய்ந்த வன் அல்லன்.

நடராஜனுக்கு ஓரளவு செயல்–திறமை உண்டென்று சுந்தர முனிவர் கருதுகிறார். சுந்தர முனிவரின் சொற் படியே அரண்மனையிலிருந்து மனோன்மணி முதலானவர் களை தப்பிப்போவதற்குச் சிரமத்தைப் பாராட்டாமல் ஒரு சுரங்க வழி அமைக்கிறான், ஆனால் இவ்வளவு செயல் திற மைக்கும் தூண்டுதல் வாணியின் காதல்தான்; அவளும் அந்த வழியாகத் தப்பி மனோன்மணியுடன் போவாள் என்ற எண்ணம் தான். நடராஜனே இதை ஒப்புக்கொள்கிறான்,

பின்னிய கூந்தல்—
பேதையின் இளமுகம்
என் உளத்(து) இருந்(து) இங்கு
இயற்றுவ(து) இப்பணி!

'நான் இந்தப் பணியை இப்படிச் செய்துகொண்டிருக் கிறேன். சுந்தர முனிவருக்காக என் உள்ளத்திலே பிர திஷ்டை செய்துவைத்திருக்கும் அந்தப் பெண் தெய்வ மல்லவா இந்தப் பணியை இவ்வளவு அற்புதமாக இயற் றிக்கொண்டிருக்கிறது ?'' என்று தனக்குத்தானே சொல் லிக் கொள்ளுகிறான். இதனால் 'நடராஜனுக்குள்ள செயல்- திறமை அற்புதமானது என்று ஏற்படாது. வாணிக் காகவே தியானமும் செயலாகக்கூடும், என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது,

மற்றப்படி, இயற்கையின் காதல் உலக இயற்கையை யும் பயன்படுத்திக்கொண்டு வெற்றி மயமாக வாழ்க்கை

யைத் திறம்பட நடத்தும்படி நடராஜனைத் தூண்டக்கூடு மென்று எதிர்பார்க்க இடமில்லை.

இவன் அருணோதயம் பார்ப்பதற்கென்றே, அதிகாலையில் துயிலுணர்ந்து எழுந்து வசதியான ஓர் இடத்திற்குப் போகிறான். அந்த இயற்கைச் சித்திரம் இவன் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகிறது.

சித்திரக்காரனது எழுதுகோல் தொடத்தொடப் பல உருப்புக்களைப் பெற்றுச் சித்திரம் துலங்குவது போல, உதய சூரியனது பன்னிறக் கதிர்கள் தொடத்தொட இருள் கழிந்து சிறிது சிறிதாய்ப் பொருள்களின் உருவம் தெளியத் தோன்றுகிறது. சுரைக் கொடி படர்ந்த வீட்டின் உச்சிமேல் செருக்கோடு நடந்து சுற்றுமுற்றும் நோக்கிச் சேவல் கூவுகிறது. காக்கைகள் நாலு திசைகளிலும் சிதறிப் பறக்கின்றன. இவற்றையெல்லாம் தியானக்கண்ணை திறந்து அனுபவிக்கிறான் நடராஜன். காகா என்று காக்கைகள் தங்கள் பெயரையே அப்படிக் கோஷித்துக்கொண்டு போகின்றனவாம் — சில பெரிய மனிதர்களைப் போலே)

இப்படியே ஒரு சிறு வாய்க்காலின் விசித்திரங்களையும் பார்த்து அனுபவிக்கத் தெரியும் இவனுக்கு. சிறு புல்லையும் சிறிதென்று இகழாது அதன் பெருமையையும் விஞ்ஞானக்கண்கொண்டு பார்க்கத்தெரியும். மண்ணை வளப்படுத்தும் மண் உண்ணிப் புழு என்ற நாங்கூழ்ப் புழுவுக்கும் நன்றி தெரிவித்து, அதன் பணிகளைக் குறித்துத் தியானம் செய்துகொண்டு போகவும் தெரியும்.

உதாரணமாக, ஓயாது உழைக்கும் புழுவைப் பார்த்துச் சொல்லுகிறான் :

**ஓகோ! நாங்கூழ்ப்**
**புழுவே! உன்பா(டு)**

ஓவாப் பாடே,
உணர்வேன், உணர்வேன் !
உழைப்போர் உழைப்பில்
உழுவோர் தொழில்மிகும்
உழுவோர்க் கெல்லாம்
விழுமிய வேந்துநீ !
எம்மண் ஆயினும்
நல்மண் ஆக்குவை.
விடுத்தனை இதற்கா
எடுத்தஉன் யாக்கை.
உழு(து) உழு(து) உண்டுமண்
மெழுகினும் நேரிய
விழுமிய சேருய்
வேதித்(து) உருட்டி
வெளிக்கொணர்ந் தும்,புகழ்
வேண்டார் போல,
ஒளிக்குவை உன்குழி
வாயும்ஓர் உருண்டையால் !

[ஓவா-ஓயாத. விழுமிய-சிறந்த. வேந்து-வேந்தன். இதற்கா - இதற்காக. யாக்கை - உடம்பு. வேதித்து - பேதித்து.]

இந்த விதமாகப் புழுவும் உழைப்பு கடமை தியாகம் முதலான பாடங்களைக் கற்பிக்கிறது. புல்லும் கல்லும் இப்படியே பல போதனைகள் செய்கின்றன.

இந்தப் போதனைகள் இவனுடைய உழைப்பையும் செயல் - திறமையையும் விசேஷமாகத் தூண்டா விட்டாலும்,

ஈண்(டு)எப் பொருள்தான்
இலக்கற்(று) இருப்பது ?

என்ற ஒரு பாடத்தை, மனமெய்-மொழிகளாலும் இவன் கற்றுக் கொள்ளும்படியாகச் செய்துவிடுகின்றன. மனித வாழ்க்கைக்கும ஓர் இலக்கு அல்லது லட்சியம் வேண்டு மென்று துணிந்து,

**எவ்வினை யோர்க்கும்**
**இம்மையில் தம்மை**
**இயக்குதற்(கு), இன்பம்**
**பயக்கும்ஓர் இலக்கு**
**வேண்டும். உயிர்க்(கு) அது**
**தூண்டுகோல் போலாம்.**

என்கிறான்.

நடராஜனுடைய வாழகககைக்கு இன்பம பயக்கும லட்சி யம கிடைததுவிட்டது. அதுதான வாணியின காதல்.

## இயற்கைப் பண்டிதன்

நடராஜனுககு உலகம தெரியாது என்று குடிலன் நினைககிறான. சகடனும அப்படியே நினைக்கிறான். உலகம் தெரியாத ஜீவக மன்னன்கூட அபபடித்தான் அபிப் பிராயபபடுகிறான. எனினும இந்த அபிப்பிராயங்கள் முற்றிலும சரியானவை என்று சொல்லமுடியாது. குடில னுடைய சூழச்சித்திறம இவனிடம் இல்லை என்பது திண்ணம். பணபையின நீளத்தை வைத்து மனிதனின் உயர்வை அளக்கும் 'சகட' சாமர்த்தியமும இவனிடம் இல்லை யெனபது நிச்சயம். ஆனால் ஜீவகமன்னனைக்காட்டி லும் இந்த 'இயறகைப பண்டிதன்' உலக இயற்கையை யும் அதிகமாயத் தெரிந்தவன்தான்.

நடராஜன் லௌகிகப பழக்கவழக்கங்களில் சாதாரண மனிதர்களை ஒத்திராவிட்டாலும், பொதுஜன உள்ளத் தோடும் இயற்கையோடும் ஒருவாறு பழகியிருப்பவன்

தான். புருஷோத்தமனுடைய சேனை படையெடுத்து வந்து அணியணியாக ஒருபுறமாயப் போயக்கொண்டிருக்கும்போது நடராஜன் பார்த்துவிடுகிறான். அந்தப படைவீரர்களின முகக்குறியைக் கவனித்து 'சேரன திருமணத்திற்கு வரவில்லை!' அதறகல்ல இந்த ஆடமபரமெல்லாம!' என்று தீர்மானிக்கிறான.

**வேட்டலோ இதுவும் ?**

[வேட்டல் - கலியாணம் செயதல்.]

என்று தனக்குள தானே சொல்லிக்கொள்கிறான்.

**நெல்லையை வெல்லவே**
**செல்வது திண்ணம்.**
**அந்தோ, அந்தோ !**
**மனோன்மணி வதுவை**
**வந்தவா(று) இதுவோ ?**
**வந்தவா(று) இதுவோ ?**

[நெல்லை-திருநெல்வேலி. ஜீவகனுடைய புதிய தலைநகரம். வதுவை-கலியாணம்.]

என்று பெருமூச்சு விடுகிறான்.

இதே சமயத்தில் இரண்டு உழவர்கள் பேசிக்கொண்டு வருகிறார்கள். அவர்களோடு நடராஜனும் பேச்சுக்கொடுக்கிறான். குடிலனுடைய சூழச்சியையும் வாணியின் நிலையையும்கூட அந்த உழவர்கள் அறிந்தவர்கள என்று தெரிந்துகொள்கிறான்.

**ஏழைகள் ! தங்கள்**
**ஆழமில் கருத்தில்**
**தோற்றுவ(து) அனைத்தும்**
**சாற்றுவர்...........**

என்கிறான்.

சாதாரண ஜனங்கள் உள்ளத்தில் பட்ட உண்மையை உளறிக் கொட்டிவிடுவார்கள். அவர்கள் உள்ளம் குழந்தையுள்ளம்போன்றது என்று சொல்லும் நடராஜனுக்குப் பொதுஜன உள்ளம சுத்தமாகத் தெரியாது என்று எப்படிச சொல்ல முடியும.

அரசியல்-ரகசியஙகள சாதாரண ஜனங்களுக்கும வெளிப்படக்கூடும என்பதையும நடராஜன அறிந்தவன் தான.

**அரசன் அமைச்சர்**
**ஆதியர் தங்கள்**
**சிந்தையில் புதைத்த**
**அந்தரங் கப்பொருள்**
**விழி, முகம், நல்க, மொழி,**
**தொழில், நடை, இவைவழி**
**ஒழுகிடும் ; அவைகளை**
**உழையுளார் தமக்குத்**
**தோற்றிய பலவொடும்**
**தொடுற்துக் காற்றில்**
**தூற்றுவர் !**

[உழையுளர்-பக்கத்தில் உள்ளவர்கள்.]

என்று ஊகிக்கிறவனுக்கு மனித இயற்கையும் ஒருவாறு தெரிந்து தான் இருக்கவேண்டும். இவ்விதமாகத் தான் ஊகித்ததையும் பார்த்ததையும் சுந்தர முனிவருக்குச் சொல்ல வேண்டும் என்று புறப்படுகிருன்.

மனித இயற்கை ஒருவாறு தெரிந்திருக்கும நடராஜன் ரகஸ்யத்தை வெளியிடாதவன் என்பதையும் மேலே காட்டிய நிகழ்ச்சியிலிருந்து ஊகித்துக் கொள்ளலாம். பொது ஜனங்களால் இரகசியத்தைக் காப்பாற்ற

முடியாது என்று சொல்லுகிறவன், அவர்களை ஆழமில்லாத கருத்துள்ள ஏழைகள் என்கிருன். இதனுலேயே நடராஜனை ஆழ்ந்த கருத்துள்ளவன் என்று ஊகித்துக் கொள்வது தவருகாது.

நடராஜன் சூரியோதத்தின் சௌந்தரியங்களை உற்று நோக்கிக் கொண்டிருக்கும் போது, பலதேவனும் வேறு இருவரும் பேசிக் கொண்டிருந்தது இவன் காதில் விழுந்தது. வாணியின் தந்தை (சகடன்) வாணியைப் பலதேவனுக்கு அல்லவா மணம் செய்து கொடுக்க விரும்பியிருந்தான். அந்த நிலையில் வாணியைக் குறித்து அவர்கள் பேசிக் கொண்டிருந்ததை 'அதென்ன சூழ்ச்சியோ? கேட்போம்' என்று மறைந்து கேட்கிருன் நடராஜன். அப்போது பலதேவன் தன்னை நம்பிய பெண்களைக் கெடுக்கும் அயோக்கியன் என்றும் தெரியவருகிறது.

உடனே அவனைத் தண்டிக்க வேண்டுமென்று நடராஜனுக்குக் கை ஊறுகிறது. எனினும்,

**தீண்டவும் வேண்டுமோ தீயனை ?**

என்று தன்னைத் தானே அடக்கிக் கொள்கிருன்.

வேருெரு சமயத்திலும் 'நினைக்கலை தீயனை...நமக்கு ஏன் இச்சினம்?' என்று தன்னடக்கம் காட்டுகிருன். இத்தகைய அடக்க உணர்வுதான் இவனை மற்றவர்களோடு நெருங்கிப் பழக விடவில்லை. தன்னுடைய சிந்தனைகளிலும் தியாகங்களிலும் முழுகிக் கிடப்பான்; அல்லது இயற்கையழகுகளில் தன்னை இழந்து விடுவான்.

இத்தகைய மனப்போக்கு வாய்ந்தவர்கள் வாழ்க்கையினுடைய எதார்த்தங்களைக் கண்டு கூசிப்போவது சகஜம் தான். லட்சியத்திலேயே கண்ணுய்க் காரியத்தைக் கை நெகிழ விடுவதும் உண்டு. பலதேவன் பாதகன் என்

பதை அறிந்து கொண்ட நடராஜன் தக்க நடவடிக்கை எடுத்துக்கொண்டு, பலதேவன் தூது போவதைத் தடுத்திருக்கலாமே. அதனால் ஏற்பட்ட அநர்த்த பரம்பரையையும் விலக்கியிருக்கலாம். அப்படிச் செய்யாததற்குக் காரணம் லட்சியவாதி காரியவாதியாக இல்லாத குறைதான்.

ஆம்; நடராஜன் இயற்கையைக் கற்ற அளவிற்கு மனித இயற்கையைக் கற்றதில்லை; காரிய உலகத்தைக் கற்றதுமில்லை. பெண்மக்களைப் பெரிதும் வியந்து பாராட்டுவதற்கும் இதுவும் காரணமாகும்.

வாணியின் காதலன் காதலியின் பெண்குலத்தை வானளவும் உயர்த்திப் பேசுவதில் அதிக ஆச்சரியமில்லை. மாதருள்ளம் அலையெறியும் கடலைக் காட்டிலும் சலித்துக் கொண்டிருக்கும் என்று நாராயணன் சொன்னதும் நடராஜன் ஆத்திரமாய பதில் சொல்லுகிறான்.

'கரையிலும் வெளியிலும் அலையெறியக் கூடும் பெண்ணுள்ளம்! ஆனால் உள்ளத்தின் ஆழத்திலே கலக்கமும் மயக்கமும் இல்லை அவர்களுக்கு. அன்பும், கொள்கையில் ஊறிய சக்தியும், உண்மைத் தெளிவும் அந்த ஆழத்திலே காணப்படும் நன்முத்துக்கள். அவர்களுடைய உறுதி நாராயணா, உனக்குத் தெரியாது' என்கிறான்.

> **சுற்றிச் சுழலினும்**
> **கறங்(கு) ஒரு நிலையைப்**
> **பற்றியே சுழலும், அப்**
> **படி அலர் புருஷர்!**

[கறங்கு—காற்றாடி. அலர்—அல்லர்.]

என்று பெண்களைப் புகழ்வதோடு, புருஷரையும் பழிக்கிறான். பெரும்பாலும் புருஷர்களெல்லாம் பலதேவனைப்

போல் இருப்பார்கள் என்று நடராஜன் கருதுவது போலவே தோன்றுகிறது.

பெண்களெல்லாம் வாணியுமல்லர்; புருஷர்களெல்லாம் பல தேவனுமல்ல!—என்பதை இந்த இயற்கைப் பண்டிதன் அறிந்து கொள்வதற்கு அவகாசம்தான் ஏது? சந்தர்ப்பம்தான் எங்கே?

**புருஷரே புலையர்,**
**நிலையிலாப் பதடிகள்,**
**இருள்அடை நெஞ்சினர்,**
**ஈரம்இல் உளத்தர், . .**
**தன்னயம் அன்றிப்**
**பின்னென்(று) அறியார்;**
**காதகர், கடையர்,**
**கல்வியில் கசடர்**

[பதடி-பதர் போன்றவன். கடையா-அதமர். கல்வியில்-கல்வியில்லாத.]

எனறெல்லாம் ஆத்திரமாக அடுக்கிக் கொண்டே போகிறான் நடராஜன்.

பெண்கள கெடுவதெல்லாம ஆணகளாலேதான் என்கிறான.

**அவாவிற்(கு) அளவிலை;**
**அன்போ அறியார்!**
**மணமும் அவர்க்(கு) ஒரு**
**வாணிகம், அந்தோ!**

என்று கூறுகிறவன், ஆண்குலத்தையெல்லாம் பலதேவனாகவும் சகடனாகவும் பார்க்கிறான் என்பது வெளிப்படை. என்ன அனுபவக் குறைவு! என்ன பட்சபாதம்!

ஒருவாறு உலக இயற்கை தெரிந்திருந்தபோதிலும், கருத்தாழமும் தன்னடக்கமும் உடையவனாக இருந்த போதிலும், நடராஜன் காரிய உலகம் அவ்வளவாகத் தெரியாத லட்சியவாதிதான். செயற்கைத்திறன் குறைந்த இயற்கைப் பண்டிதன்தான்.

## 5. மனோன்மணியின் தந்தை

இந்த நாடகத்தின் கதாபாத்திரங்களில் நடுநாயகம் போலத் தோன்றும் ஜீவக மன்னன் சர்வசாதாரணமான மன்னர்களில் ஒருவன்தான். இவனுடைய பெருமையெல்லாம் பரம்பரைப் பெருமைதான்.

**ஆதி இன்னதென்று**
**ஓதுவதற்(கு) அரிய**
**வழுதியின் தொழுகுலம்**

[வழுதி - பாண்டியன். தொழுகுலம - தொழத் தகுந்த வம்சம.]

என்று தன் குலத்தைக் குறித்துப் பெருமை பாராட்டிக் கொள்கிறான் ஜீவகன்.

தமிழ நாட்டு வேந்தர்களின் பழம பெருமையைக் குறிததுத் தமிழர்கள் பிரமாதமாய்ப் பேசுவதுண்டு. அவர்கள் குலத்தை 'பண்டைக்குலம்' என்றும், 'பண்டு தொட்டு வரும குலம்' என்றும் சொல்லுவார்கள். இதே பெருமையைத்தான் பாண்டியனும் சொல்லிக் கொள்ளுகிறான். இந்தப் பரம்பரைப பெருமையைத் தவிர வேறு விசேஷமான பெருமை எதுவும் இந்த அரசனுக்கு இருபபதாகத் தெரியவில்லை.

போர் வந்துவிட்டது என்று தெரிந்ததும் ஜீவகன் வீரவெறியும் தேசபக்த வெறியும் கொண்டு ஒரு சொற்பொழிவு செய்கிறான் படைவீரர்களுக்கு.

ஒருதுளி யேனும்நீர்
உண்டுளீர் ஆயின்,
கருதுவீர் தாம்பிர
பன்னியின் கட்டுரை!

[தாம்பிரபன்னி-தாம்பிரபர்ணி.]

என்ற பீடிகையோடு, அந்த நதிமாதா அலையெறிந்து வீரப் பிரசங்கமும் சுதந்தரப் பிரசங்கமும் செய்து, அன்னியன் கைப்படாத கற்புடன் வாழவிரும்புகிறாள், என்கிறான் ஜீவகன்.

பிறகு தமிழ்மொழியின் பெயராலும் சுதந்தரவெறியை உண்டு பண்ண விரும்பி,

விந்தம் அடக்கினோன்
தந்தநல் தமிழ்மொழி
தற்சுதந் திரம் அறும்
அற்பர் வாய்ப்படுமோ ?

[விந்தம் அடக்கினோன்—விந்திய பர்வதத்தைக் கர்வ பங்கம் செய்த அகஸ்திய முனிவன்.]
என்று கேட்கிறான்.

உரிமைமேல் ஆண்மை
பாராட்டார் சாந்தம்,
பெருமையில் பிணத்தில்
பிறந்ததோர் சீதம்
அந்தணர் வளர்க்கும்
செந்தழல் தன்னிலும்
நாட்டபிமானம் உள்
மூட்டிய சினத்தீ
அன்றோ வானோர்க்கு
என்றுமே உவப்பு ?

[பெருமையில்—பெருமையில்லாத. சீதம்—குளிர்ச்சி. செந்தழல்—(இங்கே) யாகாக்கினி.]

என்றெல்லாம் தேசபக்தியை ஒரு மதமாக்கிப் பேசுகிறான். உரிமைக்காகப் போராடாத சாந்தம் பிணத்தின் சாந்தம் அல்லது சீதந்தான் என்று சொல்லிவிட்டு, தேசபக்தர்களின் தர்மாவேசத்திலே பொங்கும் கோபத்தீயே யாகத்தீயைக் காட்டிலும் தேவர்களுக்கு மகிழ்ச்சியளிக்கக் கூடியது எனகிறான். இப்படியெல்லாம் பேசும் மனநிலை சாமானியமாக இருக்கமுடியுமா?

ஆனால் இவ்வளவு வீரமும் தேசபக்தி வெறியுங்கூட இவனுக்குப் பரம்பரையாகக் கிடைத்த பாக்கியம் என்றே தோன்றுகிறது; தன் சொந்த முயற்சியாலும், பகுத்தறிவாலும் சம்பாதித்துக்கொண்ட மனநிலையாகக் காணப்படவில்லை. ஏனென்றால் இந்த மன்னனுக்குச் சொந்த புத்தி என்ற சக்தி இருப்பதாகத் தெரிந்துகொள்ள முடியவில்லை.

புத்தியே சகல
சக்தியும்

என்று தன் புத்தியைக் குறித்துப் பெருமை பாராட்டிக் கொள்ளும் குடிலனுடைய புத்தியைச் சார்ந்துதான் இந்த அரசன் பிரகாசிக்க விரும்புகிறான். தனக்காக, நினைத்துத் தானே ஒரு முடிவிற்கு வரும் சிரமத்தைக்கூட இவனால் மேற்கொள்ள முடியவில்லை. குடிலனே தனக்காக நினைக்கிறான் என்பதில் இவனுக்குத் திருப்தி; சந்தோஷம், சௌகரியம்.

குடிலனுடைய ஆலோசனை இல்லாமல் இவன் பேசும் இடங்களிலெல்லாம் சர்வ சாமானியமாகத்தான் பேசுகிறான். எதையும் எளிதில் நம்பிவிடுகிறான். குடிலனின்

கைக்கிளியாகத்தான் இருக்கிறான். இதனால்தான் அந்த மந்திரி

**நாமே அரசும் ;**
**நாமே யாவும் !**
**மன்னவன் நமது**
**நிழலில் மறைந்தான்**

என்று தனக்குள் தானே இறுமாந்து பேசுகிறான்.

குடிலன் சொன்னபடியெல்லாம் ஆடும் ஜீவகன் தனக்குத் திறமையில்லை என்று கூட உணர்ந்துகொண்டதாகத் தெரியவில்லை. குடிலன் இஷ்டப்படியே தான் கூத்தாடுவதைக்கூடத் தெரிந்து கொள்ளாமல் தன் இஷ்டப்படி நடப்பதுபோல் எண்ணித் தனனைத் தானே ஏமாற்றிக் கொள்ளவும செயகிறான,

இந்தப் பரிதாப நிலை ஜீவகனைத் தவிர மற்றவர்களுக்கெல்லாம் வெட்ட வெளிச்சமாகவே இருக்கிறது. அரசன் 'எடுப்பார் கைபபிள்ளை' என்கிறான் நாராயணன்.

**வெளுத்த எல்லாம்**
**பாலெனும் மெய்ம்மை**
**உளத்தான்; களங்கம்**
**ஓரான் ; குடிலனோ**
**சூதே உருவாய்த்**
**தோன்றினன்**

என்று எவ்வளவு தெளிவாக நாராயணன் தெரிந்து கொண்டிருக்கிறான் !

மாப்பிள்ளையாக வரப்போகும் புருஷோத்தமனும் மாமனரின் இந்தப் பரிதாப நிலையை எப்படியோ அறிந்து கொண்டிருககிறான். குடிலனுடைய கபடத்தை ஜீவகன்

உணர்ந்துகொள்ளவில்லையே என்று அதிசயப்படுகிறான் புருஷோத்தமன். குடிலனை ஜீவகன்,

**உண்மைக்கு உறைவிடம்**
**திண்மைக்(கு) அணிகலம் ;**
**சத்திய வித்து,**
**பக்தி உன்மத்தன் :**
**ஆள்வினை தனக்(கு) ஆள்**
**கேள்விதன் கேள்வன்**

[திண்மை - வலிமை, அணிகலம - ஆபரணம், ஆள்வினை-முயற்சி. கேள்வன் - நாயகன்.]

என்றெல்லாம் புகழ்ந்துபேசி, அந்த இரவிலும் அந்த மந்திரி தனக்காக உழைத்துக்கொண்டிருக்கிறான் என்கிறான். அதே சமயத்தில் ராஜத்துரோக முயற்சியிலே ஈடுபட்டிருந்த அந்தப் பேர்வழியை அப்படியே பிடித்துக் கொண்டு அங்கு வந்து சேர்ந்த புருஷோத்தமன் ஜீவகன் சொல்லிக் கொண்டிருந்ததைக் கேட்டதும்,

**எத்தனை களங்கமில்**
**சுத்தன் ! கஷ்டம்**

என்று தனக்குள் தானே வருந்துகிறான்.

புருஷோததமனிடமிருந்து தூதுவந்து ஜீவகனைப் பேருககுக் கப்பம் கட்டிப் பிழைத்துப் போகுமாறு சொன்ன வேலைக்காரனை கூட ஜீவகனுடைய பலவீனத்தைத் தெரிந்து கொண்டு.

**என்மதி குறித்தாய் !**
**எடுத்தகைப் பிள்ளாய் ?**

[என் - என்ன. மதி - புத்தி.]

என்று இடித்து அறிவுறுத்தப் பார்க்கிறான்.

குடிலனுக்கோ ஜீவகனுடைய நிலைமை முழுதும ஒரு திறந்த புஸ்தகம் தான். அரசனுடைய அறிவுக்குறை வையும தன்னுடைய புத்திசாமர்த்தியங்களையும் ஒப்பிட்டுப் பார்த்து உத்ஸாகப்படுத்துகிறுன் குடிலன்.

**எத்தனை பித்தன் இவ்**
**அரசன்!**

என்று எண்ணிப் பார்த்ததும்,

**உரைக்கும் முன் கருதுவம்**
**நமக்குறும் நலமே**

என்று தன்னுடைய அறிவுத்திறமையையும் எண்ணிப் பார்த்துப் பெருமிதம கொளகிறுன்.

இத்தகைய பலவீனஙகளோடு கூடிய ஜீவகன் 'மரபு' என்றும, 'அநுஷ்டானம' எனறும், 'பரமபரைப பெருமை என்றும மயஙகிப்போவதில் அதிசயமில்லை. இவனுடைய தேசபக்தியும வீரமும கூட இத்தகைய மன நிலையின் பகுதியாகவே யிருக்கின்றன,

எனினும காவிய நாயகியாகிய மனோன்மணியின் தந்தையல்லவா? பரமபரைப பெருமையோடு, தியாக புத்தியோடு விளங்கும மனோனமணியின தந்தை என்ற பெருமையும் ஜீவகனுககு அளிககவேண்டியதுதான.

## நம்மைக் கவரும் குணவிசேஷம்

பரம்பரைப பெருமையில் ஊறிபபோயிருக்கும் ஜீவக மன்னன் தன் ஏகபுத்திரியாகிய மனோனமணியைக் குறித்து எவ்வளவோ பெருமை கொண்டிருக்கிறுன என்பதில் சந்தேகமில்லை. இந்த அருமைத் திருமகள்மீது எவ்வளவோ அனபு வைத்திருக்கிறுன என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. மகளுக்குத் தந்தையாக இருந்த

தோடு ஓரளவு நண்பனாகவும் இருந்து, தாயில்லாத அந்தப் பெண்ணின் உள்ளத்தை ஒருவாறு அறிந்துகொண்டவன் தான்.

எனினும் மனோன்மணியின் காதல் நோயை அறிந்துகொள்ளும் அறிவுத் திறமைகூட இந்த அரசனிடம் காணப்படவில்லை. பரம்பரை என்றும் அனுஷ்டானம் என்றும் பிரமாதப் படுத்திக்கொண்டு தன் சொந்த மூளைக்கு வேலை கொடுக்க அஞ்சுகிறவன் இவன். அதனால் தான் விலகி யிருந்த குடிலனை தெரிந்துகொண்ட அளவிற்கும் காதலால் வருந்தும் தன் மகளைத் தந்தை தெரிந்துகொண்டானில்லை.

தன் மகளையே தெரிந்துகொள்ளாதவன் பிறரை எப்படித் தெரிந்துகொள்ள முடியும்? நடராஜனையும் தெரிந்துகொள்ளவில்லை; நாராயணனையும் தெரிந்துகொள்ளவில்லை. விசேஷ குரு பக்தியுள்ளவனாக இருந்தும் குருவாகிய சுந்தர முனிவரையும் தெரிந்துகொண்டானில்லை.

குடிலனுடைய சூழ்ச்சிக்கு இரையாகி ஒருசமயம் குருவையும் சந்தேகப் படுகிறான். குடிலனுடைய மகனான பலதேவனின் அயோக்கியதை எத்தனையோ பேருக்கு எவ்வளவோ வெளிப்படையாகத் தெரிந்து விட்டபோதிலும் ஜீவகனுக்கு அதைப்பற்றி ஒன்றும் தெரியாது. இப்பேர்ப்பட்ட 'பிரகஸ்பதி' கபட நாடகங்களில் கைதேர்ந்த குடிலனை அறிந்துகொள்ள முடியுமோ?

திருநெல்வேலிக் கோட்டை கொத்தளங்களைப் பௌராணிகர்களின் தோரணையில் குடிலன் வருணிக்கத் தொடங்கியபோது சுந்தரமுனிவருக்கு அருவருப்பாகவே இருந்தது. நகரவாசிகளுக்கும் அது வீணான புராண-

மாகவே தோன்றியது. அச்சமயம் அரசன்கூட விரஸம் அடைந்ததாகவே ஒரு நகரவாசி அபிப்பிராயப் படுகிறான்.

**விரஸமாய் அரசனும்**
**வியர்த்தனன் கண்டேன்**

என்கிறான் அவன். எனினும் இந்த அரசன் பெரும்பாலும் குடிலனுடைய சூழ்ச்சிகளையும் பேச்சையும் ரஸிப்பவன் தான்.

அந்தக் கணம் விரஸப்பட்ட போதிலும் அடுத்த க்ஷணத்திலேயே குடிலனுக்குப் பின்பாட்டுப் பாடுகிறவன் தான். குடிலன் பொதுவாக முனிவர்களையும், சிறப்பாக சுந்தர முனிவரையும் தாக்கிப் பேசி, 'இந்த ஆசாமிகள் கோவில் ஒன்றையே அறிவார்கள்; கோட்டை கொத்தளங்களை அறிவரோ? நமமுடைய கோட்டை கொத்தளங் களைப் பழித்தற்குக் காரணம அழுக்காறு என்று நாம் சந்தேகமில்லாமல் சொல்லலாமா? குலகுரு அல்லவா? என்று தந்திரமாய்ப் பேசினான். உடனே ஜீவகனும்,

**ஐயரும் அழுக்கா(று)**
**அடைந்தார் மெய்ம்மை,**
**கோவில் தானா**
**காவலர் கடமை?**
**கேவலம், கேவலம்,**
**முனிவரும். ஆ! ஆ!**

என்கிறான்.

குடிலன் எவ்வளவுக் கெவ்வளவு ஜாக்கிரதையாகவும விழிப்பாகவும் இருக்கிறானோ அவ்வளவுக்கவ்வளவு ஜீவ கன் அவனது 'ஹிப்னடிஸ'த்தில் கட்டுப்பட்டு வசிய நித்திரையில் இருப்பவனபோல் நடந்துகொளகிறான்.

ராஜபகதனை நாராயணனை எச்சரிக்கை செய்து பார்த்தும் ஒரு பயனுமில்லை.

**நாரணா ! நீயும்**
**நடேசன் தோழனே**

[நடேசனை - (இங்கே நடராஜனை]

என்று இருவரையும ஒரே பைத்தியமாக்கிப பேசுகிறான். குடிலன் மீதுள்ள மோகத்தினால், பைத்தியத்தினால்,

**நாராயணா உனக்(கு)**
**ஏன் இப் பித்து ?**
**தீரா இடும்மையே**
**தெளிதல் ஐயுறல் !**

[இடுமபை - துனபம, ஐயுறல் - சந்தேகித்தல]

என்று எவவளவு தெளிவாகத்தன் சித்தாந்தத்தை வெளியிடுகிறான ஜீவகன்.

'தெளிந்த விஷயத்தில் சந்தேகம் கொள்வது தீராத் துன்பம்' என்பதை மீற முடியாத ஓர் இயற்கைச் சட்டமாக்கிப்பேசுகிறான். குடிலன் தன்னிடம் அன்பும் ஆர்வமும் உள்ளவன் என்பதும், அவன் பரமராஜ விசுவாசி என்பதும தெளிவாக இருக்கும்போது, அதை சந்தேகிப்பது தீராத் துயரம் தருவது என்பதுதான் பொருள். இந்த ஜீவக சித்தாந்தம் ஒன்றே போதும், இந்த அரசன் உலகத்தை அறிந்தவன் இல்லை என்பதற்கு. உலகம அப்படி ஒரு யந்திரம போலவும், இதில் உளளவர்களெல்லாம் யந்திர உறுப்புக்கள் போலவும் இயங்குகிறார்களென்று ஜீவகன் கருதுவது போலத் தோன்றுகிறது. உண்மையில் மக்கள் இப்படியா இருக்கிறார்கள் ?

பல திசைகளிலிருந்து மோதும் சக்திகளுக்கு இசைந்தபடி கூத்தாடுகிறார்களல்லவா? சூழ்நிலைகளும் மாறிமாறிப்

பாதிக்கின்றன. திட்டங்களும் நோக்கங்களும் ஆசைகளும் குறுக்கும் நெடுக்குமாக ஜீவ ஓட்டங்களை நிர்ணயிக்கின்றன. மக்கள் வளர்கிறார்கள்; மாறுகிறார்கள். 'ராபாட் (Robot) மனிதன்போல் ஒரே மாதிரியாக நடந்து கொள்வதில்லை. இந்த உலகஞானமில்லாத ஜீவகன் மக்களை எப்படிச் சரியாக அறிந்துகொள்ள முடியும்?

பல சந்தர்ப்பங்களையும் பார்த்துத்தானே மக்களை மதிக்கவேண்டும்? சந்தர்ப்பங்களின் மாறுதல்களுக்குத் தக்கபடி புதிய சந்தர்ப்பங்களை முன்னிட்டு ஒருவன் தான் தெரிந்து கொண்டிருந்த விஷயங்களைக் குறித்தும் புனராலோசனை செய்யவேண்டியதுதான். இப்படி உலக இயற்கையை அறிந்து கொள்ளாமல்தான் ஜீவகன் தடுமாறிப் போய்க் குடிலன் தோண்டிய குழிக்குள்ளே விழப் பார்க்கிறான்.

குடிலனோ கால பேத இயல்புகளுக்கும் சந்தர்ப்பங்களுக்கும் தகுந்தபடி திட்டத்தை உருவாக்கிக் கொண்டே போகிறான். அவன் பாவ புண்ணியங்களை லட்சியம் செய்யவில்லை என்பது உண்மைதான். எனினும், அவனுடைய புத்திக் கூர்மை அதிசயமானதுதான். அத்தகைய மந்திரிக்கு இந்த அரசன் அடிமையாகி விட்டதில் என்ன அதிசய மிருக்க முடியும்?

உலகம் தெரியாத ஜீவகனுக்குப் பெண்ணுலகம் ஒரு சிறிதும் தெரியவில்லை. இதனால்தான் வாணியின் காதல் மணத்தை வாணிப மணமாக்க உடன்படுகிறான். தன அருமை மகளையும் குடிலன் மகனுக்கு மணஞ்செய்து கொடுக்கப்பார்க்கிறான். மனோன்மணி 'பிதுர் வாக்கிய பரிபாலனம்' என்ற பழைய லட்சியத்தை ஒரு தவமாக மதிப்பதால் அவள் விஷயத்தில் ஜீவகனுடைய அதிகாரம் அவ்வளவு கொடுமையாகத் தோன்றவில்லை.

வாணியோ ஒரு புதுமைப் பெண்; சுதந்திரப் பிரியை. அவள் விஷயத்தில் அரசன் அதிகாரம் செலுத்தப் பார்ப்பது எவ்வளவு அநியாயம்!

தன் மகளையும் அறிந்து கொள்ளாதவன், வாணி நடராஜன் சகடன் சுந்தரமுனிவர் புருஷோத்தமன் முதலானவர்களையும் அறிந்து கொள்ளாததில் அதிசயம் ஒன்றுமில்லை. ஸ்தூலமாக ஏதேதோ கொஞ்சம் தெரிந்து கொண்டிருக்கலாம். இதனால் அவர்களைச் சரியாக மதித்துக் காரியங்களை நடத்திக்கொண்டு போகமுடியுமா?

இவன் நண்பர்களைப் பகைவர்களாக நினைக்கிறான்; பகைவர்களை நண்பர்களாக மயங்குகிறான்.

**நம்பினோம் நார**
**யணனை அதற்கா**
**வம்பே செய்தான்**
**மாபா தகன் அவன்**
**நட்பே நமக்(கு) இங்(கு)**
**உட்பகை ஆனது!**

என்று எவ்வளவு லேசாகத் தீர்மானித்து விடுகிறான், குடிலன் பேச்சைக் கேட்டுக் கொண்டு.

நான் மதுரையை விட்டுத் திருநெல்வேலிக் கோட்டையும் அரண்மனையும் கட்டிக் கொண்டதற்காக முனிவர் மனத்திலே 'கல்மஷம்' கொண்டிருக்கிறார் என்றுகூடத் தீர்மானித்து விடுகிறான். குடிலனை ஒப்பற்ற நண்பன் என்றும் முடிவு கட்டுகிறான்.

இத்தகைய புத்திசாலி ஆத்திரப்பட்டும் காரியம் செய்வதென்றால், அது எவ்வளவு விபரீதமாகக்கூடும்? குடிலன் பேச்சைக் கேட்டு ராஜபக்தனான நாராயணனுக்கு மரணதண்டனை விதிக்கவும் துணிந்தான் என்றால், இந்த அரசன் பகுத்தறிவுக்கு எவ்வளவு தூரம் ஓய்வு கொடுத்தி

ருக்க வேண்டும? எவ்வளவு தூரம மன எழுச்சியே புத்தி சாலித்தனம என்றும, நியாயத் தீர்ப்பு என்றும் மயங்கிப போயிருக்கவேண்டும்!

தன படைவீரர்களில் ஒருவனுகிய முருகனை நோக்கி, இவனை நொடிப பொழுதில் கொண்டுபோயக் கழுவேற் றுங்கள்' என்கிருன். அரசன நாராயணனைக் குறித்து இப்படிச் சொன்ன போதிலும், முருகன் 'குடிலரே! வாரும்' என்று குடிலனைக் கூவியழைக்கிருன் கழுமரத் திற்கு! 'குடிலனைத் தவிர வேறு யாருக்கு அந்தத் தண் டனை பொருந்தும?' என்பது முருகன் மனநிலை. உடனே ஜீவகன்,

**மாட்டுதிர் இவனையும்**
**வன்கழு அதனில்**

[மாட்டுதிர் - மாட்டுங்கள்.]

என்று முருகனுக்கும மரண தண்டனை விதிக்கப் பார்க் கிருன். ஆஹா, என்ன புத்திசாலித்தனம்!

இப்படிப்பட்ட அரசனும வீர மன்னனுக தேச பக்தனுகப போர்க்களத்திலே உயிரைக் கொடுக்க வரு கிருன். நெருக்கடியிலே தியாக புத்தி ஏற்பட்டு அது இந்த அரசனுடைய மந்த புத்தியையும் ஒருவாறு தீட்டி விடுவது போலத் தோன்றுகிறது. இதனுல் ஓர் அரசன் செய்யவேண்டிய சீர்திருத்தங்களைக் குறித்தும தேசப் பணியைக் குறித்தும் பிரமாதமாகப் பேசுகிருன் சுந்தர முனிவரிடம்.

**ஆதலால் அடிகாள்!**
**பூதலத்(து) உயர்ந்த**
**மேதையில் மிகுந்த**
**மானிடர்க்(கு) அரசராய்**

வந்தவர் தற்தமக்(கு)
　　உற்ற மதித்திறம்
எட்டிய மட்டும்,
　　குற்றம் விடுத்துக்
காலகதிக்(கு) அனு
　　கூலமாய் நவீனச்
சீர்பல திருத்தி,
　　ஓர் இயல் புதிதாய்
நாட்டித் தமது
　　நாட்டுளோர் சுகம்.

பாராட்ட வேண்டும் என்கிருன்,

மனோன்மணி தன் தந்தைக்காக எத்தகைய தியாகத்தையும் செய்யத் துணிந்தாள். இவளுடைய தந்தை எவ்வளவோ மட்டமான அரசனுயிருந்த போதிலும் தியாக புத்தியுடன் விளங்குவது பொருத்தம்தான். இது ஒன்றே இந்தக் குறிசயத்தில் நம்மைக் கவரும் அம்சம்.

## 6. மன்னனும் மதிமந்திரியும்

ஜீவகன் சர்வ சாதாரணமான—பரம்பரைப் பெருமை தவிர வேறு விசேஷப பெருமையில்லாத—மன்னன் என்ருல் அந்த அரசனுடைய மந்திரியை ஓர் அசாதாரண மனிதன் என்றே சொல்லவேண்டும்.

புத்தியே சகல
　　சக்தியும்

என்று நம்பி அந்தச் சக்திகொண்டு தன இஷ்டபபடியெல்லாம மனோனை ஆண்டுவந்த மந்திரியை 'மதி மந்திரி' என்று சிறப்பாகக் கூறவேண்டும.

ஜீவகனுடைய பலவீனம இவனுக்குக் கிடையாது. ஆம. அபாயகரமாகத் தன புத்தியைக் கூர்மை செய்துகொண்டு

எந்தச் சந்தர்ப்பத்தையும் பிளந்து பார்த்து நிலைமையைக் கண்டுகொள்ளும் இந்தக் கூர்மையான சகதியை மனச் சாட்சியால்கூடப் பயமுறுத்த முடியவில்லை.

**தீது நன்றென**
**ஓதுவ எல்லாம்**
**அறியார்க்கு அறையும்**
**வெறுமொழி அல்லவோ?**

[அறியார்—அறியாத மூடன். அறையும—முழக்கிக் கூறும்.]

என்று எண்ணுகிறவனைத் தருமம தான் பய முறுத்த முடியுமா?

ஆனால் ஜீவகனுடைய பலமாகிய தேச பக்தியும குடில னுக்குக் கிடையாது; பரமபரைச் செல்வமாக அரசனுக்குக கிடைத்திருந்த அந்த வீரமும இவனிடம காணபபட வில்லை. இவன சுயநலப புலி; சுய காரிய சூரன!

அரசன மூளையை உழைதது உணமை காணபதறகு அஞ்சுகிறான எனபதை நனகறிந்து அவனுக்காகத் தன மூளையை உழைபபதுபோல் பாசாஙகு செய்து சுயகாரிய சித்திக்கு வழிதேடுகிறான். எதையும எளிதில் நம்பிவிடும் அரசனை எளிதில் தன்புத்திக்கு அடிமையாக்கிக்கொள கிறான் குடிலன். 'புலிக்குப் பயந்தவர்களே! என்மேல் படுத்துககொளளுஙகள்' என்று பிறரைத் தூண்டித் தான் தப்பிப் பிழைத்த புத்திசாலியைபபோல், குடிலனும அரச னைத் தான் சுமப்பதுபோல் பாவனை செய்கிறான். அவனைப் பொம்மைபோல ஆட்டிவைத்து,

**மன்னவன் நமது**
**நிழலில் மறைந்தான்!**

என்று மகிழ்ந்து போகிறான்.

ஜீவகனை எவ்வளவுக் கெவ்வளவு பரம்பரையையும் அநுஷ்டானங்களையும் பிரமாதப் படுத்துகிறானோ அவ்வளவுக் கவ்வளவு குடிலனை அவற்றை மதிப்பதில்லை; இகழ்கிறான், தன் உள்ளத்திற்குள்ளே. அரச பரம்பரையெல்லாம் தன்னைப்போன்ற சூழ்ச்சிக்காரர்களால், வேறு சூழ்ச்சிக்காரர்களான குருமார்களின் உதவி பெற்று ஏற்பட்டது தான் என்பது குடிலனுடைய திடமான நம்பிக்கை.

சுந்தர முனிவர் போன்ற குரு சிரேஷ்டர்களையும் முனிவர்களையுமகூடக் கேவலமான சூழச்சிக்காரர்களாகவே மதிக்கிறது குடிலபுத்தி. ஆமாம்; தருமன் கண்ட தரும உலகத்தைத் துஷ்ட உலகமாகத்தானே கண்டான் துரியோதனன்?

தர்ம புத்தியிலும் தியாக புத்தியிலும குடிலனுக்கு நமபிக்கை யில்லாவிட்டாலும, ஜீவகனைபபோல் உலகமும் ஒரே நிலையில் இருப்பதாகவும, உலக மககள் உலகமாகிய நாடக மேடையில், பாவைக் கூத்தில் ஒரேமாதிரி நடித்துக் கொண்டிருபபதாகவும இவன் நமபுவதேயில்லை. மாறும சூழநிலைகளுக்குத் தக்கபடியும், அவர்களுடைய ஆசைகள் நோக்கஙகளுக்குத் தக்கபடியும் வயது முதலிய காரணஙகளுக்குத் தக்கபடியும் மனிதர்கள் மாறுகிறார்கள் என்பது குடிலனுக்கு நன்றாகத் தெரியும. இந்த அறிவையும் பயன்படுத்திக்கொள்ளுகிறான குடிலன், தன்னுடைய சூழ்ச்சித் திட்டங்களிலே.

குடிலனுடைய மனக்கண் எப்போதும சர்வ ஜாக்கிரதையாக விழித்திருக்கிறது என்று சொல்லலாம். திட்டத்திற்கு மேல் திட்டம் போடுகிறான், சந்தர்ப்ப மாறுதல்களுக்குத் தக்கபடியெல்லாம். அரசனுடைய மந்த புத்தியைக் கண்ட வாசகருள்ளம் மந்திரியின் புத்திக் கூர்மையைக் கண்டு வியப்படைகிறது.

குடிலனுடைய புத்திக் கூர்மை இவனுடைய கபட நாடகத்திற்குப் பெரிதும் துணை செய்கிறது. கடைசி வரையில் அரசன் குடிலனை நம்பத்தானே செய்கிறான். நம்பத்தக்கவர்களையும் நம்பாமல்,

**நம்பிய பாய்மரம் பழுது !**

என்று சொல்லும் ஜீவகன் தன்னுடைய வாழ்வாகிய கப்பலுக்குக் குடிலன் என்ற பாய்மரம் ஒன்றே பழுதற்றது என்று துணிகிறான். ஏன? ராஜ்ய காரியமாகிய பாய்க கப்பலையே இந்தப் பாய்மரந்தான் சரியாகச் செலுத்தும் என்று நம்பிவிடுகிறான.

அரசன் எவ்வளவுக் கெவ்வளவு மற்றவர்களை அறிந்து கொள்ளத் தவறுகிறானோ அவ்வளவுக் கவ்வளவு குடிலன அவர்களை அறிந்து கொண்டிருக்கிறான. நாராயணனை ராஜபக்தன் என்று ராஜா அறிந்து கொள்ளவில்லை. குடிலனோ அதை நன்கு தெரிந்துகொண்டே அந்தப் பரம ராஜ பக்தனை ராஜத் துரோகி என்று அரசனை நம்பச் செய்கிறான!

நடராஜனைச் 'சுத்தப் பைத்தியம்' என்றுதான அரசன மதிக்கிறான். அவனுடைய மனநிலையையும் அறிந்தவன்தான் குடிலன். லௌகிக சாமர்த்தியம இல்லாத அவனை அவ்வளவு கெட்டிக்காரன் என்று குடிலன ஒப்புக் கொள்ளாவிட்டாலும் அவனைப் பித்தன் என்று நம்பி யிருக்க முடியாதல்லவா? நாராயணன் ராஜத் துரோகி என்றால், நடராஜன் உலகம தெரியாததாலும் 'முனிவர் பிரியன்' என்ற தைரியத்தினாலும் ராஜ்ய காரியங்களில் மேலுத்தரவுகளுக்குக் கீழ்ப்படிவதில்லை என்று அரசனை நம்பச் செய்துவிடுகிறான் குடிலன்.

இப்படியே சகடன் முதலானவர்களையும் திறந்த புத்தகம்போல் படித்து அறிந்திருக்கிறான். தன்னுடைய புத்தி

யின் சக்தியால், சுந்தர முனிவரையும் தெரிந்துதான் தூஷிக்கிறான் அரசனிடம்.

எனினும் சுந்தர முனிவருடைய ஞானமும் தியாக புத்தியும குடிலனைப் போன்ற சுயகாரியப் புலிகளுக்கு அப்படியே விளங்கியிருக்கும என்று எதிர்பார்க்க இட மில்லை. இதனால்தான் நாடக ஆரம்பத்திலேயே வஞ்சக மாயப் புகழ்ந்து முனிவரையும் வசீகரித்து விடலாமென்று நம்பினான். அந்த வீணான புராணத்திற்கு முனிவரா வசப் படுகிறவர் ?

எனவே அந்த முயற்சியைப் பிறகு அறவே விட்டு அவரைப பற்றி அரசன் கொண்டிருந்த அபிப்பிராயத் தையே மாறறிவிட முயல்கிறான். இந்த முயற்சியிலும் ஓரளவு வெறறிதான கிடைக்கிறது; பூர்ண வெற்றி கிடைக் கவில்லை. பூர்ண வெற்றி கிடைக்குமென்று குடிலனும் நம்பி யிருக்க முடியாது !

தர்ம புத்தியிலும் தியாக புத்தியிலும் குடிலனுக்கு நமபிக்கையே இல்லாததால். குடிலன் சுந்தர முனிவரைப பூர்ணமாக அறிந்துகொளள முடியவில்லை. இதே கார ணத்தால் புருஷோத்தமனையும் பூர்ணமாக அறிந்து கொள்ளவில்லை.

‘புருஷோத்தமன் ஜீவகனோடு போர் புரிய வந்திருபப தால் அந்த வெறறி போரால் கிடைத்தாலும சரி, சூதால் கிடைத்தாலும் சரிதானே ! நாம வஞ்சகமாக ஜீவகனைக் காட்டிக் கொடுத்தாலும புருஷோத்தமன் ஒபபுக்கொள் வான். நமக்கே ராஜயத்தையும் தந்து தனக்கு வேண்டிய கப்பத்தையும் பெற்றுக் கொள்வான் ’ என்று நம்பிவிடு கிறான் குடிலன். இந்தச சூழ்ச்சிக்குள் புருஷோத்தமனு டைய வீரதர்மம் அகப்படாது என்பதைக் குடிலனுடைய கூர்மையான புத்தியும் தெரிந்துகொள்ள முடியவில்லை.

இந்த அளவிற்கு இந்த மதிமந்திரியின் மதியிலும ஒரு குறைபாடு இருக்கத்தான் செய்கிறது. அதாவது, மனித வாழ்வின் உன்னத லட்சியங்களில் நம்பிக்கை இல்லாத குறைபாடுதான். எவ்வளவு புத்திசாலித்தனம் இருந்த போதிலும் இந்த நம்பிக்கை அல்லது விசுவாசம் இல்லா விட்டால், முடிவான வெற்றியை அடைய முடியாது.

இந்தப் பாடத்தை நாம குடில மந்திரியின் குணுதிசயத் திலிருந்து தெளிவாகக கறறுக கொளகிறோம. இந்தக் குறைபாடு இனறைய அரசியல் உலகத்தில் ஆதிக்கம் செலுத்துகிறவர்களிடத்திலும காணப்படுகிறது. புத்திக் கூர்மையைக் கொஞ்சம குறைத்துக் கொண்டாவது தர்ம விசுவாசத்தைத் தூண்டிக் கொண்டிருந்தால் குடிலன் உய்ந்து போயிருப்பான்; தற்கால உலகம உயயும் வழியும் இதுதானே.

## 7. குடில புத்தி

மண்ணைப் பிசைந்து தன் இஷ்டபபடி யெல்லாம் பாண்டஙகளாக வனையும் குயவனைப் போல் ஜீவகனைத் தன் இஷ்டபபடி யெல்லாம் ஆக்கிவைத்த குடில புத்தி இந்த நாடகம் முழுதும் ஊடுருவிக் கிடககிறது. இதனல்தான் குடிலனைக் கதாநாயகன் என்றும சிலர் வாதாடத் துணிந் தார்கள. ஆனல் கதைப் போக்கும் கதையின உட்பொரு ளும் இந்தக் கொள்கைககு விரோதமா யிருக்கின்றன.

குடில புத்தி சுயநலத்திலே ஊறிப் போயிருக்கிறது. சுயநலம் என்றல் சாதாரணமாய்ப் பார்க்கும சுயநலமா? தீவிர சுயநலம என்றலும் போதாது: அதிதீவிரசுயநலம் என்றே சொல்லவேண்டும்.

இத்தகைய சுயநலத்தின் மறுபக்கம் பேராசை அதி தீவிரமான பேராசை. குடிலனுடைய பேராசையை

'பேயாசை' என்றே சொல்லலாம். இது குடிலனுடைய சுயநலத்தை இரவு பகலைத் தொடர்வது போலத் தொடர்கிறது. இவன் அரசனை ஆட்டுவிக்க இந்த ஆசை இவனைப் பேயாட்டம் ஆட்டி வைக்கிறது!

முதலாவது அங்கம் முதலாவது களத்திலேயே குடில புத்தி வெளிப்படுகிறது. குடிலன் ஏதோ ஒரு பக்தன் போலவும் பௌராணிகன் போலவுமே முதல் முதல் பேசுகிறான். குரு பக்தியில் நிகரற்றவன் போலவும் பாசாங்கு பண்ணுகிறான். சுந்தர முனிவரோ அந்த ஆஷாட பூதித்தனத்தைப் புறக்கணித்துவிட்டு மனோன்மணியைப் பார்க்க விரும்பி அரசனும் சிஷ்யர்களும் தொடரப் போகிறார்.

அச்சமயம் குடிலன், 'முனிவர் பல்லக்கு, சின்னம், முதலியவற்றை அதோ அந்த வாசலுக்குக் கொண்டுபோ' என்று சேவகனுக்குக் கட்டளையிடும்போதே தனக்குள்,

நம் காரியம் ஐயம்
எங்காகினும் செல!

முனிவர் எங்கே வேணுமானாலும் போகட்டும்; நம்முடைய காரியம் ஐயம்தான்; என்று சொல்லிக் கொள்கிறான். இது குடில குணாதிசயத்தின் ஜீவ நாடி; குடில புத்தியின் இரகசியம்.

குடிலன் தன்னுடைய வஞ்ச புத்தியை எவ்வளவோ இரகசியமாக மறைத்து வைத்துப் பார்த்தும் சுந்தர முனிவரின் ஞானப்பிரகாசத்திற்கு முன்

வேஷரக சியங்களெல்லாம்
வெட்டவெளி யான!

என்றபடி வெளியாகி விடுகிறது. ஆம்; அவர் கண்ணுக் குத்தான். அவரும் இரகசியமாக மனோன்மணியின் பாது

காப்பிற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து வருகிறார் எனினும் முனிவர் அரசனை வெளிபபடையாக எச்சரிக்க வில்லை. எச்சரித்தாலும பயன்படாது என்பதைத் தெரிந்துகொள்ளாதவரா ?

ராஜ பக்தனுகிய நாராயணனும் இந்த ராஜத் துரோகியின் கபட நாடகததை அறிந்தவன்தான். அரசனை எச்சரித்துப பார்க்கிறுன், குறிபபாகவும் வெளிப்படையாகவும. பயன்படவில்லை. 'தெளிவிலே சந்தேகம் தீராத் துன்பம்' என்கிறுன் அரசன். 'கருமபு கைப்பது உன் வாய்க் குற்றம்' என்று சொல்லிப் போகிறுன். சேவர்களுடன் போனதும நாராயணன தனக்குள்ளே பின்வருமாறு பேசிக்கொளகிறுன :

ஐயோ ! இதற்(கு)என்
செய்வன் ? அரசன்
உறுதியா நம்பினன்,
சிறிதும் பிறழான்,
வெளுத்த எல்லாம்
பாலெனும் மெய்ம்மை
உள்ளத்தான் களங்கம்
ஓரான், குடிலனே
சூதே உருவாய்த்
தோற்றினன் ! அவன்தான்
ஓதுவ, உன்னுவ,
செய்குவ யாவும்
தன்னயம் கருதி
அன்றி மன்னனைச்
சற்றும் எண்ணுன்,
முற்றும் ஜாலமாய்
நல்லவன் போலவே
நடிப்பான், பொல்லா
வஞ்சகன்,

[ என்-என்ன. செய்வன்-செயவேன். பிறழான்-மாறமாட்டான். ஓரான்-அறியமாட்டான். ஓதுவ-சொல்லுவன. உன்னுவ-நினைப்பன. ]

நாராயணனுடைய நுண்ணறிவு எவ்வளவு கூர்மையாகக் குடிலனுடைய குறுதிசயத்தைப் பிளந்து பார்த்து விட்டது, பாருங்கள்! நாராயணனுக்குத் தெரிந்தது ராஜசபையிலுள்ள மற்றவர்களுக்கு இவ்வளவு நன்றாகத் தெரிந்திராவிட்டாலும் ஓரளவு தெரிந்ததுதான். எனினும் அவர்களில் பலரும் நாராயணனைப்போல் இவ்வளவு ராஜ பக்தியுடன் நெஞ்சிலே நினைத்துப் பார்த்திருக்க மாட்டார்கள் குடில புத்தியின் போககை.

'மன்னன் அருகுளோர் அதனை நெஞ்சிலும நினையார், நினையினும் உரையார்' என்று நாராயணனே தனிமொழியாகச் சொல்லிக்கொளகிறான. அவர்களுக்குக் குடிலனைப்போல் அவ்வளவு சுயநலம் இராவிட்டாலும் ஓரளவு இருக்கத்தானே செய்யும்.

**இறைவன் குறிப்பிற்(கு)**
**இசைய அறைவர்,**
**வடித்து வடித்து**
**மாற்றொலி போன்றே !**
**தடுத்து மெய்ம்மை**
**சாற்றுவர் யாரே ?**

[ இறைவன்-அரசன், மாறறொலி-எதிரொலி. ]

என்று வருந்துகிறான நாராயணன். இத்தகைய முகஸ்துதிக்காரர்கள் நிறைந்த ராஜ சபையிலே நாராயணன் பேச்சு எடுபடவில்லை.

சாமானிய ஜனங்களும குடிலனுடைய கபட நாடகத்தை அறிந்தவர்களே. 'குடிலன் கைதொடில்

மஞ்சளும் கரியாகும்மே'! என்கிறான் உழவன் ஒருவன். வேறொரு உழவன்.

> **குடிலன் படிறன்;**
> **கொற்றவன் நாடும்**
> **முடியும் கவர்ந்து**
> **மொய்குழல் மனோன்மணி**
> **தன்னையும் தன் மகற்(கு)**
> **ஆக்கச் சமைந்தான்**
> **மன்னனைக் கொல்ல**
> **மலையனைத் தனக்குச்**
> **சூதாய்த் துணைவரக்**
> **கூவினான் !**

[படிறன்-வஞ்சகன். கொற்றவன்-அரசன். மொய்குழல் நெருங்கிய கூந்தல். மகற்கு-மகனுக்கு. மலையன்-சேரன்.]

என்று சொல்லுகிறான். குடிலனுடைய பேராசையையும் வஞ்சக புத்தியையும் எவ்வளவு தெளிவாக அறிந்திருக்கிறான் இந்தக் குடியானவன் !

குடியானவர்களும் உணர்ந்திருந்ததை நகரவாசிகளும் அறிந்திருந்ததில் என்ன ஆச்சரியம்.!

> **குடிலன் செய்யும்**
> **படிறுகள் முனிவர்**
> **அறியாதவரோ ?**

[படிறு-வஞ்சனை.]

என்று ஒரு நகரவாசி கூறுகிறான், முதலாவது அங்கம் முதலாவது களத்திலேயே.

குடிலனுடைய வஞ்ச புத்தியை ஒருவாறு நகரவாசிகளும் குடியானவர்களுமகூட அறிந்திருந்த போதிலும் அரசன் அறிந்துகொள்ளாததற்கு அவனுடைய புத்திக்

குறைவுதான் முக்கிய காரணமா யிருந்திருக்கவேண்டும். புத்திக் குறைவுள்ள அரசனுடைய மகா புத்திசாலி யான இந்த மந்திரியின் அவ்வளவு புத்திசாலித்தனமும் நேர்மையான நெறியில் செல்லாமல், கோணலான வஞ்சக வழிகளிலேயே சென்று கொண்டிருக்கிறது. இதனாலேயே குடிலனுடைய புத்தியின் நுட்பமான போக்கும் ஓரளவு சிந்தனா சக்தியுள்ள பலருக்கும புலனாகி விடுகிறது.

தன்னுடைய பேராசை எவ்வளவு 'கோணல்மாணலாய்'ச் செல்லுகிறது எனபதைக் கூர்மையான அறிவுள்ள குடிலனதான் உணராமல் இருக்க முடியுமா? யுத்தம் வந்து விட்டது. படைகள் அணிவகுக்கப் படுகின்றன. அரசனை எதிர்பார்த்து ஒருபுறமாக நிற்கும குடிலன தனக்குள தானே பேசிக்கொள்கிறான்.

பரிதியும் எழுந்தது!
பொருதலும் வந்தது—
கருதற்(கு) என்உள ?
காணுதும் ஆ! ஆ!
ஒருவன(து) ஆசைப்
பெருக்கால் உலகில்
வருதுயர் கடலின்
பெரிதே.

[பரிதி-சூரியன். பொருதல்-போர் புரிதல். கடலின்—கடலைக் காட்டிலும.]

என்று எண்ணும் போதே குடிலனும் பெருமூச்சு விடுகிறான்.

எனினும் இந்த நல்ல புத்தியைக் கோணல்—புத்தி கடிந்து கொள்கிறது.

**என்னை? என்மதி**
**இங்ஙனம் அடிக்கடி**
**என்னையும் எடுத்தெறிந்(து)**
**ஏகுதல்? சீச்சீ!**

[என்னை—என்ன.]

*என்று தன்னைத்தானே கண்டித்துக் கொண்ட போதிலும், ஏன், நல்ல புத்தியைக் கோணல் புத்தி எளிதில் வென்று விடுகிறது. நல்ல புத்தியைக் கோழைத்தனம என்று குற்றமும சாட்டுகிறது.*

**பலபெயர் துக்கப்**
**பட்டால் அன்றி,**
**உலகில் எவரே**
**ஒரு சுகம் அணைவார்?**

[அணைவார்—அடைவார்]

*என்பது இந்தக கோணல்-புத்தியின் கோணல்-தத்துவம.*

*'உலகமே இபபடித்தான்; எங்கும் கோணல்! எல்லாம் சுயநலமதான!' என்று குடிலன் தன்னைத்தானே சமாதானம செயதுகொண்டு நல்ல புத்தியை மௌன மாக்கிவிடுகிறான.*

**அலகிலா மானிடர்**
**யாவரும் அவரவர்**
**நலமே யாண்டும் நாடுவர்!**

[அலகிலா-அளவில்லாத. யாண்டும-எங்கும; எப போதும.]

*என்று தன கோணல்—புத்தியை அளவு—கோலாகக் கொண்டு உலகத்தை யெல்லாம அளந்து பார்க்கிறான.*

உலகத்தின் புத்திக் குறைவுதான், இவனைப்போல் மற்றவர்களும பெரிய பெரிய வஞ்சகச் செயல்களில் துணிந்து இறஙகாததற்குக் காரணம எனபது குடில சித்தாந்தம.

**தன்னயம் கருதி**
**அன்றித் தமைப்போல்**
**பின்னொருவனை எணிப்**
**பேணுவர் உளரோ ?**

[எணி—எண்ணி.]

என்ற கொளகையுடன் தனனைப்போல் உலகமெல்லாம் தன்நலமுள்ளது தான் எனறு கருதியபோதிலும, உலகமெல்லாம் தனனைப்போல் நுண்ணறிவுளளது என்ருவது பெருமதி படைத்தது என்ருவது நமபவில்லை. குடிலன உலகின் கட்டைச் 'சிறுமதி' எனறு மற்றவர்களுடைய 'புத்திக் குறைவை'ப பழித்துபபேசுகிறது. குடில புத்தி என்ற நெட்டைப் பெருமதி 'மனிதர் மடமை!' என்று மானுடத்தைப பரிகசித்துத் தனக்குள தானே மகிழ்ந்து போகிறது.

'குடிலம்' என்பதற்கே 'வளைவு' 'வஞ்சகம' என்ற பொருளகள உண்டு. ஜீவகனுடைய மந்திரியான குடிலனுடைய புத்தியில் இந்த இரண்டு அமசஙகளையும விசேஷமாய்ப் பார்க்கிருேம்.

நூறுபேர் சேர்ந்து யாத்திரை போனுர்கள. எல்லோருமம கூட்டுப பொஙகலிட்டுச சாபபிட்டுப போனல் செலவு குறையும் எனறு நினைத்தார்கள். ஒரு பெரிய பாத்திரத்தில்—நூறு பேருக்குச சமையல் பண்ணக்கூடிய அணடாவில்—பஙகு பஙகாக அரிசிபோட வேண்டுமெனறு தீர்மானம. இந்த நூறறுவரில் ஒருவன் தன பஙகு அரிசிக்குப பதில் மணலைக கொண்டுவந்து கொதிக்கும் நீரில்

போட்டுவிட்டான், வேறொருவருக்கும் தெரியாமல். '99 பேர் அரிசியாகப் போட்டிருக்கும்போது நானொருவன் மட்டும் மணல் போட்டால் என்ன குடிகெட்டுப்போச்சு! இது என்னுடைய புத்திசாலித்தனம்!' என்று எண்ணிவிட்டான். ஆனால் அந்த நூறறுவரில் எப்படியோ பாக்கிப் பேரும் புத்திசாலிகளாகவே ஒருவரை யொருவர் ஒளித்துப் பங்கு பங்காக மணலைப் போட்டுவிட்டார்களாம்.

கதை எப்படி? இதுதானா உலகமா? 'இல்லை' என்கிறான் குடிலன:

ஜீவயாத்திரையில் எல்லோரும் குடிலர்களாக இருந்து அண்டாவிலே அரிசிக்குப் பதில் மணலையே போட்டுக் கொணடிருந்தால் "குடில புத்திக்குச் சிறப்பு ஏது?—மதிப்பு ஏது?' 'அப்படியிருககுமோ?' எனறு ஒருதரம் தன்னைத் தானே கேட்டுவிட்டு, 'அப்படி இருக்க முடியாது, அயோக்கியத்தனம அதிகமாக இருககலாம; ஆனால் அதனோடு புத்திசாலித்தனமும அதிகமாயச் சேர்ந்திருக்க முடியாது!" என்று முடிவு கட்டுகிறான் குடிலன.

யாத்திரை போன
நூற்றுவர், சோ(று)அடு
பாத்திரம் தன்னில்
பங்கு பங்காக
ஒருவரை ஒருவர்
ஒளித்துப் பருமணல்
இட்ட கதையாய்
இருக்குமோ? அவ்வள(வு)
எட்டுமோ உலகின்
கட்டைச் சிறுமதி?

[சோறு அடு-சோறு சமைக்கும்: மதி-புத்தி.]

*உலகத்தை நன்ருக அறிந்தவன் தான். தான மென்றும தருமமென்றும உலகமறிய விளம்பரப்படுத்திக் கொண்டு செய்கிருர்களே, அந்த 'வண்மை'யின் உண்மை யைத்தான குடிலன் எவ்வளவு தெளிவாகப் பார்த்து விடுகிருன்:*

**தருமம் தானம்**
**என்(று) உல(கு) அறியும்**
**கருமம் அனைத்தும்**
**செய்பவன் கருத்தைக்**
**காணில் நாணமாம்,**
**அவரவர் தமக்கா**
**எண்ணிய எண்ணம்**
**எய்துவான் பலவும்**
**பண்ணுவர் புண்ணியம்**
**போல! எல்லாம்**
**தந்நயம் கருதி**
**அன்றித் தமைப்போல்**
**பின்னெரு வனையெணிப்**
**பேணுவர் உளரோ ?**
**புண்ணியம் ஜீவகா**
**ருண்ணியம் எனப்பல**
**பிதற்றுதல் முற்றும்**
**பித்தே !**

*[எய்துவான் அடையும் பொருட்டு தன்னயம்—சுய நலம். எணி—எண்ணி.]*

*'முற்றும் பித்தே!' என்று முடிப்பது தான் தவறு. உண்மையாகவே ஜீவகாருண்ய உணர்வுகொண்டு சுயநலத்தை ஒழித்துத் தானதர்மங்களையும் புண்ணியகர் மங்களையும் பரோபகாரமாகச் செய்யும் வண்மையாளர்களும்*

உலகத்தில் உண்டு; குடில இருதயத்திற்குத்தான் புலப் படவில்லை. குடில புத்தியைக் குடில இருதயம மறைத்து விடுகிறது. இதனுல்தான். 'உதாரமெல்லாம சுயநலத்தின் மேற் பூச்சும் அல்ல, ஊதாரித்தனமும அல்ல!' என்பதைக் குடிலன் உணர்ந்துகொள்ளவில்லை.

உலகத்திலே குடிலன் நினைப்பதுபோன்ற ஆசாமிகள் நிறைந்திருப்பதுபோலத் தோன்றினுலும்; இந்தத் தற்கால நாகரிக உலகத்திலும் சுயநலமற்ற மகானுபாவர்கள் காந்தி யடிகளைப் போன்றவர்கள்—வாழ்ந்திருக்கிருர்கள்; வாழ்கிருர் கள்! சுந்தரமுனிவர் போன்ற மகாத்மாக்களும், நாராய ணன் புருஷோத்தமன் போன்ற உண்மையான வீரர் களும், குடில புத்தி முடிவான வெற்றியை அடைவதற்கு இடம் கொடுக்கமாட்டார்கள். இவர்களெல்லாம் குடில இருதயத்தைக் கண்டுபிடித்து, 'அவ்வளவு தீமையும் நிலையில்லாதது, அருளுக்குமுன் கதிரொளியில் இருள் போல் மறைந்தொழியும என்று சித்தாந்தம் செய்கிருர் கள். இதைச் சுந்தர முனிவரின் பெயரால் நாம் 'சுந்தர சித்தாந்தம்' என்று குறிப்பிடலாம். சுந்தர சித்தாந்தம் முடிவில் குடில சித்தாந்தத்தை அழித்துவிடுகிறது என் பது மனோன்மணீய ஸாரம.

நாடகம முழுமையும் குடிலனுடைய சிந்தையும் செயலும் சித்தாந்தமும் என்ன ஆர்பபாட்டம செய் கின்றன! எவ்வளவு சூழ்ச்சித்திறமையை வெளியிடுகின் றன! எனினும், 'வெற்றியடைவோம், அது நெருங்கிவிட் டது, என்று எண்ணும்போதே தோல்வி வந்துவிடுகிறது.

பாண்டியன கிரீடம தன்னடிகளில் வந்து விழுந்து விட்டதென்றும, அதை எடுத்து அணிந்துகொளவது தான் தாமதமெனறும, குடிலன கனவுகாணும்போதே படுவீழ்ச்சி வந்துவிடுகிறது. காரணம என்ன? சுந்தர

சித்தாந்தத்திற்கும் சுந்தர இருதயத்திற்கும்தான் முடிவான வெற்றி ஏற்படமுடியும.

குடில இருதயத்திலே அருளுக்கும் உண்மைக்கும் (அஹிம்ஸைக்கும சத்தியத்திற்கும்) இடமில்லை

எங்(கு) இலை அவன் அருள்?
 எல்லையில் அண்டம்
தங்குவ(து) அனைத்தும்
 அவன் அருள் சார்பில்,
அண்ட கோடிகள் இங்(கு)
 ஒன்றோ(டு) ஒன்று
விண்டிடா வண்ணம்
 வீக்கிய பாசம்,
அறியில் அருளலால்
 பிறிதெ(து) ஆகர்ஷணம்?

என்றெல்லாம் கருணாகரர் என்ற சிஷ்யர் சுந்தர இருதயத்தை வெளியிடுகிறாரே. இத்தகைய கொள்கைகளில் குடிலனுக்கு நம்பிக்கையே கிடையாது.

சுந்தரரோ

அகிலமும் தாங்கும்
 அருளில் ஓர் அங்கமாய்ச்
சகலமும் செய்வர்

துக்கத்தைக் கண்டதும அருளை நம்பி அந்தத் துக்கத்தைத் துடைக்க முயல்வார். குடிலன் கொள்கை இதற்கு முற்றும மாறானது.

ஒருவன(து) ஆசைப்
 பெருக்கால், உலகில்
வருதுயர், கடலில்
 பெரிதே!

என்பதைக் குடில புத்தி நன்றாக அறிந்திருக்கிறது. ஆனால் குடில இருதயம சொல்லுகிறது :

**பல பெயர் துக்கப்**
**பட்டால் அன்றி**
**உலகில் எவரே**
**ஒருசுகம் அணைவார் ?**

[*அணைவார் - அடைவார்*]

*இத்தகைய இரக்கமற்ற இருதயம வாழக்கையையும் ஒரு பொல்லாத கொடிய யந்திரமாக மதித்து வேலை செய்துகொண்டுபோகிறது அருளையும் உண்மையையும் மறப்பதாலும மறுபபதாலும் இக்கொள்கை நாசகாரண மாகிறது.*

*குடில இருதயம் சொலுகிறது :*

**வயல்உழும் உழவோர்**
**வருத்தமும் குனிந்திருந்து**
**ஆடை நெய்வோர்**
**பீடையும்; வாகனம்**
**தாங்குவோர் தமக்குள**
**தீங்கும் நோக்கி,**
**உலகிடை வாழா(து)**
**ஓடுவ ரோ பிறர் ?**

*பலர் துக்கப்படச் சிலர் வாழவேண்டும் ; சிலர் வாழப் பலர் தாழவேண்டும். குனிந்திருந்து பாடுபடுகிறவனுக் காக இரக்கப்படுவது பலவீனம். அந்தக் குனிந்த முதுகின்மீது ஏறிச் சவாரி செய்வதே பிழைக்கும் வழி என்பது குடில சித்தாந்தம்.*

*ஆனல் இது மாய வாழ்வு ; உண்மை வாழ்வல்ல ! எனவே, இது மண்ணுவது திண்ணம். குடிலன் கதி இது தானே ? குடில புத்தி சொல்லுகிறது:*

அலகிலா மானிடர்
யாவரும் அவரவர்
நலமே யாண்டும்
நாடுவர். மதிவலோர்
களத்தோடு காலமும்
கண்டுமீன் உண்ணக்
குளக்கரை இருக்கும்
கொக்கென அடங்கிச்
சம்பவம், சங்கதி
என்பவை நோக்கி
இருப்பர் : நலம்வரில்
பொருக்கெனக் கொள்வர் !
எண்ணுர் துணிந்தபின்,
பண்ணுர் தாமதம்.
ஏழையர் அலரோ
இரங்குவர் இங்ஙனம் ?
கோழையர் எங்ஙனம்
கூடுவார் இன்பம் ?

[அலகிலா-அளவில்லாத. யாண்டு-எங்கும்; எப்போதும். மதிவலோர்-புத்திசாமாத்தியம உள்ளவர்கள். களம்-இடம். சம்பவம-நிகழ்ச்சி. ஏழையர்-அறிவில் ஏழைகள்.]

உலகத்திலும சுந்தரமுனிவர் புருஷோத்தமன் போன்றவர்கள் உண்டென்பதையே குடிலபுத்தி அறியாதவாறு செய்துவிடுகிறது குடில இருதயம. உண்மையும் அருளும், புத்திக் குறைவையும் கோழைத்தனத்தையும் காட்டுகின்றன என்று எண்ணும குடில இருதயங்களுக்கு எந்தக் காலத்திலும் — இந்த நாளிலும்கூட — முடிவிலே தோல்வி தான, நாசம்தான்.

## குடிலன் குறுதிசயம்

*ஜீவக மன்னனைத் தன் இஷ்டப்படியெல்லாம் ஆட்டி வைக்கும் குடிலன்,*

**நாமே அரசும்,**
**நாமே யாவும்,**

*என்று தானே எண்ணி மகிழக்கூடிய நிலையை அடைந்து விடுகிறான். எனினும் ஆசைக்கு அளவு உண்டா?*

**இதுதனக்(கு) இறைவன்**
**இறக்கில் யாரே**
**அரசர் ஆகுவர்?**

*[இறைவன்-அரசன்.]*

*என்று தன்னைத்தானே ஒரு கேள்வி கேட்டுக்கொண்டு, மௌனத்தில் ஆழுகிறான். அரசனுக்கு ஆண் சந்ததி இல்லை எனபது தெரியாதா? 'தாயாதிக்காரர்கள் இந்த கோட்டை கொத்தளங்களைக் கேள்விபபட்டாலும வெருண்டு போவார்களே!' என்று திருபதியடைகிறான்.*

**முழுதும் நம்மையே**
**தொழும்வகை இலையோ?**

*[இலை - இல்லை]*

*என்று மறுபடியும தன்னைத்தானே கேட்கிறான். ஆசை இப்படிக் கேட்க, புத்தியும ஒரு பதில் கேளவிபோடுகிறது:*

**கருவியும் காலமும்**
**அறியில் அறியதென்?**

*[அரியது-என்-அருமையானது என்னதான் இருக்க முடியும்.]*

*இப்படிக் கேள்விமேல் கேள்வியாக ஆசை உயர உயரப் பறந்துகொண்டிருக்கையில் பளிச்சென்று நினைவிற்கு*

வருகிறது மனோன்மணியின் காதல் நோய். 'இந்தப் பூங் கொடி படர்வதற்கு ஏற்ற தரு புருஷோத்தமன் என்ற சேரவீரனதான்' என்றார் சுந்தரமுனிவர். குடிலனோ, 'மனோன்மணி ஒருவனைக் கண்டு காதல் கொள்ளவில்லை. பருவத்தால் ஏற்பட்ட கோளாறு என்று ஒரு மானஸ தத்துவ ஆராய்ச்சிக்காரன்போல் ஆராய்ந்து பார்த்து,

> அருகுள(து) எட்டியே
> ஆயினும் முல்லைப்
> படர்கொடி படரும்

என்று முடிவுகட்டுகிறான்.

எனவே தூரத்திலுள்ள தருவைக் காட்டிலும் பக்கத் திலுள்ள எட்டிமரமாகத் தன மகன் பலதேவனையே வைத்துக்கொணடு காரியத்தை முடித்துவிடலாமென்று நினைக்கிறான். இவவளவு பேராசைக்கும் ஒரு காரணம் தன் இஷ்டப்படியெல்லாம் அரசனை ஆட்டிவைக்கலாம் என்ற நமபிக்கை.

இபபடித் தன் மனத்தில்தானே கோட்டை கொத்த ளம கட்டிக் கொண்டிருக்கும் போது, சுந்தரமுனிவர் ஆலோசனைபபடி புருஷோத்தமனுக்கு மனோனமணியை மணஞ் செய்து வைககவேண்டுமே என்ற ஜீவகன் கடிதம் கிடைக்கிறது. அதையும தன ஆசைக்கு ஒரு சந்தர்ப்ப மாக உபயோகித்துக் கொள்ளலாமா என்று ஆலோசிக் கிறான். அந்த மணம் அபபடியே நடந்தாலும நடக்கா விட் டாலும் தன் பேராசை நிறைவேறினல் போதும் என்று எ6

அந்தப் புருஷோத்தமனைக்கொண்டே தன் ஆசை யையும் நிறைவேற்றிக்கொள்ள வழியில்லையா? திருமணத் தூதன் சரியான ஆசாமியாக—தான் சொன்னபடி செய்

யக்கூடிய பேர்வழியாக—இருந்தால் போதுமே! அப்படிப் பட்ட தூதன் சேரன் செருக்கை மெள்ளக் கிள்ளிவிட்டு வந்துவிடுவான்! அப்படியானல் அந்த அரசன் திருமணத் திற்கு வரமாட்டான். சண்டைக்கே வந்துவிடுவான். அந் தச் சண்டையில் இந்த அரசன் இறந்துபோகுமாறு சூழ்ச்சி செய்துவிட்டால் மணம் மரணமாகிவிட, அந்தப் புருஷோத் தமனுக்குக் கப்பம் கொடுத்தாவது தானே அரசனுகிவிட லாமல்லவா?

இவ்வளவு பேராசையும எவ்வளவோ பெருந் துன் பத்தை உண்டாக்கிவிடும் என்பது குடிலனுக்கு தெரிந்தது தான். மற்றவாகள் துனபபபட்டால் என்ன, தனக்கு ராஜ யோகம் அடிப்பதற்காக? இத்தகைய வரமபு கடந்த பேராசையில் மகனுன பலதேவனுடைய நன்மைகூட ஒரு பொருளாகத் தோன்றவில்லை. பலதேவன் மனோனமணி யைக் கலியாணம செயதுகொண்டாலென்ன? இல்லா விட்டால் தான் எனன? 'பேயன் நம மகன' என்கிருன.

**எடுத்தெறிந் திடுவன் இப்**
**போதே நம்மொழி!**

என்று அந்தப பேய்மகனுடைய சுபாவத்தை நன்ருகத் தெரிந்து கொண்டிருக்கிருன்.

தன் மகனேயே நமப முடியாத குடிலனுக்கு வேண்டிய கட்சி என்று ஒன்று இருக்க முடியுமா? அவன் நமபக் கூடியவர்களும் அவனே நம்பக்கூடியவர்களும இருந்தால் தானே 'குடிலன் கட்சி' என்று ஒன்று இரகசியமாகவோ, பகிரங்கமாகவோ வேலை செய்யமுடியும்?

**அடுத்தநம் படைஞரோ**
**பகைவர்; அவர் நமைக்**
**கெடுத்தநா ரணற்கே**
**கேளொடு கிளைஞர்!**

[படைஞர்-போர் வீரர். கேள்-சுற்றம். கிளைஞர்-பந்துக்கள்.]

என்று குடிலன் தனக்குள் தானே சொல்லிக் கொள் கிறான். ஊரெல்லாம பகை; நாடெல்லாம் பகை; சேனை யெல்லாம் பகை. இப்படியெல்லாம இருந்த போதிலும்,

**ஊக்கமே பாக்கியம்**

என்று உத்ஸாக மடைகிறான்.

**ஊகமே யோகம்**

என்று புதிய புதிய ஊகஙகள் செய்யத்தொடங்கி, ஊக்கத் துடன புதிய புதிய சூழச்சிகளுமு செய்யத் தொடங்கு கிறான்.

ஏதோ ஒரு தனியான சிகரத்தில் தன்னந்தனியே நிறபது போலிருககிறான சதிகாரனான குடிலன். தன் மகனுடைய தோழமையும் இல்லை; அவனுடைய நமபிக்கை கூட இல்லையே! உடுத்த துணியும பாமபாயக் கடிககுமோ என்ற பயம! இதுவே பேயாசைக்குத் தண்டனையல்லவா?

எனினும், 'அவ்வளவு உயரத்திலிருப்பது தண்டனை யாகுமா? பாக்கியமல்லவா?' என்பது குடில சித்தாந்தம. அந்த உயரத்திலிருந்து ஒரு தாவு தாவினால் லட்சியத் தையே சாடி விடலாமென்று எண்ணம்.

இதனால் தான் குடிலன் கோட்டைக்கும் புருஷோத்த மனுடைய பாசறைக்கும் நடுவிலுள்ள வெளியிலிருந்து ஆலோசனை செய்து கொண்டிருக்கும் போது, தனியாக உலாவி வரும் புருஷோத்தமனைக் கண்டதும், அவனிடம் தான் தன் அரசனுக்கு விரோதமாகச் செய்து வந்த சதியை வெளியிடுகிறான். தன்னுடைய ஏஜமானத் துரோகத்திற்குப் பரிசாக இராஜ்யமே கிடைத்து விடு மென்று நம்புகிறான். புருஷோத்தமனுடைய சுத்த வீர

சுபாவத்தைக் குடில புத்தியும் அறிந்துகொள்ள முடிய

குடிலன் பேசிக் கொண்டிருக்கும் போதே, புருஷோத்தமன் தனக்குள் 'பாதகா! விசுவாச காதகா!' என்று சொல்லிக்கொண்டே வெளிப்படையாகச் சிரித்து 'ஆஹா!' என்று கேட்டுக் கொண்டிருக்கிறான். குடிலனோ, 'வேண்டும் கப்பங்களையெல்லாம் நானே என தலைமேல் சுமந்து கொண்டு, உன் திருவடிகளில் கொண்டு சமர்ப்பிப்பேன்' என்கிறான்.

சைத்தான் சத்தியவேதத்தை மேற்கோள் காட்டுவது போல் குடிலனும இராமாயணத்திலிருந்து தன்னுடைய ராஜத்துரோகத்திறகு மேறகோள காட்டி, 'அடியேன் விபீஷ்ணுழவானைத்தான் பின் பற்றப் பார்க்கிறேன்!' என்று கூசாமல் பேசுகிறான்.

**பண்டுரா கவன்தன்**
**பழம்பகை செற்று**
**வென்றதோர் இலங்கை**
**விபீஷணன் காத்தவா(று)**
**இன்று நீ வென்ற நா(டு)**
**இனிதுகாத் திடுவேன்?**

சத்தியத்திற்காகவும் தர்மத்திற்காகவும் அண்ணனையும் அரசையும துறந்த விபீஷணனுடைய 'ஒத்துழையாமைத் தத்துவம்' குடிலனுக்கா புரியப்போகிறது? தன்னைப் போன்ற ராஜத்துரோகிகளுக்கும் தேசத்துரோகிகளுக்கும் ஒரு வழிகாட்டியாகவே விபிஷணனை மதிக்கிறது குடில புத்தி! மனித உள்ளத்தின் உயர்ந்த தத்துவஙகளில் இந்தப் புத்திக்கு நம்பிக்கையே கிடையாது. இந்த நம்பிக்கைக் குறைவுதான்—விசுவாசமின்மைதான்—குடிலனது வீழச்சிக்குக் காரணம்.

குடிலன் பேசிக் கொண்டிருக்கும் போதே புருஷோத்தமன், அருள் வரதன் என்ற சேனைபதியை நோக்கி, 'கை விலங்கு கால் விலங்கு கொண்டு வா நொடியில்' என்று கட்டளையிடுகிறான். தன்னுடைய எஜமானனுக்குத் தான் அந்த விலங்குகள் என்று நம்பிக் குடில புத்தி தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்கிறது. அருள் வரதனும் சேவகரும் விலங்கைத் தன் கையிலும் காலிலும் பூட்டும் போது, குடிலனுக்கு அதிசயமாகத்தான் இருக்கிறது! தான் ஓடி மறுபடியும் தன் அரசனிடம் போய் விடக்கூடாது என்று தான் அவ்வளவு பந்தோபஸ்து நடக்கிறதோ? — என்று கூட ஆலோசித்தான்

**தேடியே வந்து**
**செப்பிய அடியேன்**
**ஓடியோ போவேன்?**
**ஓஹோ உறுதி**
**முந்தியே தந்திடில்—**

என்று குடிலன் சொல்லி முடிப்பதற்குள்

**மூடுநின் பாழ்வாய்!**

[பாழ்-பாழான.]

என்று முழங்குகிறது புருஷோத்தமனின் குரல்.

**சேரன் விஜயமும்**
**திருடான்**

என்று எவ்வளவு செருக்கோடு புருஷோத்தமன் சதிகாரக் குடிலனிடம் சொல்லுகிறான்!

இந்தச் செருக்கைக் கிள்ளிவிட்டு ஓரளவு காரியசித்தி" யும் பெறலாம். ஆனால் இது சதியாலோசனைகளுக்கு வசப்படுமோ? வீரச் செருக்கல்லவா?—தர்மச் செருக்கல்லவா?

மனித சுபாவத்தின் உயர்ந்த அம்சங்களிலும் தத்துவங்களிலும் நம்பிக்கையில்லாத குடிலன் புருஷோத்தமனைத் தெரிந்து கொள்ளாதது போல், சுந்தரமுனிவரையும் நாராயணன் முதலானவர்களையும் நன்ருகத் தெரிந்து கொண்டானில்லை. குடில புத்தியையும் இந்த விசுவாசக் குறைவு மங்கச் செய்து விடுகிறது; சிற்சில சமயங்களில் மயங்கவும் செய்து விடுகிறது.

விபீஷணனையும் ஆசைக்காரனென்றும மோசக்காரனென்றும் சந்தேகப் படுகிறவன், சுந்தர முனிவரையும் சந்தேகப்படுகிருன், 'முனிவரும வேஷக்காரர்தாமோ!' என்று. சத்தியம அஹிம்சை என்பனவெல்லாம இவனுக்குப் பொருளற்ற வார்த்தைகள் தாமே! எந்தப் பரோபகாரச் செயலும எந்தத் தியாகமும இவன் கண்ணிலும் கருத்திலும் மாறு வேஷம பூண்ட சுய நலம தான்!

துன்பியல் நாடகஙகளிலெல்லாம இத்தகைய ஆத்மாவின் சோகநாடகம மிகவும் பயஙகரமானது என்றபாடத்தை ஷேக்ஸ்பியர் தமது மகாநாடகஙகளின் மூலமாக நமக்குக் கற்பிக்கிருர். இதே பாடத்தைத் தான் குடிலன் குணுதிசயமும நமக்குக் கற்பிக்கிறது.

## குடிலன் தனிக்குறை

மனிதனுடைய ஒழுக்க வலிமையில்தான் குடிலனுக்கு நம்பிக்கையில்லை. மனிதனுடைய பகுத்தறிவின் சக்தியில் அபார நமபிக்கை. கபட நாடகம ஆடும் திறமையையும் இவன் புத்தியின் சக்தியாகவே மதிக்கிருன். இத்தகைய சக்தியைக் கொண்டு எந்தச் சந்தர்ப்பஙகளிலும் போராட முடியும். அந்த அந்தச் சந்தர்ப்பத்தை வளைத்துச் சொந்த லாபத்திற்குப் பயன்படுத்திக்கொள்ள முடியும என்பது குடிலனுடைய அசைக்க முடியாத நம்பிக்கை.

தன்னுடைய சூழ்ச்சிகளும் திட்டங்களும் சரியாகத் தான் நடைபெறுகின்றன என்று எண்ணிய காலத்திலும் சரி, போட்ட திட்டம் தவறிப்போகிறதென்று தெரிந்த காலத்திலும் சரி, 'புத்தியே சகல சக்தியும' என்ற கொள்கைதான் இவனுக்கு. ஊகம் ஊக்கம் சூழச்சி--இவை குடிலனுடைய மும்மூர்த்திகள்.

இதனல் குடிலனுக்கு அபாரமான தன்னம்பிக்கை ஏற்பட்டு விடுகிறது. ஆனல் இந்தத் தன்னமபிக்கை--மதத்தில் பிறரை நம்பி வேலைசெய்ய இடம எங்கே? இவன் கிரகஙகளை நமபுவதில்லை. கடவுளையும நம்புவதில்லை! உயர்ந்த லட்சியஙகளையும நமபுவதில்லை. மனிதர்களை எபபடி நமபமுடியும?

எவ்வளவோ முன் எச்சரிக்கையோடுதான காரியம் பார்க்கிருன். தோல்வி வந்துவிடுமோ என்ற பயம் எப்போதும உண்டு. வரககூடிய அபாயஙகளிலிருந்து தப்புவதற்கு எப்போதும தயாராக இருக்கவேண்டும என்று சஙகற்பம் செய்துகொளகிருன்.

**இருசரம் இன்றி**
**எப்போ ரிடையும்**
**ஏகார் மதியோர்**

[சரம் – அம்பு. ஏகார் – போகமாட்டார்கள். மதியோர்-- புத்திசாலிகள்.]

என்பது குடிலனது அபிப்பிராயம்—அனுஷடானம். இருவகை உபாயமுமில்லாமல் எந்த வாழக்கைப் போரையும் நடத்த முடியாது: ஒன்று தவறினல் வேருெரு உபாயத்தைக் கொண்டு வெற்றிபெறக் கூடு மல்லவா?

இவ்வளவு ஜாக்கிரதையாக இருந்தும் குடிலனுடைய சூமச்சித் திட்டஙகள் தவறிப்போகின்றன. காரணம் இவ

னுடைய ஜாக்கிரதைக் குறைவல்ல; புத்திக் குறைவு மல்ல 'புத்தியே சகல சக்தியும்' என்ற கொள்கை உண் மையானால் குடிலனுக்கே வெற்றி கிடைத்திருக்க வேண் டும்.

ஒழுக்க வலிமையில்லாத இவன் குணாதிசயத்திலே அடிப்படையான குறை ஏற்பட்டு விடுகிறது. இதனால் தன்னை எதிர்க்கும் சக்திகளை இவன் சரியானபடி உணர்ந்துகொள்ள முடியவில்லை.

சுந்தர முனிவரையும் புருஷோத்தமனையும் இவன் சரியானபடி தெரிந்துகொள்ளவில்லை. அவர்களுடைய குணாதிசயத்தின் சக்தி பொருந்திய அம்சங்களைச் சரியாக மதிப்பிட முடியவில்லை. அவர்கள் இவனுடைய சூழ்ச்சி களால் பாதிக்கப்படாமல் தங்கள் போக்கிலே போகி றார்கள். கடைசியாக, குடிலனுடைய சூழ்ச்சிகள் வீணாகிப் பாழாகிபோகின்றன.

குடிலனுடைய சுயநலன்களையும் சூழ்ச்சிகளையும் மறைப்பதற்குக் கபட நாடகம அவசியமாகிறது. இருதய உணர்ச்சிகளைப் பற்றிய சன்மார்க்க வழியில் இவன் செல் லாததால் இவனுடைய அறிவு அபாயமாகக் கூர்மை செய் யப்படுகிறது. பரம ராஜபக்தன் போலவும் ராஜசேவகன் போலவும நடித்துக் கொண்டே அரசனை அடிமையாக்கி ஆட்டி வைக்கும் கபட சாமர்த்தியம் கொஞசமா?, சாமானியமா?

அரசனை ஆட்டி வைக்கும் முறையே குடிலனுடைய புத்திக்கூர்மையை நன்கு வெளியிடுகிறது; கபடத் திறமை யையும நன்றாக வெளியிடுகிறது. அரசன் என்ன செய்ய வேண்டுமென்று இவன் விரும்புகிறானோ, அதைப் பட்ட வர்த்தனமாகச் சொல்லிவிடுவதில்லை. அரசன் எதைச் செய்யக்கூடாது என்று விருமபுகிறானோ அதிலும பட்ட

வர்த்தனமாயிருக்கமாட்டான இவன். சில விஷயங்களை அரசர்முன் வெளியிடுவான். அந்த நிலையில் அரசன் தானு கவே ஊகம்செய்து முடிவு கட்டுவது போலிருக்கும். ஆனால் அந்த முடிவு குடிலன கட்டும் முடிவாகவே இருக்கும்! அந்த ரீதியில் விஷயங்களைத் தேர்ந்தெடுத்து வற்புறுத்து வான். தான் கருதும் அந்த ஒரு முடிவை தவிர வேறு முடி விற்கு வராதபடி செய்து விடுவான் அரசனை.

அரசனே அந்த முடிவு தன் மூளையிலிருந்து உதயமான தாகவே கருதுவான். குடிலபுத்தியிலிருந்து உதயமானதாக உணர்ந்துகொள்ளமாட்டான். அரசன் ஒப்புக்கொள்வான் என்பதை ஓரளவு தெரிந்த பின்பே பகிரங்கமாக ஆலோ சனைகளைச் சொல்லுவான். மற்றப்படி, சில குறிப்புகளைச் சொல்லியும் சொல்லாமல் மறைமுகமாகவும வெளியிடு வான. நீண்ட நேரப பிரசங்கத்தைக் காட்டிலும் இக் குறிப்புக்கள் அற்புதமாக வேலைசெயது விடும்.

உதாரணமாக சுந்தர முனிவரைக் குறித்து ஜீவக மன்னனுக்கு அதிருப்தி உண்டாகுமாறு செய்ய விரும்பும் குடிலன் கையாளும் உபாயத்தைப் பார்க்கலாம். 'முனிவர் கள ஆலயம் ஒனறையே அறிவார்கள். நாமோ கோயில் கட்டாமல் கோட்டையைக் கட்டி வைத்தோம். அதனால் தான் முனிவர் குறைப்படுவது போல் தோன்றுகிறது! என்று சொல்லி வரும குடிலன், 'ஆகவே முனிவர் பொருமைப்படுகிறுர்' என்று அரசன் வாயிலிருந்து வர வேண்டுமென்று விரும்புகிறுன். ஆனுல் இவன் சொல்வ தென்ன ?

**ஆதலால் இங்ஙனம்**
**ஓதினர் அதனை**
**அழுக்கா(று) என்று நாம்**
**ஐயமற்(று) அதைதல்**

**ஒழுக்கம் அன்றே !**
**குருஅன் றோஅவர் !**

[ஓதினர்—சொன்னார். அழுக்காறு—பொறாமை.]
என்கிறான்.

'சந்தேகமில்லாமல் நாம் எபபடிப் பொறாமைக் குற்றம் சாட்ட முடியும? குரு அல்லவா?' என்ற சாமர்த்தியப் பேச்சிலிருந்து, என்ன முடிவு கட்ட வேண்டுமென்ற குறிப்பு அரசனுக்குக் கிடைத்துவிடுகிறது.

**ஐயரும் அழுக்கா(று)**
**அடைந்தார் மெய்மை**

என்று சொல்லிவிடுகிறான் ஜீவகன். குடிலன் விரும்பிய படியே. பிறகுதான் பகிரங்கமாக முனிவர்களையெல்லாம தூஷிக்கத் தொடங்குகிறான் குடிலன்.

புருஷோத்தமனுக்குத் தூது அனுப்பும் போது தூதன் எப்படியிருக்க வேண்டுமென்று பொதுவாகச் சில குறிப்புக்களை வெளியிடுகிறான குடிலன். அந்தக் குறிபபுக் களிலிருந்து அரசன் குடிலன் மகனையே அனுப்ப வேண்டு மென்று தீர்மானிக்கிறான :

**அத்திறம் முற்றும்**
**ஒத்தவனாய் நமக்(கு)**
**உரிமை பூண்டநின்**
**அருமை மகன்பல**
**தேவனே உள்ளான்.**

என்கிறான் அரசன்,

உணமையான ராஜ பகதனும அரசன தோழனு மாகிய நாராயணன்மீது குற்றங்களிலெல்லாம் பெரிய குற்றமாகிய ராஜத்துரோகக் குற்றம்சாட்ட விரும்புகிறான் குடிலன். அதைத்தான் எவ்வளவு சாமர்த்தியமாகச்

*செய்கிறான்! நாராயணன் போரிலே கலந்து கொண்டு அரசனுக்கு உதவி செய்யலாகாதென்று அவனுக்கு வேறொரு வேலைகொடுத்திருந்தான குடிலன். நாராயணனோ அரசனைக் காப்பாற்ற வேண்டுமென்று போர்க்களத்திற்கு வந்துவிட்டான். அதைக் குறித்துக் குடிலன் மெள்ள,*

**போரிடைக் கண்டனை**
**நாரணர் தம்மை**

*[கண்டனை—கண்டாய்]*

*என்று செய்தி சொல்லுகிறான். அப்போது அரசன் 'அவன் ஏன் தன காவலை விட்டு வந்தான?' என்று கேட்கிறான. அதற்குக் குடிலன்,*

**ஐய! யான் அறிகிலன்,**
**அவரிலும் நமக்கு**
**மெய்ம்மையர் யாவர்?**
**வேலியே தின்னில்,**
**தெய்வமே காவல்**
**செய்பயிர்க்(கு) என்பர்**

*என்று தந்திரமாகச் சொல்லுகிறான். உடனே அரசன்,*

**துரோகம்! துரோகம்!**

*என்று கர்ச்சிக்கிறான்.*

*குடிலனோ 'துரோகமன்று' என்றுதான் பேசத் தொடங்குகிறான். உண்மையில், அரசனை அந்த அபிப்பிராயத்தில் ஊன்றச் செய்ய வேண்டும் என்றுதான் எண்ணம்.*

**விரோதம், அடியேன்**
**மேலுள விரோதம்**

*என்றெல்லாம் குடிலன் சொன்னதும், ஜீவகன் 'கெடு பயல், துரோகம்!' என்ற அபிப்பிராயத்தில் ஆழ்ந்து*

போகிறான். 'எத்தனை துஷ்டன!' என்று நாராயணனைக் குறித்து முடிவு கட்டி அப்படியே குடிலனது வலையில் விழுந்து விடுகிறான் அரசன்.

இவ்வளவு கபடத்தோடு கோழைத்தனமும் காணப் படுகிறது குடிலனிடம். ஒழுக்க வலிமையில்லாதவனுக்குத் தைரிய சம்பத்து ஏது?

எதிரிகள் தன்னைச் சூழ்ந்திருக்கிறார்கள் என்று எண்ணும் குடிலன் தன் மகனை ஜாக்கிரதையாக இருக்கும்படி எச்சரிக்கிறான். தன்னுடைய பெயரைச் சில படை வீரர்கள் சொல்லுவதைக் கேட்டு, 'கொல்வரோ, ஐயோ!' என்று ஒளிந்து கொள்கிறான்.

இந்த மனிதனை இவ்வளவு தூரம் கோழையாக்குவது இவனுடைய மனச்சாட்சி! இதனாலேயே இவன் சுதந்திர புத்தியில்லாமல் புருஷோத்தமனிடம் தன்னை எவ்வளவோ தாழ்த்திக் கொள்கிறான்; கெஞ்சிக் கூத்தாடுகிறான்; முகஸ்துதி செய்கிறான். இவன் அதிகமாய்ப் பேசுவதற்கும் இந்த மனப்பான்மையே காரணமாகும்.

குடிலனுடைய முக்கியமான குறை ஒழுக்கத்திலும் மனித நேர்மையிலும் நம்பிக்கையில்லாத மனநிலைதான். இக்குறை மனச்சாட்சியைப் பேசாமடந்தையாக்க முயன்று மேலும் மேலும் சூழ்ச்சிச் சுழலிலே இவனை ஆழ்த்திவிடு கிறது.

## 7. சுந்தர முனிவர்

குடில புத்தியோடு முற்றும் முரண்படுகிறது சுந்தர முனிவரின் ஞானம். குடிலன் தீமை செய்கிறவன் என்றால், முனிவர் தமது நன்மையால் அந்தத் தீமைகளையெல்லாம் வெல்லப் பார்க்கிறார். குடிலன் இருளின் சக்தி யென்றால்,

சுந்தரர் ஒளியின் சக்தியாக வந்து இருட்டைப் போக்கு கிறார்.

இருளுக்கும் ஒளிக்கும், நன்மைக்கும் தீமைக்கும் இடையே நடைபெறும் இந்தப் போராட்டத்தை மனோன்மணீயம் பாராட்டத்தக்க நாடகத் திறமையோடு பிரதிபலித்துக் காட்டுகிறது.

குடிலனைப் போன்ற அசுர சக்திகள் வேகமாக வேலை செய்கின்றன. நாடகமேடையில் பிரமாதப் படுகின்றன குடிலனுடைய தனி மொழிகளும் பேச்சுகளும். 'என்ன ஆரவாரம், என்ன ஆவேசம்! ஒரே பாய்ச்சலில் வெற்றி கிடைத்து விடுமோ? ஆ! என்ன பயங்கரமான சக்தி!" என்றெல்லாம் நினைக்கத் தோன்றுகிறது குடிலனை நோக்கும்போது.

சுந்தர முனிவர் என்ற தெய்வ சக்தியோ தடபுடல் செய்யாமல் இயற்கையின் மகத்தான சக்திகளைப்போல் மௌனமாக வேலை செய்கிறது. திரை மறைவில் மெதுவாக வேலைசெய்து எவ்வளவோ கஷ்டத்திற்குப் பிறகு வெற்றி யடைகிறது.

அழிவு வேலைக்குரிய சக்திகள் மூர்க்கமாகவும் படுவேகமாகவும் வேலை செய்துதானே ஆகவேண்டும். ஆக்க வேலையோ தோன்றாத் துணையாக வேலை செய்யும் கடவுளின் சக்திபோல் தன்னைப் பிரமாதப் படுத்திக்கொள்ளாமல் வேலை செய்துகொண்டே போக வேண்டியதுதான்!

சூரியன் உதயமாவது, அஸ்தமனமாவது, நட்சத்திரங்கள் வான வீதியில் ஏற்றிவைத்த விளக்குகளைப்போல் பிரகாசிப்பது, பூமியின் கர்ப்பத்திலிருந்து பயிர் பச்சைகள் தோன்றுவது முதலான காரியங்களெல்லாம் எவ்வளவு மௌனமாக நடைபெறுகின்றன! ஆனால் பூகம்பம் புயற்

காற்று முதலான நாச சக்திகள் எவ்வளவு வேகமாகத் தங்கள் வேலைகளைச் செய்து முடிக்கின்றன !

இயற்கை என்ற புத்தகத்திலிருந்து இந்தப் பாடத்தைப் படித்துக்கொண்ட மனோன்மணீய ஆசிரியர் சுந்தர முனிவருடைய நன்மை பயக்கும் ஞான சக்திகளை மறைவாக வைத்துக் குடிலனுடைய சூழ்ச்சிகளாலும் கபட நாடகங்களாலும், தந்திர சாமர்த்தியங்களாலும் ஆலோசனைகளாலும் தனிமொழிகளாலும் நாடக மேடையைத் திணறச்செய்து விடுகிறார்.

நாடகத்தின் முதலாவது அங்கம் முதலாவது காட்சியிலேயே சுந்தரரையும் சந்திக்கிறோம்; குடிலனையும் சந்திக்கிறோம். சுந்தர முனிவரை ஜீவக மன்னன் வரவேற்பதற்காகக் கொலு மண்டபம் அலங்கரிக்கப் படுகிறது. காலைவேளையில் குலகுருவுக்கு அரசன் பாதபூஜை செய்ய ஆயத்தங்கள் நடைபெறுகின்றன. நகரவாசிகள் முதலானோர் முனிவரை வரவேற்க எதிர்கொண்டு போகிறார்கள். அந்தக் கூட்டத்திலே குடிலனும் ஒருவன். பக்தியினால் எதிர்கொள்ளப் போனவனில்லை; அரசனையும் பிறரையும் திருப்தி செய்வதற்காகவும் ஏமாற்றுவதற்காகவும் போனவன்தான். கூடுமானால் முனிவரையும் ஏமாற்றக் கூடியவன்தான்!

முனிவர் சுருக்கமாக அரசனை வாழ்த்தி மனோன்மணியின் யோகக்ஷேமத்தையும் விசாரிக்கிறார். இவர் அதிகம் பேசுவதில்லை. கருணாகரர் நிஷ்டாபரர் என்ற இரண்டு சிஷ்யர்களும் கருணையைக் குறித்தும் நிஷ்டையைக் குறித்தும் நீளமாகப் பேசிக்கொண்டிருக்கிறார்கள். சுந்தரரோ பரம வேதாந்தியாயினும் அந்த வேதாந்த விவகாரங்களில் தடபுடலாக ஈடுபடுவதிலும் விரும்பவில்லை.

**உங்கள் பேச்(சு)**
**அறிவோம்; ஓயாப்பேச்சே**

என்று அந்த அதிகப் பேச்சைக் கண்டிக்கிறார்.

அப்பேச்சைக் காட்டிலும் சிந்தனைகளில் நம்பிக்கை யுள்ளவர் இவர். செயலிலும் நம்பிக்கை யுள்ளவர்தாம். குடிலனோ படாடோபமான நீண்ட பேச்சில் நம்பிக்கையுள் ளவன். ஆனால் கருணாகரரையும நிஷ்டாபரரையும்போல் காரசாரமான வேதாந்த விவகாரங்களில் நம்பிக்கை யுள்ளவனில்லை. தன் பேச்சுத் திறமையிலே, தன் இரு தயத்தையும் சூழ்ச்சிகளையும் மறைத்துப பிறரை வசீகரிப் பது குடிலனுடைய நோக்கம்.

இந்த நோக்கத்தோடு குடிலன் முகஸ்துதி செய்து ஒரு புராணம் பாடுபவதுபோல திருநெல்வேலிச சீமையின் பெருமையைப பிரமாதமாக எடுத்துக் காட்டுகிறான். இமய மலையைக் காட்டிலும் பொதியமலை பெரிதென்றும, காவிரி கங்கை ஆறுகளைக காட்டிலும தாமிரபரணி சிறந்ததென் றும போற்றிகொண்டே போகிறான். இந்த ஓயாப பேச்சி னிடையே முனிவர குறுக்கிட்டு,

**சம்போ ! சங்கர !**
**அம்பிகா பதேஎ !**

என்று சிவநாமங்களைச சொல்லிக்கொண்டே எழுந்து நிற் கிறார். குடிலனின சூழ்சசி முனிவரிடம் பலிக்கவில்லை.

ஜீவகனுக்கு ஆபத்து வரும என்பதையும அது குடிலனால் வரக்கூடும என்பதையும முனிவர் முன்கூட்டி உணர்ந்து கொள்கிறார். ஆனால் முனிவருடைய இத்தகைய அறிவுத்திறமை அறிவுக்கூர்மையுள்ள குடிலனுக்கும் புலனாகவில்லை. முனிவர் எபபடிப் போனால் என்ன? எங்கே

போனால் என்ன? 'நம் காரியம் ஜயம்' என்கிறான் தன் காரியக் குட்டியான குடிலன்.

பொது மக்கள் சுந்தரரிடம் பக்தியுள்ளவர்கள் தாம். ஆனால் அவர்களும் சுந்தரரின் புத்தி சூட்சுமங்களை உணர்ந்தவர்களில்லை. ஜீவக மன்னன் சுந்தரரை ஞானியாகவும் குருவாகவும் நினைக்கிறவன் தான்; எனினும் இவருடைய அறிவு நுட்பத்தை அறிந்து கொண்டவனில்லை. மனோன் மணியைப் போன்றவர்களுக்கும் சுந்தர முனிவருடைய புத்தி சாமார்த்தியங்கள் விளங்காத புதிர்போலவேயிருந்தன.

கருணாகரர் நிஷ்டாபரர் முதலான சிஷ்யர்களும குருவின் லௌகிக ஞானத்தை விசேஷமாய்த் தெரிந்துகொண்டார்கள என்று சொல்லமுடியாது. சுந்தரரின் நம்பிக்கைகக்கு உரியவர்களான நாராயணன் நடராஜன் ஆகியவர்களும சுந்தரரின் மதி நுட்பததை எல்லை கண்டு உணர்ந்தவர்கள இல்லை.

இத்தகைய நுட்ப புத்தியையும காட்சித் தெளிவையும கொணடு சுந்தரர் பல்வேறு சக்திகளுக்கிடையே தமது அருளின் சகதியை ஏவிப பணிபுரிகிறார்.

தனக்கு வரபபோகும விபத்தை ஜீவகன் கொஞசமும அறிந்து கொளளவில்லை. ஊகித்து உணர முயன்றதும் இலலை. 'கட்டைச் சிறுமதி' என்று தன்னுடைய கெட்டைப பெருமதிக்குப புறமபாக வைக்கிறானே குடிலன், அந்த ரகத்தை நிச்சயமாகச் சேர்ந்தவன் ஜீவக மனனன. இவனுக்கு நேரடியாக எச்சரிக்கை செயதால் பயன்படாது என்று கருதியே சுந்தரர் மறைமுகமாகப் பேசிவிட்டுத் தாமே ஒரு ரகஸ்ய வழி அமைக்க ஏற்பாடு செய்கிறார்,— ஜீவகனையும் மனோன்மணியையும் காபபாற்றுவதறகாக. இந்தக் காரியத்திற்குத் தமது சிஷ்யர்களான கருணாகர

ரையும் நிஷ்டாபரரையும் உபயோகித்துக் கொள்வதோடு, வாணியின் காதலனாகிய நடராஜனையும் பயன்படுத்திக் கொள்கிறார்.

சுந்தரர் ஊரிலிருந்து விலகி ஆச்ரமத்தில் வசிப்பவர் தாம. வேதாந்தக் கொள்கைப்படி, தாமரையிலைத் தண்ணீர்போல் ஜகத்துடன் கூடி வாழ்பவர். இந்த நாடகத்தின் பிரதான கதாபாத்திரங்களுடன் நெருங்கிப் பழகுகிறவர் அல்லர். எனினும், பல நிகழ்ச்சிகளின் போக்கையும் கணித்துப்பார்த்து, எதிர்காலத்தில் இன்னது நடக்கும என்று ஊகிக்கக கூடிய நிலையில் இருக்கிறார். இதற்கு ஏற்ற புத்தி நுட்பத்தோடு வசதிகளும இவருக்கு உண்டு என்றே ஊகிக்கலாம.

சுந்தரருடைய புத்தி நுட்பமும் அருளின் சக்தியும தான் ஜீவகனைக் கடைசியாகக் காப்பாற்றி விடுகின்றன. அறிவுத்தெளிவுடன் இவருடைய ஒழுக்க உயர்வும, இவரது வசீகர சக்திக்கும வெற்றிக்கும காரணமாகும. இத்தகைய வசீகரசக்திக்குச் சேரமன்னனாகிய புருஷோத்தமனும் எப்படியோ உட்பட்டிருப்பதாகத் தோன்றுகிறது.

குடிலனுடைய சூழ்சசிகள் என்ற பாலைவனத்திற்கிடையே சிறசில பசுமபுல்-தரைகள் போல்—ஜீவநிலஙகள போல்—தோனறுகின்றன சுந்தரருடைய அன்புப்பணியும அருட்செயல்களும. சுந்தரர் என்ற ஜீவபூமி இல்லாவிட்டால், இந்த நாடக வாசகர்களின் உணர்சசிகள ஏதோ ஒரு இருண்ட பயஙகரமான வனாந்தரத்தில் திசைதெரியாமல் தவிபபது போல் கஷ்டபபடும எனபதில் சந்தேகமில்லை.

சுந்தரரின் அருள்-ஒளிக்கு முன் குடிலன் எழுப்பிய இருட்சுவர்களும் சூழ்ச்சிக் கோட்டைகளும் கடைசியாகத் தகர்ந்து தவிடு பொடியாகின்றன. இப்படி நேரவில்லையென்றால் இந்த நாடகாசிரியரின் நோக்கம நிறைவேறியிராது.

## 8. நாராயணனின் குணாதிசயம்

### (ஜீவகன் துணைவன்)

*குடிலன் அயோக்கிய சிகாமணி என்பது நாராயண னுக்கு வெகு தெளிவு. ஜீவக மன்னனுடைய மந்த புத் திக்கோ குடிலன் பரமயோக்கியனாகவும் ராஜ பக்தனாகவும் தோன்றுகிறான்.*

*குடிலன் முனிவர்மீது பொறாமைகொண்ட நிலையைப் பரிகசிக்க விரும்பிய நாராயணன் அதைக் குறிப்பாகவும் ஹாஸ்யமாகவும் உணர்த்த விரும்பி,*

**வெறும் எலும்பை நாய்கௌவும்**
**வேளைநீ செல்ல**
**உறுமுவதென் ? நீயே உரை**

*என்கிறான்.*

*தன் மூக்கில் கரியைத் தேய்த்துக்கொண்டு நாரா யணன் அரசனமுன தோன்றுவதும் இவன் ஹாஸ்யப் பிரியன் என்பதையே காட்டுகிறது.*

**ஏ, ஏ ! நாரணா !**
**கரியாய் உன்மூக்(கு)**
**இருந்தவா(று) என்ன !**
**ஏ, ஏ ! இது ஏன் ?**

*என்று அரசன் கேட்டதும், நாராயணன் பதில் சொல்லு கிறான்:*

**மூக்கில் கரியர்**
**உளர்என நாயனார்**
**தூக்கிய குறளின்**
**சொற்படி, எல்லாம்**

**உள்ள நின் அரு(கு) அவர்**
**இல்லார் ஆவரோ ?**

[நாயனார்—திருவள்ளுவர்.]

நாராயணன் பின்வரும் செய்யுளைச் சுட்டித்தான் பேசுகிறான்.

**புறங்குன்றி கண்டனைய**
**ரேனும் அகங்குன்றி**
**மூக்கிற் கரியார்**
**உடைத்து.**

[குன்றி - குன்றிமணி. அகம் - உள்ளம். உடைத்து - உடையது.]

குன்றிமணியின் வெளிப்புறம்போல வேஷத்தால் செம்மை யுடையவர்கள் இருக்கிறார்கள் இந்த உலகத்திலே ; எனினும் குன்றிமணியின் மூக்குப் போல உள்ளம் கறுத்திருக்கவும் கூடும் என்பது குறளின் கருத்து. இந்தக் குறளைக் குறிப்பிட்டுக் குடிலனுடைய வஞ்சகத்தன்மையைச் சுட்டிக் காட்டுகிறான் நாராயணன். ஆனால் ஜீவகன,

**ஓஹோ ! ஓ ஹோ !**
**உனக்கென் ? பைத்தியம் !**

என்று ஏளனச் சிரிப்புடன் தன் மந்தபுத்தியையே வெளியிடுகிறான்.

உடனே அரசனுக்கு ஒத்து ஊதும் சபையினர் யாவரும்,

**ஓஹோ ! ஓஹோ !**
**ஓஹோ ! ஓஹோ !**

என்று ஒரே சிரிப்பாயச் சிரித்து விடுகிறார்கள். அந்தச் சிரிப்பிலே நாராயணனுடைய எச்சரிக்கை கரைந்து போகிறது.

**நாராயணா! உனக்(கு)**
**ஏன் இப் பித்து?**
**தீரா இடும்பையே**
**தெளிவில் ஐயுறல்!**

[இடும்பை - துன்பம். ஐயுறல் - சந்தேகித்தல்.]

என்கிறான் அரசன். குடிலனுடைய ராஜ பக்தி அவ்வளவு தெளிவாக இருக்கிறது ஜீவகனுக்கு!

இதிலிருந்து நாராயணன் எவ்வளவு தூரம மனித சுபாவத்தை அறிந்திருக்கிறான என்பது தெளிவாகிறது. ஜீவகன எவ்வளவுக்குஎவவளவு உலகம தெரியாமல் இருக்கிறானோ, அவ்வளவுக்கு அவவளவு நாராயணன் தெரிந்தவன, தெளிந்தவன், என்று சொல்லலாம். எவ்வளவுக்கு எவவளவு ஜீவகனது மூளை அயர்ந்து சோம்பிக் கிடக்கிறதோ, அவவளவுக்கு அவவளவு விழிப்புடன் தொழிற் படுகிறது நாராயணன் மூளை.

இத்தகைய குணாதிசயத்திலே ஹாஸ்யமும சேர்ந்து பரிமளிக்கிறது என்றால், நாராயணனை இந்த நாடக மேடையில் பார்பபது போல் உலக நாடகத்திலும் எஙகெஙகேயோ பார்த்திருப்பது போலத் தோன்றுகிறதல்லவா?

நாராயணனுடைய புத்திசாதுரியத்தைக் குடிலனே ஒபபுக்கொள்கிறான். 'வினை அறி நாரணன்'—அதாவது செய்யவேண்டிய காரியங்களை அறிந்து செயயும் நாராயணன்—என்கிறான் குடிலன தனக்குள்ளே. இந்த இருவரும் அறிவுக் கூர்மையுள்ளவர்கள்தாம. ஒருவன் யோக்கியன்; மற்றவன் அயோக்கியன்.

அயோக்கியன யோக்கியனைக் கண்டு பயப்படுகிறான்.

**எதுவும் இந் நாரணன்**
**இருக்கில்**
**அபாயம் ஆ, ஆ!**

என்று மறுகுகிறது குடில உள்ளம். தன்னுடைய இருண்ட உள்ளத்திற்குள்ளே நாராயணன எட்டிபபார்த்துத் தன்னைச் சந்தியில் இழுத்து விடுவானோ?—என்பது குடிலர் பயம். குடிலனுக்கு அபாயம் இவனால்தான். நாராயணனை ஒழித்து விடலாம் எனறு குடிலன் சூழ்ச்சி செய்கிறான்.

  

நாராயணன சிறந்த போர்வீரன்; மரணத்தையும் அமைதியாக மகிழ்ச்சியுடன் வரவேற்கும் நெஞ்சுத் துணிவுள்ளவன். அரசன் அநியாயமாய்த் தன் பக்திக்குப் பரிசாக மரண தண்டனை விதித்தபோதிலும், நாராயணன் தன் மன அமைதியையாவது, நிதான புத்தியையாவது சிறிதும் இழந்து விடவில்லை. தன்னைச் சேர்ந்த போர் வீரர்களை நோக்கி, 'நீங்கள கடமையிலும ராஜ பக்தியிலும் வழுவாதிருக்க வேண்டும்' என்று புத்தி சொல்லுகிறான்.

தன் உயிரை அபகரிக்கத் துணிந்துவிட்ட அரசனிடத்திலும் குன்றாத ராஜ பக்தி நாராயணனிடம காணப்படுகிறதென்றால், 'இவனே உத்தம ராஜ பக்தன், ஜீவகனது உண்மையான துணைவன்' என்று துணிந்து சொல்லக் கூடுமல்லவா? இவனுள்ளத்தில் அரசனைக் குறித்து ஒரு சிறு கொடுமையான உணர்ச்சியும ஏற்படாதது உண்மையில் அதிசயமதான்.

தீமையும நாச சக்திகளும ஆதாரசக்தியில்லாதவை; விரைவாகவோ, சிறிது மெதுவாகவோ நன்மையின் சக்திகளுக்குமுன் அவை வீழச்சி அடையவேண்டியதுதான்—எனபது நாராயணன மதம. இந்த மதத்திற்குத் துணை செய்வன நாராயணனுடைய பக்தியும் தேச பக்தியும்.

## 9. பலதேவன்

பாண்டியன் படுதோல்வி அடையப்போகிறான் என்று நிச்சயமாகத் தெரிந்துகொண்டதும், குடிலன் போர்க்களத்திற்கு வருகிறான்.

**ஒருவன(து) ஆசைப்**
**பெருக்கால், உலகில்**
**வருதுயர் கடலிற்**
**பெரிதே ! . . . .**

[கடலின்-கடலைக் காட்டிலும்,]

என்று தனக்குள் தானே சொல்லிப பெருமூச்சு விடுகிறான். ஆனால் இந்த மனச்சாட்சியை உடனே எப்படி அடக்கிவிடுகிறான் பாருஙகள :

**என்னை என்மதி**
**இங்ஙனம் எடுத்தெறிந்(து)**
**ஏகுதல் சிச்சீ !**

[என்னை-என்ன.]

ஒரு நாயை வெருட்டியடிப்பது போல் மனச்சாட்சியையும துரத்தியடிக்கிறான. இப்பேர்பபட்ட பரமதுஷ்டன் தக்க தணடனை இலலாமல் தபபுவதா ? இவனுக்குத் தண்டனையாகவே படைககபபட்டிருக்கிறான் மகனை பலதேவன்.

குடிலன் தன மனசசாட்சியையும் அடக்கி ஆதிக்கம செலுத்தக்கூடியவன தான். தனனைச் சேர்ந்தவர்களையும் அடக்கியாளக்கூடியவன் தான். அரசனை முகஸ்துதியால் மெல்ல அடக்கி ஆளுகிறான். தனக்குக் கீழானவர்களுக்கு வெகுமதி அளிக்கிறான்; லஞ்சம் கொடுக்கிறான் ; அல்லது

அவர்களைப பயமுறுத்தி ஆதிக்கம் செலுத்துகிறான். சமானர்களையும அடக்கியாளுகிறான். ஆனால் தன் மகனை பலதேவனை எபபடி அடக்கி ஆளுவது? முகஸ்துதி, வெகு மதி, பயமுறுத்தல் இவற்றில் ஒன்றினாலும ஒரு சிறிதும வெற்றி பெற முடியவில்லை.

நண்பர்களோ, வேலைக்காரர்களோ தவறாக நடந்து கொண்டால் குடிலனுக்கு என்ன நஷ்டம? மகனுடைய தவறுதலோ தனக்கும தன குலத்துக்கும் அவமானம!

ஜீவக மன்னன வாணியை நோக்கி, 'நீ பைத்தியக்கார நடராஜனைக காதலிக்க வேண்டாம; மந்திரி மகனான பல தேவனையே மணந்து கொளள வேண்டும' என்று சொல் லும்போது,

நலமே சிறந்த
குலமே பிறந்த
பலதேவ னும்ஒரு
பாக்கிய சிலாக்கியன்

என்று குறிப்பிடுகிறான். இந்தக் குலநலமெல்லாம், இந்தப் பாக்கியமெல்லாம் பாழாகக் கூடுமல்லவா இப் பலதேவ னுடைய காரியங்களால்?

பலதேவன் சிற்றின்பப் பிரியன். ஜீவக மன்னனுக்கே இவனை மாப்பிள்ளையாக்கிவிடத் தந்தை முயன்றும் அதற் குத் தகுதியாக வேஷமாவது போட்டுக் கொள்ளவேண் டுமே!—இந்த எண்ணமும் இவனுக்கில்லை. 'புருஷோத் தமன் என்ற தரு தூரத்திலிருப்பதால், பக்கத்திலுள்ள பலதேவன் என்ற எட்டி மரத்தையாவது பற்றிப் படராதா மனோன்மணி என்ற பூங்கொடி?' என்று ஆலோசிக்கிறான் குடிலன். எனவே, பலதேவன் ஒரு தரு அல்லன்; விஷ-

மரந்தான்!' என்பதைச் சூழ்ச்சித் திறமை வாய்ந்த குடிலன் நன்ருக அறிவான.

எனினும், தன் மகனும தன்னைபபோல் சூழச்சித் திறமையோடு நடந்து கொள்ள வேண்டும என்று எதிர் பார்க்கிருன் குடிலன். அதற்கு மாருக, ராஜதூதனுகப் புறப்படவேண்டிய சமயத்திலேயே பலதேவன தன சிற்றின்ப லீலைகளில் காலத்தையும் பொருளையும் விரயம செயது கொண்டிருக்கிருன கஷ்டப்பட்டுத் தந்தை தேடி வைக்கும பணத்தை யெல்லாம பாழாக்குவதோடு.

பணம் பணம் என்(று)ஏன்
பதைக்கிருய் பிணமே?

என்று தன தந்தையையே நேருக்கு நேர் கேட்டுவிடுகிருன். நமமுடைய உள்ளம நடுங்குகிறது இந்த வாாத்தையைக் கேட்டதும்; எனினும் நம்முடைய புத்தி ஒபபுக் கொள்கிறது, 'இது குடிலனுக்குத் தக்க தண்டனைதான!' என்று.

பாண்டிய மன்னனின முதல் மந்திரி குடிலன எத்தனையோ அதிகார ஆடமபர வைபவஙகளால் சூழபபட்டிருக்கிருன். பாண்டியன் 'நரேந்திரன்' எனருல், இந்த மந்திரி 'குடிலேந்திரன' எனறு புகழபெற்றிருககிருன். இவனுடைய வாழவானது சொர்கக வாழவுபோலத் தோன்றுகிறது ஸதூலமாகப பார்பபவர்களுககு; மனச்சாட்சியாலும் துன்புறுத்த முடியாத இந்த வாழவை நரகமாக்கி விடுகிருன் மகன!

பலதேவனுடைய யோக்கியதை அந்தப்புரத்துப் பெண்களான மனோன்மணிக்கும் வாணிக்கும சரியாகத் தெரியாவிட்டாலும் நாடெல்லாம தெரியப பிரசித்தமானது தான. எனினும தான் ராஜாவாக விருமபிய குடிலன அந்தப

பதவியை இந்த மகனுக்கு. அளிக்கத்தான் விரும்புகிறான். தானே ஒரு புதிய அரசவமசத்திற்கு மூல புருஷனைப் பார்க்க விருமபும் அவன 'சூரிய புத்திரனாகிய மனுச்சக்கர வர்த்தி' என்பது போல் 'குடிலேந்திர புத்திரன் பலதேவ ராஜா' என்று இந்த மகனையும அந்தப் பதவிக்கு உயர்த்தி விடபபார்க்கிறான.

இத்தகைய தனிப்பெரு முயற்சியில் ஒத்துழைக்கத் தெரியாவிட்டாலும், இதறகுக் கேடான காரியமாவது செயயாமல் இருக்கத் தெரியவேண்டாமா பல தேவனுக்கு? இவன்தான் குடிலன் பதவியையும வாழ்க்கையையும் கூட நாசமாக்கி விடுகிறானே!

இவ்வளவு மோசமான ஆசாமியைத்தான் ஜீவக மன் னன் குடிலன் பேசசைக் கேட்டுப புருஷோத்தமனுடைய ராஜசபைக்குத் தூதனாக அனுப்புகிறான. இந்தப பல தேவன் தன்னை,

**மந்திரச் சிகாமணி—**
**தந்திரத் தலைவன்—**
**குடிலேந்திரன் மகன் !**

என்று அறிமுகப் படுத்தியது தான் தாமதம, 'மடையன்' என்று புருஷோத்தமன் தனக்குள் தானே சொல்லிக் கொண்டு, வந்த காரியத்தை விசாரிக்கிறான்.

தூரத்திலிருக்கும புருஷோத்தமன்கூட இவனைக் கண்டதும, பேச்சைக கொஞசம் கேட்டதும், இவனை 'மடையன்' என்றே தீர்மானித்து விடுகிறான. 'அயோக்கியனுங் கூட' என்று தெரிந்துகொள்வதற்குச் சந்தர்ப்பம் கிடைக்க வில்லை.

அயோக்கிய சிகாமணியான குடிலனையோ 'மடையன்' என்று சொல்லமுடியுமா? அவன் மகன் அயோக்கியத்

தனத்தில் அந்தச் சிகரத்தை எட்ட முடியவில்லையென்றால், இவனுடைய புத்திக் குறைவுதான் அதற்குக் காரணம். எனினும் திருமணத் தூதனாகப் போன இவன் அந்தச் சமயத்திற்காவது மனோன்மணி-புருஷோத்தமன் திருமணத்தைத் தடுத்துவிடுகிறான்.

இப்படித் தந்தையோடு ஓரளவு ஒத்துழைக்க முயன்றும், அந்த அறிவுக் கூர்மையையும் சூழ்ச்சியின் ஆழங்களையும் பலதேவனால் அறிந்துகொள்ள முடியவில்லை. பலதேவனைப்போல் சிற்றினபத்தில் மூழ்கிக்கிடப்பவனுக்கு. அறிவைக் கூர்மை செய்யத்தான் அவகாசம் ஏது?

தந்தையைப் பூர்ணமாக நம்பி அவன் பின்னே நிழல் போல் சென்று காரியசித்தி பெறுவதற்கும் போதுமான ஒருமையுள்ளம் வேண்டுமல்லவா? அதற்கும் இடங் கொடுக்கவில்லை பலதேவனுடைய சிற்றினப ஒழுக்கம்.

பலதேவனுடைய ஒழுக்கக் குறைவினால் ஒரு போர் வீரன் அடம் சாதித்து வேலால் இவனைக் காயப்படுத்துகிறான். 'உன் நடத்தையினால்தான் இப்படி நேர்ந்தது' என்று தந்தை இடித்துச் சொன்னதும், பலதேவனும் எதிர்த்துப் பேசுகிறான் :

> மன்னனைக் குத்திட
> உன்னினை; ஊழ்வினை
> என்னையே குத்திட
> இசைந்த(து) யார்பிழை?

பலதேவன்தான் உண்மையில் குடிலனைத் தண்டிக்கும் ஊழ்வினையாக வந்து முளைத்தவன். இப்படிக் கதாபாத்திரங்களைப் படைக்கும் ஆசிரியர் ஷேக்ஸ்பியரின் நாடகப் பண்பிலே ஊறிய தமது அறிவுத்திறமையை நன்கு வெளியிடுகிறார்.

*

# உ ரி மை யு ரை

*[ஆசிரியரின் இந்த உரிமையுரை ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கப் பெற்றது.]*

திருவனந்தபுரம் அரசர் கல்லூரியின்

முன்னாள் - தலைவர்

உயர்திரு

**ஆர். ஹார்வி**

(எம். ஏ., எல். எல். டி., எப். எம். யு.)

அவர்களுக்கு

அவர்தம் அன்பிற்கு உரிய சீடரான இந்த ஆசிரியரால் இந்நூல் உரிமையாக்கப் பெறுகின்றது.

## ஆசிரியர் முகவுரை

மறைமுதற் கிளந்த வாயான் மதிமுகிழ் முடித்த வேணி
இறைவர்தம் பெயரை நாட்டி இலக்கணஞ் செய்யப் பெற்றே
அறைகடல் வரைப்பிற்பாடை அனைத்தும்வென் றாரி யத்தோ
டுறழ்தரு தமிழ்த்தெய் வத்தை உண்ணினைந் தேத்தல்
செய்வாம்

இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவர் இயல்வாய்ப்ப
இருமொழியும் வழிப்படுத்தார் முனிவேந்தர் இசைபரப்பும்
இருமொழியும் ஆன்றவரே தழீஇனார் என்றாலிவ்
விருமொழியும் நிகரென்னும் இதற்கையம் உளதேயோ

கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை
மண்ணி டைச்சில இலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணி டைப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ

*என்றெடுத்த ஆன்றோர் வசனங்கள் உபசாரமல்ல, உண்மையே யென்பது பரதகண்டம் என்னும் இந்தியா தேசத்திலுள்ள பற்பல பாஷைகளைச் சற்றேனும் ஆராய்ந்து ஒப்பிட்டு நோக்கும் யாவர்க்கும் திண்ணிதிற் றுணியத் தக்கதே. பழமையிலும், இலக்கண நுண்மையிலும், இலக்கிய விரிவிலும், ஏனைய சிறப்புக்களிலும் மற்றக் கண்டங்களிலுள்ள எப் பாஷைக்கும் தமிழ்மொழி சிறிதும் தலை கவிழ்க்கும் தன்மையதன்று. இவ்வண்ணம் எவ்விதத்திலும் பெருமை சான்ற இத் தமிழ்மொழி பற்பல காரணச் செறிவால், சில காலமாக நன்கு பாராட்டிப் பயில்வார் தொகை சுருங்க, மாச டைந்து நிலை தளர்ந்து, நேற்றுதித்த தெலுங்கு முதலிய பாஷை களுக்கும் சமமோ தாழ்வோ என்று அறியாதார் பலரும் ஐய முறும்படி அபிவிருத்தியற்று நிற்கின்றது. இக்குறைவு நீங்கத் தங்கள் தங்களுக்கியன்ற வழி முயற்சிப்பது, தங்களை மேம்படுத் தும் தமிழ்மொழியைத் தம்மொழியாக வழங்கும் தமிழர் யாவரும் தலைக்கொள்ள வேண்டிய தவறாக் கடன்பாடன்றோ!*

2. மேற்கூறிய முயற்சிக்கேற்ற வழிகள் பலவுளவேனும் அவற்றுள் இரண்டு தலைமையானவை. முதலாவது முன்னோராற் பொருட்சுவையும் சொற் சுவையும் பொலிய இயற்றப்பட்டிருக் கிற அருமையான நூல்களுள் இறந்தவை யொழிய இனியும் இற வாது மறைந்து கிடப்பனவற்றை வெளிக் கொணர்ந்து நிலைபெறச் செய்தலேயாம். இவ்வழியில் தற்காலம் உழைத்துவரும் பெரும் புகழ்படைத்த ம-ா-ா-ஸ்ரீ தாமோதரம் பிள்ளையவர்கள், பரமஸ்ரீ வே. சாமிநாதய்யர் அவர்கள் முதலிய வித்வசிரோமணிகளுடைய நன்முயற்சிக்கு ஈடு கூறத்தக்கது யாது? தம் மக்கட்கு எய்ப்பில் வைப்பாக இலக்கற்ற திரவியங்களைப் பூர்வீகர்கள் வருந்திச் சம் பாதித்து வைத்திருக்க, அம் மக்கள் அவை இருக்குமிடந்தேடி எடுத்தநுபவியாது இரந்துண்ணும் ஏழைமை போலன்றோ ஆகும். ஈடு மெடுப்பு மற்ற நுண்ணிய மதியும் புண்ணிய சரிதமுமுடைய நம் முன்னோர் ஆயிரக்கணக்கான ஆண்டு உழைத்து ஏற்படுத்தி யிருக்கும் அரிய பெரிய நூல்களை நாம் ஆராய்ந்து அறிந்து அநு பவியாது வாளா நொந்து காலம் போக்கல்! ஆதலால் முற்கூறிய உத்தம வித்துவான்களைப் பின்றொடர்ந்து நம் முன்னோர் ஈட்டிய பொக்கிஷங்களைச் சோதனை செய்து தமிழராகப் பிறந்த யார்க்கும் உரிய பூர்வார்ஜித கல்விப் பொருளை க்ஷேமப்படுத்தி அநுபவிக்க முயல்வது முக்கியமான முதற் கடமையாம்.

3. பூர்வார்ஜித தனம் எவ்வளவு பெரிதாக இருப்பினும் அதனைப் பாதுகாப்பதோடு ஒவ்வொருவரும் தத்தமக்கியன்ற அளவு உழைத்துச் சொற்பமாயினும் புது வரும்படியைச் சம்பா தித்துக்கொள்ள வேண்டுமென்பது பொதுவான உலக நோக்க மாக இருப்பதால், முற்கூறிய முயற்சியோடு இரண்டாவதொரு கடன்பாடும் தமிழர் யாவருக்கும் விட்டுவிலகத் தகாததாகவே ஏற்படும். பூர்வார்ஜிதச் சிறப்பெல்லாம் பூர்வீகர்கள் சிறப்பு; அந்த அந்தத் தலைமுறையார்களுக்கு அவரவர்கள் தாமே ஈட்டிய பொருளளவும் சிறப்பே யொழிய வேறில்லை. அத் தலைமுறையா ரைப் பின் சந்ததியார் பேணுவதற்கும் அதுவே யொழிய வேறு குறியுமில்லை. ஆனதினால் எக்காலத்திலும் எவ்விஷயத்திலும் பூர்வீகர்களால் தங்களுக்குச் சித்தித்திருப்பவற்றை ஒவ்வொரு தலைமுறையாரும் பாதுகாப்பதுமன்றித் தங்களாற் கூடிய அளவும் அபிவிருத்தி பண்ணவும் கடமை பூண்டவர்களாகின்றார்கள்.

'பூர்வார்ஜிதம் மிகவும் பெரிதாயிருக்கின்றதே! நம் முயற்சியால் எத்தனைதான் சம்பாதிப்பினும் நமது பூர்வார்ஜிதத்தின்முன் அது ஒரு பொருளாகத் தோற்றுமா' என மனந்தளர்ந்து கைசோர் வார்க்கு அவர் பூர்வார்ஜிதப் பெருமையே கேடு விளைவிப்பதாக வன்றோ முடியும்? அந்தோ! இக் கேட்டிற்கோ நம் முன்னோர் நமக்காக வருந்தி யுழைத்துப் பொருளீட்டி வைக்கின்றார்கள்! பிதிர்களாய் நிற்கும் அம் முன்னோர் இவ்விபரீத விளைவைக் கண்டால் நம்மை எங்ஙனம் வாழ்த்துவர்? இக்கூறிய உண்மை செல்வப் பொருளுக்கன்றிக் கல்விப் பொருளுக்கும் ஒரு குடும்பத்துள் வந்த ஒருவனுக்கன்றி ஒரு தேசத்திற் பிறந்த ஒவ்வொரு தலை முறையாருக்கும் ஒன்று போலவே பொறுத்தமுடையதாதலால்,

**குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்**
**மடிதற்றுத் தான்முந் துறும்**

என்னும் திருக்குறளை நம்பி நம் முன்னோர் யாதேனும் ஒரு வழியில் அபரிமிதமான சிறப்படைந்தாராயின் நாமும் அவர் போலவே இயன்ற அளவும் முயன்று பெருமை பெறக் கருதுவதன்றோ அம் முன்னோர்க்குரிய மக்கள் நாமென முன்னிற்றற்கேற்ற முறைமை!

**தீங்கரும் பீன்ற திரள்கால் உளைஅலரி**
**தேங்கமழ் நாற்றம் இழந்தாஅங்கு—ஒங்கும்**
**உயர்குடி யுட்பிறப்பின் என்னும் பெயர்பொறிக்கும்**
**பேராண்மை யில்லாக் கடை**

ஆதலால் அருமையாகிய பூருவ நூல்களைப் பாதுகாத்துப் பயின்று வருதலாகிய முதற்கடமையோடு அவ்வழியே முயன்று அந்த அந்தக் காலநிலைக் கேற்றவாறே புது நூல்களை இயற்ற முயலுதல் தமிழ்நாடென்னும் உயர்குடியிற் பிறக்கும் ஒவ்வொரு தலைமுறை யாருக்கும் உரித்தான இரண்டாம் கடமையாய் ஏற்படுகின்றது.

4. மேற்கூறிய இரண்டாம் கடமையைச் சிரமேற் கொண்டு தமிழோர் என்னும் பெரிய குடும்பத்துள்ளே தற்காலத்துள்ள தலைமுறையாருட் கல்வி கேள்வி அறிவு முதலிய யாவற்றுள்ளும் கனிஷ்டனாகிய சிறியேன்,

**இசையா தெனினும் இயற்றிஓ ராற்றல்**
**அசையாது நிற்பதாம் ஆண்மை**

என்னும் முதுமொழியைக் கடைப்பிடித்து நவீனமான பல வழி களுள்ளும் என் சிறு மதிக் கேற்றதோர் சிறு வழியிற் சில காலம் முயன்று வடமொழி முதலிய பாஷைகளிலுள்ள நாடக ரீதியைப் பின்ருெடர்ந்து இயற்றிய "மனோன்மணீயம்" என்னும் இந்நாட கம், பூர்வீக இலக்கியங்களுடன் சற்றேனும் உவமிக்க இயையா தெனினும், ஆஞ்சனேயராதி வானர வீரர்கள் சேதுபந்தனஞ் செய்யுங் காலத்தில் கடல் நீரிலே தோய்ந்து மணலிற் புரண்டு அம் மணலைக் கடலில் உகுத்த சிறு அணிற்பிள்ளையின் நன்முயற்சி அங்கிகரிக்கப் பட்டவாறே, கல்வி கேள்வியால் நிறைந்த இத் தலை முறைச் சிரேஷ்டர் அங்கீகரித்து எனது இச்சிறு முயற்சியும் தமிழ் மாதாவுக்கு அற்பித மாம்படி அருள்புரியாதொழியார் என நம்பிப் பிரகடனம் செய்யப்படுகின்றது.

5. இந்நாடகம் வடமொழி ஆங்கிலேயம் முதலிய பாஷை களில் உள்ள நாடக வழக்கிற் கிசையச் செய்திருப்பதால் இதனுள் ளடங்கிய கதை அங்கங்கே நடந்தேறும் சம்பாஷணைகளாலும் அவாய் நிலைகளாலும் கோவைப்படுத்தி அறிந்துகொள்ள வேண் டியதாயிருக்கின்றது. இக்கதை புதிதாக இருப்பதினுல் அவ்விதம் கோவைப்படுத்தி அறிந்து கொள்ளுவோர்க்கு அநுகூலமாகச் சுருக்கி ஈண்டுக் கூறப்படுகிறது.

## கதாசங்கிரகம்

6. முற்காலத்தில் மதுரைமாநகரில் ஜீவகன் என ஒரு பாண் டியன் அரசுபுரிந்து வந்தான். அவன் பளிங்குபோலக் களங்க மில்லாத நெஞ்சினன். அவன் மந்திரி குடிலன் என்பவன், ஒப்பற்ற சூழ்ச்சித் திறமையுடையவனுயினும், முற்றும் தன்னய மொன்றே கருதும் தன்மையனுயிருந்தான். அதனுல் அரசனுக்கு மிகவும் உண்மையுடையவன் போல் நடித்து அவனை எளிதிலே தன் வசப்படுத்திக் கொண்டான். அங்ஙனம் சுவாதீனப்படுத்திய பின்பு, தன் மனம் போனபடியெல்லாம் அரசனை யாட்டித் தன் செல்வமும் செல்வாக்கும் வளர்த்துக்கொள்ளத் தொன்னகராகிய மதுரை இடங்கொடாதென உட்கொண்டு அந்நகரின்மேற் பாண் டியனுக்கு வெறுப்பு பிறப்பித்து, திருநெல்வேலி என்னும் பதியிற்

கோட்டை கொத்தளம் முதலியன இயற்றுவித்து, அவ்விடமே தலை நகராக அரசன் இருந்து அரசாளும்படி செய்தான். முதுநகராகிய மதுரை துறந்து கொடுமதியாளனாகிய குடிலன் கைப்பட்டு நிற்கும் நிலைமையால் ஜீவகனுக்கு யாது விளையுமோ என இரக்கமுற்று அவனுடைய குலகுருவாகிய சுந்தர முனிவர் அவனுக்குத் தோன்றாத் துணையாயிருந்து ஆதரிக்க எண்ணித் திருநெல்வேலிக் கருகிலுள்ள ஓர் ஆச்சிரமம் வந்தமர்ந் தருளினர். முனிவர் வந்து சேர்ந்தபின் நிகழ்ந்த கதையே இந்நாடகத்துட் கூறப் படுவது.

7. முனிவர் எழுந்தருளியிருப்பதை யுணர்ந்து ஜீவகன் அவரைத் தன் சபைக்கழைப்பித்து, தனது அரண்மனை கோட்டை முதலியனவற்றைக் காட்டி அவை சாசுவதம் என மதித்து வியந்துகொள்ள, அவ்விறுமாப்பைக் கண்ணுற்ற முனிவர், அவற்றின் நிலையாமையைக் குறிப்பாகக் கூறியும் அறியாதொழிய, அவன் குடும்பத்திற்கும் கோட்டை முதலியவற்றிற்கும் க்ஷேமகர மாகச் சில கிரியா விசேஷம் செய்யும்பொருட்டு அவன் அரண் மனையில் ஓரறை தம் சுவாதீனத்துவிடும்படி கேட்டு, அதன் திறவு கோலை வாங்கிக்கொண்டு தம் ஆச்சிரமம் போயினர். ஜீவக வழுதிக்குச் சந்ததியாக மனோன்மணி என்னும் ஒரே புத்திரிதான் இருந்தனள். அவள் அழகிலும் நற்குண நற்செய்கைகளிலும் ஒப்புயர்வற்றவள். அவளுக்கு அப்பொழுது வயது பதினாறாக இருந்தும், அவள் உள்ளம் குழந்தையர் கருத்தும் துறந்தோர் நெஞ்சும்போல யாதொரு பற்றும் களங்கமுமற்று நின்மலமாகவே யிருந்தது. அவளுக்கு உற்ற தோழியாக இருந்தவள் வாணி. இவள் ஒழுக்கம் தவறா உளத்தள்; தனக்கு நன்றெனத் தெள்ளி தில் தெளிந்தவையே நம்புந் திறத்தள். அல்லனவற்றை அகற்றும் துணிபுமுடையள். இவ் வாணி நடராஜனென்ற ஓர் அழகமைந்த ஆனந்த புருஷனை யறிய, அவர்களிருவர் உள்ளமும் ஒருவழிப் படர்ந்து காதல் நேர்ந்தது. அதற்கு மாறாக இவ் வாணியினது பிதா மிகப் பொருளாசை யுடையோனாதலால், குடிலனுடைய மகன் பலதேவன் என்னும் ஒரு துன்மார்க்கனுக்குத் தன் மகளை மணம்புரியில் தனக்குச் செல்வமும் கௌரவமும் உண்டாமென்ற பேராசை கொண்டு அவ்வாறே அரசன் அநுமதி பெற்று விவாகம் நடத்தத் துணிந்தனன். அதனால் வாணிக்கு விளைந்த சோகம்

அளவற்றதாயிருந்தது. இச்சோகம் நீங்க மனோன்மணி பலவாறு ஆறுதல் கூறும் வழக்கமுடையவளாயிருந்தாள். இவ்வாறிருக்கும் போது முனிவர் கோட்டை காண வந்த நாளிரவில் ஈடுமெடுப்புமற்ற சேரதேசத்தரசனாகிய புருடோத்தமவர்மனைப் பூருவகரும பரிபாகத்தால் மனோன்மணி கனாக் கண்டு மோகம் கொள்ள அவட்குக் காமசுரம் நிகழ்ந்தது. அச்சுரம் இன்ன தன்மையதென்றுணராது வருந்தும் ஜீவகனுக்குத் தெய்வ கதியாய்த் தம் அறைக்கு மறுநாட்காலமே வந்த முனிவர் மனோன்மணி நிலைமை காமசுரமே எனக் குறிப்பாலுணர்ந்து அவள் நோய் நீங்க மருந்து மணவினையே எனவும், அதற்கு எவ்விதத்திலும் பொருத்தமுடையோன் சேர தேசத்துப்புருடோத்தமனேயெனவும், அவ்வரசனது கருத்தினை நன்குணர்ந்து அம் மணவினை எளிதில் முடிக்க வல்லோன் நடராஜனே யெனவும் உபதேசித்தகன்றார். வாணியினது காதலனாகிய நடராஜன்மேல் அவள் பிதா ஆரோபித்திருந்த அபராதங்களால் வெறுப்புக் கொண்டிருந்த பாண்டியன் அக் குருமொழியை உட்கொள்ளாதவனாய்க் குடிலனுடைய துன் மந்திரத்தை விரும்பினன். குடிலனோ, தன்னயமே கருதுவோனாதலால், சேரதேசத் தரசன் மருமகனாக வருங்காலத்தில் தன் சுவாதந்தரியத்திற்கு எங்ஙனம் கெடுதி வருமோ என்ற அச்சத்தாலும் ஒருகால் தன் மகனாகிய பலதேவனுக்கே மனோன்மணியும் அவட்குரிய அரசாட்சியும் சித்திக்கலாகாதா என்ற பேராசையாலும் முனிவர் கூறிய மணத்தைத் தடுப்பதற்குத் துணிந்து, தொடக்கத்திற் பெண் வீட்டார் மணம் பேசிப் போதல் இழிவென்னும் வழக்கத்தைப் பாராட்டிப் புருடோத்தமன் மனக்கோள் அறிந்தே அதற்கு யத்தனிக்க வேண்டுமென்றும், அப்படியறிதற்குப் பழைய சில விவாதங்களை மேற்கொண்டு ஒரு தூது அனுப்ப வேண்டுமென்றும், அப்போது கலியாணத்திற்குரிய சங்கதிகளையும் விசாரித்து விடலாமென்றும் ஒரு சூதுகூற அதனை அரசன் நம்பி, குடிலன் மகன் பலதேவனையே இவ்விஷயத்திற்குத் தூதனாக அனுப்பினான்.

8. சேரதேசத்திலோ புருடோத்தமன் தனக்குச் சிலநாளாக நிகழ்ந்துவரும் கனாக்களில் மனோன்மணியைக் கண்டு காமுற்று அவள் இன்னாளென வெளிப்படாமையால் மனம் புழுங்கி

யாருடனேனும் போர் நேர்ந்தால் அவ்வாரவாரத்திலாயினும் தன் மனத்தைக் கொள்ளை கொள்ளும் கனு வொழியாதா வென்ற நோக்கமுடனிருக்கும் சந்தியாக இருந்தது. அதனுற் பலதேவன் சென்று தன் பிதா தனக்கு இரகசியமாகக் கற்பித்தனுப்பியபடி சேரன் சபையில் அகௌரவமான துர்வாதம் சொல்லவே புருடோத்தமன் கோபம் கொண்டு போர்க்கோலம் பூண்டு பாண்டி நாட்டின்மேற் படையெடுத்துப் புறப்பட்டான். அச் செய்தி யறிந்து ஜீவகனும் போருக்கு ஆயத்தமாகவே இருபடை யும் திருநெல்வேலிக்கெதிரிலே கை கலந்தன. அப்படிப் போர் நடக்கும்போது பாண்டியன் சேனையின் ஒரு வியூகத்திற்குத் தலை வனுக இருந்த பலதேவனை அவன் கீழிருந்த ஒரு சேவகன் தன் வேலாலே தாக்க அதனுல் அவன் மூர்ச்சிக்கவும் படைமுழுதும் குழம்பவும் சங்கதி ஆயிற்று. அப்படித் தாக்க நேரிட்ட காரண மேதென்ருல், பலதேவன் களவுவழிக் காமம் துய்க்கும் துன் மார்க்கனுதலால் அப்படைஞனது சகோதரியைக் கற்பழித்துக் கெடுத்துவிட்டது பற்றியுண்டான வைரமே என்பது படைஞன் வேலால் பலதேவனைத் தாக்கியபொழுது கூறிய வன்மொழியா லும் அவன் தங்கைக்கு அரண்மனையினின்றும் பலதேவன் திருடிப் பரிசாக அளித்த ஒரு பொற்சிருடி அவன் கையில் அக் காலம் இருந்தமையாலும் வெளிப்படுகின்றது. படை நியதி கடந்த அச்சேவகனை அருகுநின்ற வீரர் அக்கணமே கொன்றுவிட்டார் கள். பலதேவனும் மூர்ச்சை தெளிந்துகொண்டான். ஆயினும் படையிற் பிறந்த குழப்பம் தணியாது பெருகிவிட்டதனுல் பாண்டி யன் சேனை சின்ன பின்னப்பட்டுச் சிதறுண்டு ஜீவகன் உயிர் தப்புவதும் அரிதாகும்படி தோல்வி நேர்ந்தது. சத்தியவாதியாகிய நாராயணன் என்னும் ஒரு சுத்தவீரன் அக்காலம் வந்து உதவி செய்யாவிடில் அப்போர்க்களத்தில் ஜீவகன் மாண்டே யிருப்பான்.

9. இந்நாராயணன் யாரென்ருல், நடராஜனுடைய நண்பன். இவன் குடிலனுடைய சூதுகள் தெரிந்தவன். அரசன் நிந்தித்துத் தள்ளினும் அவனைக் காப்பாற்றும் பொருட்டு அவனை விட்டு நீங்காது மதுரையினின்றும் அவனேடு தொடர்ந்து வந்த பரோபகாரி. குடிலன் இவன் திறமும் மெய்ம்மையும் அறிந்துளா

ஞதலால், இந் நாராயணன் போர்முகத்திருக்கில், தான் எண்ணியபடி ஜீவகனுயிருக்குக் கேடுவர வொட்டான் எனக் கருதி, சண்டை ஆரம்பிக்கு முன்னமே அவனைக் கோட்டைக் காவலுக்காக நியமித்தனுப்பினான். ஆயினும் போர்க்களமே கண்ணாக இருந்த நாராயணன் சேனையிற் குழப்பம் பிறந்தது கண்டு சில குதிரைப் படைகளைத் திரட்டிக்கொண்டு திடீரென்று பாய்ந்துசென்று அரசனையும் எஞ்சின சேவகரையும் காப்பாற்றிக் கோட்டைக்குட் கொண்டு வந்து விடுத்தான். சுத்தவீரனாகிய அரசன் இங்ஙனம் தான் பகைவருக்கு முதுகிட்ட இழிவை நினைந்து நினைந்து துக்கமும் வெட்கமும் தூண்டவே தற்கொலை புரிய யத்தனிக்கும் எல்லை நாயாயணன் மனோன்மணியது ஆதர வின்மையை அரசனுக்கு நினைப்பூட்டி அக்கொடுந்தொழிலி ருந்து விலக்கிக் காத்தான். அவனது நயவுரையால் அரசன் ஒருவாறு தெளிவடைந்திருக்கும்போது சேரன் விடுத்த ஒரு தூதுவன் வந்து, ஒரு குடத் தாமிரவர்ணி நீரும் ஓர் வேப்பந் தாரும் போரிலே தோற்றதற்கு அறிகுறியாகக் கொடுத்தால் சமர் நிறுத்துவதாகவும், அன்றேல் மறுநாட் காலையிற் கோட்டை முதலிய யாவும் வெற்றிடமாம்படி தும்பை சூடிப் போர் முடிப்ப தாகவும் கூறினான். போரிலே ஒரு முறை தான் புறங்கொடுத்த புகழ்க்கெடுதியை உயிர் விடுத்தேனும் நீக்கத் துணிவுகொண்ட ஜீவகன் அதற்குடன்படாமல் மறுத்துவிட்டு, பின்னும் சமருக்கே யத்தனித்துத் தனது அரண்களைச் சோதித்து நோக்குங்கால் அவை ஒருநாள் முற்றுகைக்கேனும் தகுதியற்றபடி அழிந்திருப்பதைக் கண் ணுற்று, அவ்வளவாக தன் படைமுற்றும் தோற்க நேரிட்ட காரணம் குடிலனோடு வினவலாயினான். தன் கருத்திற்கெதிராக அரசனைக் காப்பாற்றிவரும் நாராயணன்மேற் தனக்குள்ள பழம் பகை முடிக்க இதுவே தருணம் எனக் கண்டு அரண் காவலுக்கு நியமிக்கப்பட்ட நாராயணன் காவல் விடுத்துக் கடமைமீறி யுத்த களம் வந்ததே காரணமாகக் காட்டி கோபமூட்டிப் படையிற் பிறந்த குழப்பத்திற்கு ஏதுவாகப் பலதேவனை ஒரு சேவகன் வேலாற்றுக்கினதும் தெரிவித்து, அதுவும் வியூகத் தலைவனாக ஆக்கப்பெறாத பொறாமையால் நாராயணன் ஏவிவிட்ட காரியமே எனவும் அத் தொழிலிற்குப் பரிசாக அவன் அரண்மனையினின் றும் திருடிக்கொடுத்ததே அவன் கையிலிருந்த அரண்மனை

முத்திரை பொறித்த பொற்ரொடி எனவும் குடிலன் ஒரு பொய்க் கதை கட்டி அதனை அரசன் நம்பும்படி செய்தான். அவ்வாறே களவு கொலை ஆஞ்ஞாலங்கனம் முதலிய குற்றங்களை நாராயணன் மேற் சுமத்தி அவற்றிற்காக அவனைக் கழுவேற்றும்படி விதியும் பிறந்தது.

10. இத்தருணத்தில் சுந்தரமுனிவர் அத்தியந்த ஆவசிக மான ஓரிரகசியாலோசனைக்கு அரசனை யழைப்பதாகச் செய்தி வந்தமையால் நாராயணனை அவ்விதிப்படி கழுவேற்றவில்லை. முனிவர் இப்போது வந்த காரணம் என்னவென்ருல், ஜீவகன் குடிலன் வசத்தனாய் நெல்வேலிக் கோட்டையே சாசுவதமென இறுமாந்திருந்தமை கண்டு பரிதாபம் கொண்டு, தமக்கென இரந்து வேண்டிக் கொண்ட அறைமுதல், தம தாச்சிரம வெளி வரையும், ஆபத்காலோபயோகமாக அதிரகசியமான ஒருசுருங்கை உழைத்துச் சமைத்துக்கொண்டு, பற்றுக்கோடற்று நின்ற ஜீவகனை யும் அவன் மகளையும் கேடுற்ற கோட்டையினின்றும் தமது ஆச்சி ரமத்திற்கு அச் சுருங்கைவழி யழைத்துச் செல்ல உன்னியே சுந்த ரர் இத்தருணம் எழுந்தருளினர். கோட்டையின் நிலையாமை யுணர்ந்தும் அதின்மேல் வைத்த அபிமானம் ஒழியாமையால் அஃதுடன் தான் முடியினும் இன்னும் ஒருமுறை போருக் கஞ்சிப் புறங்கொடுத்தல் தகாதென ஜீவகன் துணிந்து மறுக்க, மனோன்மணி, பாண்டியர் குலத்திற்கு ஏக சந்ததியாக இருப்ப தனல் மற்றையர் எக்கேடுறினும் அவளையேனும் காப்பாற்றுதல் தம் கடமையென ஒருதலையா உறுத்து முனிவர் கூற, மன்னவன் அங்ஙனம் இயைந்து நடுநிசியில் முனிவரோடு தன் மகளை ஆச்சி ரமம் அனுபபுவதாக ஒப்புக்கொண்டான். முனிவரும் சம்மதித்து அகன்ருர். உடனே நிசாமுகம் தோன்றிற்று. தன் அருமை மகளைப் பிரியும் வருத்தம் ஒருபுறமும் பிரியாதிருக்கில் அவட்குண்டாம் கெடுதியைக் குறித்த அச்சம் மற்ரொரு புறமுமாக ஜீவகன் சித்தத்தைப் பிடித்தலைக்கக் கலக்கமுற்று, குரு மொழியிலும் ஐயம் பிறந்து, குடிலனை வரவழைத்து, முனிவர் அதிரகசியமாகக் கூறிய சுருங்கை முதல் சகல சங்கதிகளையும் தெரிவித்து அவனது அபிப் பிராயம் உசாவுவானாயினன். அதற்கு அப்பாதகன் இதுவே தன் மனக்கோள் நிறைவேற்றற்குரிய காலமெனத் துணிந்துகொண்டு

*உயிரிலா நிலையும் உணர்விலா நடையும்*
*பார்த்திடிற் சூத்திரப் பாவையே. பாவம்!*
*(மனோன்மணி புருஷோத்தமனைக் காண : உடன் அவன் நிற்குமிடமே விரைவில் நடக்க.)*

**யாவரும்:**—*எங்கே போகிறாள்? இது யார்? இது யார்?*

**புரு :**—*இங்கோ நீ யுளை! என் னுயிரமிர்தே!* 190
*(புருஷோத்தமன் தலைதாழ்க்க : மனோன்மணி மாலைசூட்டி அவன் தோளோடு தளர்ந்து மூர்ச்சிக்க)*

**சுந்தரர் :**—*மங்கலம்! மங்கலம்! மங்கலம்! உமக்கே!*

**யாவரும் :**—*சோரன்! சோரன்! சேரன்! சோரன்!*

**நிஷ்டாபரர் :**—*கண்டேன்! கண்டேன்! கருணாகரரே!*
*(கருணாகரரைத் தழுவி)*

**யாவரும் :**—*பற்றுமின்! பற்றுமின்! சுற்றுமின் எற்றுமின்!*

**பலதே :**—*கொன்மின்! கொன்மின்!*
*(யாவரும் புருஷோத்தமனைச் சூழ : சுந்தரர் கூட்டம் விலக்க)*

**சுந்தரர் :**— *நின்மின்! நின்மின்!*
*(அருள்வரதனும் மெய்காப்பாளரும் வர)*

**அருள்வரதன் :**—*அடையின் அடைவீர் யமபுரம். அகன்மின்!*

*(புருஷோத்தமனையும் மனோன்மணியையுஞ் சூழ்ந்து நின்றுகாக்க)*

**யாவரும் :**—*படையுடன் பாதகன்!*
*(பின்னிட)*

**அருள் :**—*(விலங்குடன் குடிலனைக் காட்டி) பாதகன் ஈங்குளான்.*

**ஜீவ :**—*குடிலா வுனக்கும் இக் கெடுதி யேன்? ஐயோ!*
*அடிகாள்! இதுவென்! இதுவென்! அநீதி!*

அறியேன் இச் சூது அறியேன் ! அறியேன் ! 200

**சுந்தர :**—பொறு ! பொறு ! ஜீவக ! அறிகுதும்
விரைவில் !

**புருஷோத்தமன் :**—வஞ்சியான் வஞ்சியான் !
மன்னவ ! உன்சொல்
அஞ்சினேன். சூது உன் அமைச்சன் செய்கை.
சுருங்கையின் தன்மை சொல்லி யென்னை யிங்கு
ஒருங்கே யழைத்தான் உன்னகர் கவர.
உன் அரசுரிமையும் உன் நகர் நாடும்
என்னிடம் இரந்தான் இச் சூதிற்கா !
ஓதிய சுருங்கையின் உண்மைகண்டு இவன் தன்
சூதும் துரோகமும் சொலி யுனைத் தெருட்ட
எண்ணி யான் வந்துழி யிவ்வொளி விளக்கும் 210
பண்ணியல் பாட்டும் பழைய புண்ணியமும்
தூண்டிட ஈண்டு மற்று அடையவும், யாண்டும்
எனது உயிர் அவாவிய இவ் அரு மருந்தை
நனவினிற் காணவும் நண்ணவும் பெற்றேன்.
பிரிகிலம் இனி மேல் உரிய நின் உரிமை
யாதே யாயினும் ஆகுக. ஈதோ !
மீள்குவன். விடைகொடு. நாளையும்
வேட்டையேற் காண்போம் ஞாட்பிடை நாட்பே.

**ஜீவ :**—உண்மையோ? குடிலா ! உரையாய் !—
(குடிலன் முகங்கவிழ்த்து நிற்க)

**நாரா :**— இதுவும் நின்
உண்மையோ ! மௌனம் ஏன்? 220

**யாவரும் :**— ஓகோ ! பாவி!

**நாரா :**—படபடத்திடு நின் பாழ்வாய் திறவாய் !

**சுந்தரர்** :—விடு விடு ! விசாரணைக்கு இதுவன்று
அமையம் !
நன்மையே யாவும் நன்மையாய்முடியின்.
வாராய் ஜீவக ! பாராய் உன் மகள்
தாராத் தன்னிரு கை தோள் சூட்டி
எண்படு மார்பிடைக் கண்படும் நிலைமை.
இருமனம் ஏன் இனி? என்றும் இப்படியே
மருகனும் மகளும் வாழ்க ? வாழ்த்துதியே.

**ஜீவ** :—கண்மணீ ! அதற்குள் கண்வளர்ந்தனையோ !
உன்னையும் மறந்து உறங்குதியேல் இனிமேல் 230
என்னை யெங்கு எண்ணுவை? இறும்பூது
இருவரும்
ஒருவரை யொருவர் உணர்ந்தமை !
(மனோன்மணி திடுக்கிட்டு விழிக்க)
வெருவலை ! மணியே ! பிரியீர் இனியே.

வாழ்த்து மருட்பா

பள்ள உவர்க் கடலில் பாய்ந்தோடும்
வெள்ளமென
உள்ள முவந்தோடி யொன்றுறுய் - விள்ளா
மணியின தொளியும் மலரது மணமும்
அணிபெறு மொழியின் அருத்தமும் போல,
இந்நிசி யாக என்ஞான்றும்
மன்னிய அன்புடன் வாழ்மதி சிறந்தே !
(யாவரும் வாழ்த்த)

**ஐந்தாம் அங்கம் : மூன்றும் களம்**

**முற்றிற்று.**

**கலித்துறை**

*சிறிதாயினும் பற்றிலாது கை யற்ற திருமகள் தன்*
*குறியாந் தலைவன் குடிலன் பின் எய்திய*
*கொள்கை கண்டோர்*
*அறிவாம் எனும் நம் அகங்கர மாறும்*
*அவத்தையினிற்*
*செறிவா யிருக்குந் திருக்கு வெளிப்படுஞ் சீரிதுவே.*

**ஐந்தாம் அங்கம் முற்றிற்று.**



| | | | |
|---|---|---|---|
| ஆசிரியப்பா | 6-க்கு | அடி | 569 |
| வெண்செந்துறை | 6-க்கு | ,, | 12 |
| கொச்சகக்கலிப்பா | 3-க்கு | ,, | 12 |
| மருட்பா | 1-க்கு | ,, | 6 |
| ஆகப் பாக்கள் : | 16-க்கு | ,, | 599 |



| | | |
|---|---|---|
| பாயிரம் | அடி | 57 |
| அங்கம் 5-க்கு | ,, | 4445 |
| ஆக இந்நாடகத்துள் வந்த அடிகள் | | 4502 |

**மனோன்மணீயம்—முற்றிற்று.**



# உரைக் குறிப்புக்கள்

## பாயிரம் (முகவுரை)

வேதசிகை - வேதத்தின் முடிபான உபநிடதம். போதம் - அறிவு. நுதல் - நெற்றி. ஆரியம் - வடமொழி. தெக்கணம் - தென் இந்தியா. கவின் - அழகு. வாழ்த்துதும் - வாழ்த்துவோம். குடமுனி - அகத்தியன்.

தொடுகடல் - தோண்டப்பெற்ற கடல். சகர புத்திரர் கடலைத் தோண்டினர்கள் என்பது புராணக் கதை. அதனால் கடலுக்குச் சாகரம் என்றும் ஒரு பெயருண்டு.

புகழாமே - புகழாமோ. ஏகாரத்திற்கு இங்கே எதிர் மறைப்பொருள். உரையிழந்து விழிப்பாரேல்: இரு பொருள்.

அற்புதமாமே - அற்புதமாமோ. இந்தத் தாழிசையில், 'குற்றம் குற்றமே!' என்று சொல்லிச் சிவபெருமானது நெற்றிக் கண்ணுக்கும், அஞ்சாது இலக்காகித் துன்புற்ற நக்கீரரின் கதை குறிக்கப் பெறுகின்றது.

சதுமறை - நால்வேதம். இத்தாழிசையின் கருத்தை ஆசிரியர் பின்வருமாறு விளக்கியுள்ளார்: 'ஆரிய பாஷை பிரபலப்படு முன் தமிழ் போன்ற ஒரு மூல பாஷை ஐரோப்பாவிலும் ஆசியா கண்டத்திலும் பரவியிருந்ததென்பது பல பாஷைகளையும் கற்றுணர்ந்த ஆங்கிலேய பண்டிதர்களின் துணிபு.'

வேகவதி - வைகையாறு.

கரவாக்காரணத்தின் - மறைத்துவிடாது என்ற காரணத்தின் இத்தாழிசையில் திருஞான சம்பந்தரின் கதை குறிக்கப்படுகிறது.

கூன் பாண்டியன் காலத்தில் சமணர்கள் சம்பந்தரோடு வாதம் நிகழ்த்தியபோது, சம்பந்தர் பாட்டை எழுதி நீரில் விட்ட ஏடு நீரோட்டத்தை எதிர்த்துச் சென்றதாம்.

கடைஊழி - ஊழியின் கடைசியில், கற்பாந்த காலத்தில். அம் பலத்துள் உடையார் - பொன்னம்பலத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான். வாசகம் - திருவாசகம். இந்தத் தாழிசையில், மாணிக்கவாசகரின் திருவாசகப் பாடல்களுக்கு நடராஜப் பெரு மான் ஒரு பிரதி எழுதிவைத்துக் கொண்டார் என்ற கதை குறிக் கப் படுகின்றது.

இலகும் - விளங்கும். வியஞ்சனம் - அறிகுறி. ஏழாம் தாழிசை குறித்து ஆசிரியர் எழுதியிருப்பது : 'உத்தமமான கிழக் குத் திசையே முகமாகக் கலைமகளிருக்கில் அவள் வலப்புற விழி தென்புறமாக இருக்கும் என்பது பற்றி, வலது விழி தென்மொழி எனக் கற்பனையாகக் கூறப்படுகிறது.' இக்கற்பனை அடுத்த இரண்டு தாழிசைகளில் விளக்கம் பெறுகின்றது.

வீறு - வேறு யாருக்கும் இல்லாத சிறப்பு.

குணதிசை - (1) கீழ்த்திசை, (2) நற்குணத்திற்கு இசைந்த வழி.

பூர்வ திசை - (1) கீழ்த்திசை, (2) பழைய நிலைமை.

பத்துப்பாட்டு - ஒரு சங்க இலக்கியத் தொகை நூல்.

எத்துணையும் - எவ்வளவும். பொருட்கு இசையும் இலக் கணம் - பொருளிலக்கணம்.

உள்ளுவரோ - நினைத்துப் பார்ப்பார்களோ. கனம், சடை - வேதத்தை உருவேற்றும் முறை.

## முதல் அங்கம் : முதற் களம்

ஜீவகன் என்ற பாண்டிய மன்னன் மதுரையைவிட்டுத் திருநெல்வேலியைப் புதிய தலைநகரம் ஆக்கிக்கொண்டு அங்கே கோட்டை கொத்தளங்கள் அமைத்த பிற்பாடு, சுந்தர முனிவரும் திருநெல்வேலிக்கு வரவே, அவரை அரசன் வரவேற்பதுடன், நாடகம் தொடங்குகிறது.

நிகழ்தர - நிகழ. சேர்மின் - கொணர்ந்து வையுங்கள். கடி மலர் - மணமுள்ள மலர்கள். கழை கறி களிறுகள் - கரும்பைக் கடிக்கும் யானைகள். பிளிறுதல் - யானை போடும் சத்தம்.

கொய் உளைப் புரவி - கொய்த பிடரி ரோமம் உடைய குதிரைகள். குரத்து எழும் ஓதை - குளம்புகளால் ஏற்படும் ஓசை. கேண்மின் - கேளுங்கள். அணைந்தனன் - அணுகி வந்து விட்டான். ஒரு சார் - ஒரு பக்கம்.

ஒதுங்குமின் - ஒதுங்குங்கள்.

ஜீவகன் சுந்தர முனிவரை உபசரிப்பது வில்லி பாரதத்திலே விதுரன் கண்ணனுக்குக் கூறும் உபசார மொழிகளை நினைப் பூட்டுகிறது.

பவ பாசம் - பிறவிக்குக் காரணமான பாசபந்தம். இரிந்திட-நிலை குலைந்து ஓட.

கூடல் - மதுரை. பீடு - பெருமை. கடக்கரும் - கடக்கமுடியாத, கடத்தற்கு அரிய. நனி - மிகவும். புரி - அரண். அத்த - என் அப்பனே, என் சுவாமி. கடிபுரி - கட்டுக்காவல் அமைந்த கோட்டை. வாதவூரர் - மாணிக்கவாசக சுவாமிகள்.

48 - 51 : இவ்வரிகளின் பொருள் பூகோள படம் நோக்கில் எளிதில் விளங்கும். நிலப்பகுதியை ஒரு பசுவாகவும் அதிற் பரதகண்டமாகிய இந்தியாவை அப்பசுவின் மடியாகவும் பாவிக்கில் தென்பாண்டி நாடு அம்மடியினின்றும் பால் சுரக்கின்ற சுரை

யாகத்தானே தோற்றும், என்பது ஆசிரியரின் குறிப்பு. பனி வரை - பனிமலை, இமயம். துலை - தராசு. வாயசம் - காகம்.

கங்கை தன்னுடைய யாக குண்டத்தை அழித்து விடுமே என்று அந்த ஆற்றைப் பருகிய சந்நு முனிவன் பகீரதன் முதலானோர் வேண்டிக்கொண்டதும் தன் செவி வழியே அந்தக் கங்கையை விட்டுவிட்டான் என்பதும், பொதிய மலையை நோக்கிப் போய்க் கொண்டிருந்த அகஸ்திய முனிவருடைய கமண்டல நீரைக் கணபதி காக்கை வடிவில் வந்து கவிழ்த்துவிட அந்த நீர் காவிரியாகப் பெருகியது என்பதும் புராண கதைகள்.

வேழ வெண் மருப்பு - யானைகளின் வெண்மையான தந்தம். காழ் அகில் - வைரம் பாய்ந்த அகிற்கட்டை. சந்தனடவி - (சந்தனம்—அடவி) சந்தனக் காடு. குங்குமம் - ஒருவகை மரம். தடம்பணை - பெரிய பள்ளத்தாக்கு. வாரம் - ஓரம்.

தாமிர வருணியின் வருணனை நைடதத்தில் வரும் நாட்டு வருணனைப் பாடல்கள் இரண்டை நினைவூட்டுகிறது.

துணுக்குறும் - நடுக்கமடையும். அடையலர் - பகைவர். கட்செவி - பாம்பு. (இங்கே) ஆதிசேஷன். சுடிகை - உச்சிக் கொண்டை. மஞ்சு - மேகம். இஞ்சி - மதில். உரிஞ்சி - உராய்ந்து. உதயன் - சூரியன். பதாகை - கொடிச்சீலை. மீனம் - மீன். உவாமதி - முழுமதி, பூர்ண சந்திரன். வெயில் - (இங்கே) ஒளி.

எயில் - மதில். வெறி - மயக்கம். கிறிகள் - வஞ்சக வழிகள். துன்னலர் - பகைவர். வெருவுவர் - பயப்படுவர். உள்ளற்பாற்றோ - எண்ணும் தன்மையதோ. புரை - குற்றம். கறங்கு - காற்றாடி. ஆயற்பாற்றது - ஆராயத்தக்கது.

படிறுகள் - வஞ்சகங்கள். உவர்த்தே - வெறுத்தே. துனி - வெறுப்பு. மலைமகள் - பார்வதி. கமலை - இலட்சுமி. கீண்டு - கிழித்து. இமையவர் - தேவர்கள். முயன்றுழி - முயன்ற போது, வன்னி - அக்கினி. துன்னிய - நெருங்கி யிருந்த.

வெய்துயிர்த்து – பெருமூச்சுவிட்டு. அங்கி - அக்கினி. புங்கவர்- பெரியோர். இக்கு – கரும்பு. வம்மின் – வாருங்கள்.

## ரண்டாம் களம்

எற்பாடு - முன்மாலைப் பொழுது. சுடுகணை – சுடுகின்ற அம்பு, சுடுகணை தூர்ப்பவன், (இங்கே) மன்மதன். அழலாடும் தேவர் - சிவபெருமான். ஏழையர் - பெண்கள். கடுவுண்ட கண்டர் - விஷத்தை உண்ட கழுத்தையுடைய சிவபெருமான், நீலகண்டமூர்த்தி. பலி - (இங்கே) பிச்சை. அம்பலத்து ஒருவர் - சிவபெருமான். கரந்தான் - மறைந்தான்.

இந்தக் கழல் விளையாட்டுப் பாடல்கள் 'பாடுதுறை'யிலுள்ள கழல் விளையாட்டுப் பாடல்களை நினைவூட்டுகின்றன. இப்பாடல்களில் காமதகனக் கதை குறிக்கப்படுகிறது. 'அரை யுருவானார்' 'என்பதில் சிவபெருமானுடைய அர்த்தநாரீசுர வடிவம் குறிக்கப்படுகிறது. வாணி காதலனாகிய நடராஜனது உடல் மெலிவும் தொனிப் பொருளாகக் குறிக்கப்படுகிறது.

மன்றல் - திருமணம். 'மணந்த பின்னர் நாயகன் பெயர் நவிலாமை வழக்கானதால்' என்பது ஆசிரியர் குறிப்பு.

வார் குழல் - நீண்ட கூந்தல், (இங்கே) பெண். பிறைபழி நுதலாய் - பிறைச் சந்திரனைபழிக்கும் அழகிய நெற்றியையுடைய பெண்ணே. கபோலம் - கன்னம். நுவன்று – சொல்லி. இயம்புகோ - இயம்புவேன். வார்குழல் திருவே - நீண்ட கூந்தலையுடைய மகாலட்சுமி போன்றவளே.

எட்பூ - எள்ளுப் பூ. மூக்கை எள்ளுப் பூவுடன் ஒப்பிடுவதுண்டு.

வறிதே - வீணாக. கைரவம் - (இங்கே) செவ்வாம்பல் மலர். வள்ளையின் - வள்ளை இலையின். இந்த இலையைக் காதுக்கு உவமையாகக் கூறுவதுண்டு.

வலம்புரி - வலம்புரிச் சங்கு. இது கழுத்திற்கு உபமானம்.

நலம் திகழ்மதி – அழகு திகழும் சந்திரன். பெட்பு – விருப்பம், (இங்கே) காதல். கண்டு – கற்கண்டு.

காரிகை அணங்கே – மிகவும் அழகுடைய பெண்ணே. (ஒருபொருட் பன்மொழி).

காந்தள் காட்டும் கை – காந்தள் மலர்போன்ற கை.

மன்பதையுலகு – மக்களையுடைய உலகம். மின்புரை – மின்னலை ஒத்த. வற்கலை – மரவுரி. சிந்துர அடி – சிவந்த அடிகள். வாரிசம் – தாமரை. புரையறும் – குற்றம் அற்றிருக்கும்.

மாந்தளிர் வாட்டும் மேனி – மாந்தளிரையும் வென்ற மென்மையும் அழகும் வாய்ந்தமேனி. கதுவுங்காலை – பற்றிக்கொள்ளும்போது. படர்சுழி...உதரவாணி: சுழி கொப்பூழுக்கும் திரை அல்லது அலை வயிற்று மடிப்புக்கும் வடதளம் அல்லது ஆலிலை வயிற்றுக்கும் உவமை.

வாசிட்டாதி – வைராக்கிய நூல். வாசிஷ்டம் முதலான ஞான நூல்கள். வழுதிக்கு – பாண்டியனுக்கு.

'ஆமையின்...எழிற்கால்; ஆமைபுற அடிக்கும், அலவன் அல்லது நண்டு முழங்தாளுக்கும் உவமை.

வதுவை – திருமணம். நச்சினேன் – விரும்பினேன். பிச்சி– பத்தியக்காரன்.

அயிராவதத்தன் – ஐராவதம் என்ற யானையை வாகனமாகவுடைய இந்திரன். அழுங்கலை – வருந்தாதே.

அனிச்சமும்...அடியாய்: அனிச்சப் பூ பெண்ணின் அடிகளின் மென்மைக்கு உவமை.

நெருஞ்சில் – ஒருவகை முள். இதை நெரிஞ்சி என்றும் சொல்வதுண்டு.

கஞ்சனக் கதுப்பு – கண்ணாடிபோன்ற கன்னம். அணங்குறல் – நீ வருந்த வேண்டாம். சுணங்கு – தேமல்.

நீயே வளர்த்த—முகிழ்த்தது: 'தாமே நட்டு வளர்த்த முல்லை பூக்குங்கால் இராஜ கன்னியர்க்கு விவாகம் நேரிடுமென்பது காவிய வழக்கு' என்பது ஆசிரியர் குறிப்பு.

வல்லே - விரைவு. போது - (இங்கே) தாமரைப் பூ. மையுண்கண் - மைதீட்டிய கண். சந்தம்ஆர் - அழகு நிறைந்த. துன்று இரா - நெருங்கிய இருட்டு. தோகாய் - மயில்போன்ற பெண்ணே.

## மூன்றும் களம்

புரிசை - கோட்டை. நறையார் வேப்பந் தாராய் - வாசனை நிறைந்த வேப்பமாலை பூண்டிருக்கும் பாண்டிய அரசனே.

ஓவல் இலாதே - இடையறுமல். உஞற்றுமின் - செய்யுங்கள். பூபதியே - அரசனே.

சினகரம் - கோயில். முசிப்பில்லா - முடிவில்லாத. சிட்டமுனிவர்கள் - சிஷ்டர்களான முனிவர்கள். புரந்தரன் - இந்திரன். கோற்றொடியார் - அழகிய வளையல் அணிந்த பெண்கள்.

நாராயணன் சொல்லும் வெண்பாவைக் குறித்து ஆசிரியர் 'உண்மைத் துறவியாகிய முனிவர்மேல் குடிலன் அவமே பொருளாசை ஆரோபித்ததைப் பழித்து நாராயணன் செவியறிவுறுத்தும் துறையாகக் கூறும் கூற்று' என்பர். குடிலன் பிரமாதப்படுத்தும் பதவியும் செல்வாக்கும் முனிவரால் வெற்றெலும்பாகவே மதிக்கப் படுகின்றன என்பது இநத வெண்பாவின் உட்பொருள்.

மானும் - ஒக்கும். அறத்தாறு - தரும வழி. அரந்தை - துன்பம். இடியேறு - பேரிடி.

படைஅடு - படையை அழிக்கவல்ல. தொழும்பு - அடிமை. மொய்குழல் - பெண்.

ஓரான் - நினைத்துப் பார்க்க மாட்டாள். தேரான் - உடன்பட மாட்டாள். திரைத்தது - சுருங்கிப் போயிற்று. வாழ்தும் இவ்வயின் - இங்கேவாழ்ந்து கொண்டிருப்போம். மாற்றலர் - பகைவர். ஏந்தலே - அரசனே.

சோற்றதற்காய்: வெண்பாவின் இத்தனிச்சொல் சகடனைக் குறிக்கும்போது 'சோற்றுக்காக' என்று பொருள்படும். 'அரிச்

சந்திரனைக் குறிக்குங்கால் "சொற்றதற்கா" என்பதின் நீட்டல் விகாரமாய் அவனது தவறுமொழியையும் சுட்டி நிற்கின்றது" என்பது ஆசிரியர் உரைக்குறிப்பு.

அறிவிர்கொல் - அறிவீரோ. பொருவரும் - ஒப்பற்ற. பூவை - நாகணவாய்ப்புள். அரந்தை - துன்பம்.

நறவுமிழ் நளினம் - தேன்ததும்பும் தாமரை.

லீலைச் சோலை - சிங்காரப் பூங்காவனம். குமுதம் - செவ்வாம்பல். விண்டு - திறந்து. குயிலின் மிழற்றி - குயில்போலக் கொஞ்சிப்பேசி. மலைய மாருதம் - தென்றற் காற்று. மேன் மந்திரம் - மேல் வீடு. கண்படும் எல்லை - உறங்கும்போது. அகற்றப் புக்குழி - போக்கத்தொடங்கியதும். கழலும் வளையும் - வளைகளும் கழன்றுபோகும். நாலி - முத்து.

பொரியும் - உடம்பின் வெப்பத்தால் பொரிந்துபோகும். கட்டழல் - கண் + தழல். நெட்டுயிர்ப்பு - பெருமூச்சு. ஒல்கும் - தளரும். நெரியா - நெரித்து. அயினிநீர் - ஆலத்தி நீர். பூதி - விபூதி. சாந்தம் - சந்தனம். இழுது - நெய். மம்மர் - மயக்கம். வாயசம் - காகம். கங்குல் - இரவு. சிரசிரா - (சிரசு × இரா) தலைபோகும் தண்டனை கிடைக்கும் என்பது பொருள். வெருவி - பயந்து. நிமித்திகர் - சோதிடர். கூஉய் - கூவி.

பெண்ணையந்தார் - பனம்பூ மாலை. இதுசேரமன்னருக்கு உரியது. 'பனம் பூ மாலை சூடும்படி நும் மகளை மணஞ்செய்மின் - அதாவது வஞ்சியரசனுக்கு விவாகஞ்செய்து கொடுமின் என்பது பொருள்' என்பர் ஆசிரியர். பெண்ணை அந்தார் சூட்டு - பெண்ணுக்கு அழகிய மணமாலையைச் சூட்டு. கண்டுழி - கண்டபோது அங்கனம் - முற்றம்.

## நான்காம் களம்

விசும்பில் - வானத்தில். மாய்ப்பன் - கொன்றொழிப்பேன். உறுத்தும் - அனைவரையும் பயமுறுத்தி வருத்த முறச்செய்யும். ஒறுத்தே - தண்டித்தே. வனக்கிளி - (இங்கே) வர்ணக்கிளி.

பிசிதம் - வேம்பு. வானவன் - தேவன். சேயதோர் போந்தை யில் - தூரத்திலுள்ள பனை மரத்தில். 'இவ்வரிகளில், (12-22) பஞ்சவன் பிசிதம் வானவன் போந்தை என்ற மொழிகள் முறையே பாண்டியனையும், அவனது மாலையாகிய வேம்பையும், சேர னையும் அவனதுமாலையாகிய பனம்பூவையும் குறிப்பித்து நிற்பதால், பாண்டியன் மகளாகிய மனோன்மணி சேரனது பேரழகு கண்டு மயங்கி இச்சையுறுவதை யுணர்த்த அறிகுறியாக வந்த ஒருகனைக் காட்சி தொனியருத்த'மாகக் 'கூறியதாயிற்று' என்பது ஆசிரியர் உரைக்குறிப்பு.

துப்பிதம் - பவளம் போன்ற இதழ். காம்படு தோளீ - மூங் கிலைப்பழிக்கின்ற தோளை யுடையவளே. போன்மே – போலுமே. உனி - உன்னி, நினைத்து, பரிதி வந்துழி - சூரியன் உதயமான போது. மிகை - துன்பம். செயிர்தீர் அறம் – குற்றம் தீர்ந்த தரு மம். விழுமம் - துன்பம். மின் ஏய் மருங்குல் - மின்னலை ஒத்த இடை. நச்சியது – விரும்பியது. தனிபுரத்து - தனியுரிமையாகக் காத்து. தாரு – தரு, மரம். ஆறலை-வழிப்பறி. அயர்ச்சி - சோர்வு. வீக்கிய கழற்கால் - வீரக் கழல்கட்டிய கால்.

சுதந்திர பங்கர் – சுதந்திரம் அற்றவர்கள். விரை - வாசனை. அரிவையர் - பெண்கள், 'அரிவையர் பிழைப்பர் ?' என்ற வாணி யின் வாக்கை 'எங்ஙனம் ?' என்ற ஜீவகன் சொல்லோடுசேர்த்து மறுமொழி கூறுகிறாள் வாணி. இப்படிப்பேசி, அரசன் தன்மேல் சாட்டியபிடிவாதத்தை அவன்மேலேயே சுமத்தி மறுமொழி கூறும் வாணியின் நெஞ்சுத்துணிவும் அறிவுத்திறனும் வியக்கத்தக்கன.

மாற்றலர் ஏறே - பகைவர்களுக்கு ஆண்சிங்கம் போன்ற வனே. யார் வயின் - யாரிடம். மண்ணுள் மேனி - உடம்பை யும் கழுவாள். படியாள் இசையும் - இசையிலும் ஈடுபடமாட் டாள்.

அனம் - அன்னம். விதிர்த்து - நடுங்கி. கதித்து - மிகுத்து. பெற்றி – தன்மை. முருகு அவிழ் - மணம் வீசுகிற. நிசிதவேல்

- கூர்மையான வேல். அரசாடவி - அரசராகிய காட்டிலே. துன்னலர் - பகைவர். துனி - வருத்தம். கோடு - எல்லை. பொருவிலா - ஒப்பற்ற. கெடல் அறுசூழ்ச்சி - கேடில்லாத ஆலோசனைத்திறன். உசாவி - விசாரித்து.

## ஐந்தாம் களம்

கற்றை - ஒன்று சேர்ந்திருக்கும் தொகுதி. அயர்த்தோம் - மறந்தோம். ஆயிழை - ஆராய்ந்து எடுத்த நகைகளை அணிந்து கொண்டிருப்பவள், பெண். செருக்கினை கிள்ளில் - கர்வத்தைக் கிள்ளிவிட்டால். ஆங்கில மரபுச் சொற்றொடர் ஒன்றைத் தழுவியது இது. உற்பவம் - தோற்றம். இந்து - சந்திரன். இரவி - சூரியன். தோடம் - தோஷம்.

சுவான சக்கரம் - நாய் கடியாதிருக்க உபாயம் வினவிய ஒருவனுக்கு உள்ளங்கையில் நவகோண சக்கரம் வரைத்துக் காட்டுக என்றும், ஆனல் அது பலித மாவதற்கு மரத்தின் உச்சத கிளையிலேறி யிருந்துகொண்டு, அச்சக்கரம் வரைப்பதே விதியென்றும் ஒருகுரு உபதேசித்தான் என்பது கதை' என்பர் ஆசிரியர்.

இந்தா . இதோ (வழக்கச் சொல்). சோறடு பாத்திரம் - சோறு சமைக்கும் பாத்திரம்.

### கலித்துறை

நிதனம் - அழிவு. தனு - உடம்பு. கரணம் - கருவி.

இக்கலித்துறை இவ்வங்கத்துள் நடந்த கதையைத் தொகுத்துக் கூறி ஞானப்பரமாகப் பொருட் படுத்துகிறது என்பர் ஆசிரியர். 'மதுரையாகிய கூடஸ்தனிலை தவிர்ந்த ஜீவகனாகிய ஜீவன் நெல்வேலி யாகிய அன்னமயாதி பஞ்சகோச சரீராபிமானத்தால் குரு வாசகமாகிய அருள் வழி விடுத்துக் குடிலனாகிய மாயா வசத்தனாய்த் துக்கத்திற்காளாகின்றான்' என்பது ஆசிரியர் கூறும் தத்துவ உட்பொருள்.

## ண்டாம் அங்கம்: முதற்களம்

பொறையன் – சேரன். மருமான் - மருமகன், மாப்பிள்ளை. மன்றல் – திருமணம். இப்பரிசே – இந்த வகையே. அற்றம் - சமயம். பொருநை - தாமிர வருணி. காண்டகும் ஆண்டகை - காணத்தக்க அழகு வாய்ந்தவனும், ஆண்மைக் குணமுள்ளவனுமாக இருப்பவன்.

ஞானம் மாண்ட – ஞானத்தில் மேம்பட்ட. பனந்தார் வேய்ந்தோன் – பனைமாலை சூடிய சேரன். அனந்தைப்பதி - திருவனந்தபுரம். கண்ணகன் ஞாலம் – இடம் அகன்ற பூமி. ஆடவர் இல் - புருஷர் வீடு. கொங்கன் - சேரன். ஏதிலன் அன்றே – அன்னியன் அல்லவா. மருதம் – வயல்கள் உள்ள வளநாடு. நெய்தல் – கடல் சார்ந்த இடம். மழலை - இளஞ்சொல். வண்டானம் - நாரை. புலர்மீன்–உலர்த்தப்படுகிறமீன், கருவாடு. ஓம்புபு - ஓம்பி, பேணிக்காத்து. நுளைச்சியர் - நெய்தல் நிலப்பெண்கள். குழை - காதணி. புன்னை நூண்தாது - புன்னைமலர்களின் நுட்பமான மகரந்தப் பொடி. இருஞ்சிறை – கரிய சிறகு. அலக்கண் – துன்பம்.

'நெய்தல் நிலத்தில் உலர்த்தப் படும் மீனை மருத நிலத்து வண்டானக் குருகு கவர, அதை ஓட்ட நுளைச்சியர் எறிந்த பொற்குழை, கடற்கரையிலுள்ள புன்னை நிழலில் உறங்கி அம்மலர்த்தாதுக்களால் பொன்னிறம் பெற்றுத்திரும்பி மருத நிலத்திற்குச்சென்ற எருமையின் மேலிருந்து சிறகுலர்த்தும் கடற்காக்கையை வருத்திற்று' என்பது ஆசிரியர் உரைக்குறிப்பு. மருதம்- நெய்தல் திணை மயக்கம் இது. கேதகை - தாழை. சார்தர – சார வந்து சேர. கோங்கு அலர் - கொங்குமலர்.

நெய்தலுக்குரிய கைதை மலரின் நிழலைத் தனது பெடையென மயங்கிச் சென்ற மருத நிலத்துத் தாராக் குருகை ஏளனஞ் செய்து சிரித்த ஆம்பல் மலரின் வாய் நிறையத் தன் மலர்த் தாதினைக் கொட்டிக் கோங்கு மரம் விலக்கும்' என்பது ஆசிரியரின் உரைக் குறிப்பு.

வால்வளை - ஒளி பொருந்திய வெண்ணிறச் சங்கு. சூல் உளைந்து - கர்ப்பநோயுற்று.

ஓதிமம் - அன்னம். குடம்பை - முட்டை. உன்னுபு - உன்னி. எண்ணி.

அடம்பிடை - அடம்புக் கொடியினிடையே, அடம்பு நெய்தல் நிலத்துக்கொடி.

கரும்பு அடுசாலை - கருப்பஞ்சாறு பிழியும் சாலை.

காரா - காராம்பசு, எருமை. அலமுகம் - கலப்பை நுனி. தாக்குழி - தாக்குமிடத்து. அலமரும் - வருந்தும்.

அன்றில் - இணைந்தே வாழும் ஒரு வகைப் பறவை. நளி - பெருமை.

கோட்பறை விளி - கொன்று கொள்ளுவதற்கு இசையக் கொட்டுகிற ஓசை.

வேய் - மூங்கில். சாலி - நெல். உப்பார்பஃறி - உப்பு நிறைந்த ஓடம். நிரை - வரிசை. பிணிப்பர் - கட்டுவர்.

கொண்மூ - மேகம். கொள்கலம் - பாத்திரம். அவ்வயின் - அந்த நன்செய் நாட்டில்.

செல்புழி - செல்லும்போது. மிடிதீர் சாரல் - நமது வறுமையைத் தீர்க்கும் சாரல் மழையாகும்.

முன்னீர் நீத்தம் - கடல் வெள்ளம். ஓம் என - ஓம் என்ற சப்தத்துடன். ஓ - மதகுநீர் தாங்கும் பலகை. வாய்த்தலை - கால்வாய்.

பிரணவ நாதம் - ஓம் என்ற ஓசை. இரணம் - உப்பளம். பழனம் - வயல். தூமம் இல் - புகையில்லாத. கவடி-சோவி. அலவன் - நண்டு.

துகிர்க்கால் - செம்பவளம் போன்ற கால். புகர்க்கால் மங்கிய செந்நிறமுள்ள கால்.

செங்கண் போத்து - சிவந்த கண்களையுடைய செம்போத்து. கம்புட்கோழி - கம்புள் என்ற சம்பங்கோழி.

) - கூடி. அந்தியங்காடி - மாலைக் காலத்து கடை வீதி.

சந்தம் - அழகு. குழூஉ - கூட்டம். ஆர்தரும் - நிறைந்திருக்கும்.

வீறு - வேறு எதற்கும் அல்லது யாருக்கும் இல்லாத சிறப்பு, (இங்கே) இறுமாப்பு.

எருத்தினம் - (எருது + இனம்) எருதுக்கூட்டம். அடுபவர்- கொல்பவர்.

கடைசியர் - பள்ளியர்; பள் - ஒருவகை இசை; கார் என - மேகம் என்று சொல்லும்படி. கறங்கும் - சப்திக்கும். கிணைப் பறை - மருத நிலப்பறை. நீவிடில் - தடவினால். உலப்பறு - கேடில்லாத. ஒப்புரவு - இணக்கம்.

அரசு அவாம் பண்பு - அரசர் அவாவும் (விரும்பும்) குணம். வென்றி - வெற்றி. வைவேல் - கூர்மையான வேல்.

மேவலர் - பகைவர். உதியன் அவை - சேரனுடைய சபை.

இராச்சிய பாண சூத்திரம் - இராச்சிய பரிபாலனத்திற்காக ஏற்பட்டிருக்கும் விதிகளின் தொகுப்புக் கலை.

விளம்பனம் - தாமதம் செய்தல். காண்டி காண்பாய். வம்மின் - வாருங்கள்.

சுரகுரு - தேவகுருவான பிரகஸ்பதி என்ற வியாழ முனிவன். பிரசுரன் - வெள்ளி என்ற அசுரகுரு வானசுக்கிரன்.

தரளமாலை - முத்துமாலை. ஆடி - கண்ணாடி.

சுமித்திரை பயந்த புத்திரன் - சுமித்திரை பெற்ற புதல்வனாகிய லட்சுமணன். வீரவாகு - முருகப்பெருமானின் விசேஷ நம்பிக்கைக்கு உரிய துணைவன்.

நாராயணன் மூக்கில் கரி தேய்த்து வருவது,

“புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி
மூக்கிற் கரியர் உடைத்து”

என்னும் குறளைக் குறிப்பித்துக் குடிலனுடைய வஞ்ச நெஞ்சைக் காட்டுவதற்காகத்தான். ‘எனைவகை......மேலாம்

'எனைவகையால் தேறியக் கண்ணும், வினைவகையான், வேறுகும் மாந்தர் பலர்' என்ற குறளை ஒப்பிடுக.

உன்னுவ - நினைப்பவை. ஆளும் பார் - ஆளும் ராச்சியம். ஓரில் – நினைத்துப் பார்த்தல். உறுகண் - துன்பம்.

## ரண்டாம் களம்

நீவியக்கிழி - சித்திரம் எழுதும் சீலை (ஒரு பொருட் பன்மொழி). தூரியம் - சித்திரம் எழுதும் கோல்.

வணம் - வண்ணம். சூட்டு - உச்சிக்கொண்டை. சிறை - சிறகு. அங்காந்து - திறந்து.

உழையுளார் - பக்கத்தில் உள்ளவர்கள்., இரவி - சூரியன். அயிர்த்து - சந்தேகித்து. இரு சிறைக் கையால் - சிறகுகளாகிய இரண்டு கைகளாலும்.

மெய்யாம் தம் பெயர் - காகா என்று காகம் தன் பெயரைச் சொல்லுகிறது என்பது கருத்து.

தொழுதி - கூட்டம். அஞ்சிறை - அழகிய சிறகுகளை. ஒத்தறுத்து அடியா - தாள அறுதிக்கு இசைய ஒலி எழுப்பி அடித்து.

இசையெறி மாக்கள் - சங்கீத வித்வான்கள். ததையும் - நெருங்கும். கதுவும் - பற்றும். இரு குருகும் - இரண்டு பறவைகளும்.

துகிர் - பவளம். துண்டம் - மூக்கு. பரற்கல் – கூழாங்கல்.

உழை உழை - அப்பக்கமும் இப்பக்கமுமாக. கூடமாய் - மறைவாய்.

முருகு அவிழ் குவளை - மணம் கமழும் நீலமலர். அழுங்கலை- வருந்தாதே.

காரிகை - பெண், (இங்கே) நற்றாய். (ஈன்ற தாய்) உகுத்து - சிந்தி. வீவுறும் - கெடும்.

கள்ளலம் - களவு செய்யமாட்டோம். வௌவலம் - பற்றிக் கொள்ளமாட்டோம். விரும்பலே - விரும்பாதே. காணிய - காண.

இந்த ஆசிரியத் துறைகள் மூன்றையும் குறிப்பிட்டு, 'களவு வழியாகப் பலதேவனது கைவசப்பட்ட ஒரு கன்னிகையின் தாய், அவனுக்கும் வாணிக்கும் விவாகம் நிச்சயிக்கப் பட்டமை கேட்டு, அவனோடு, அந்நற்றாய் கூறும் கூற்றாய் நிற்கின்றன' என்று ஆசிரியர் எழுதியுள்ளார்.

பொற்றொடி - பொன்வளை. மைச்சினி - 'தன் சோரக் காதலிக்குப் பலதேவன் வைத்துக் கொண்ட முறை' என்பர் ஆசிரியர்.

அலகை - பிசாசு. கணிசம் - கண்ணியம் (வழக்கச் சொல்).

கடு - விஷம். உசிதன் - பாண்டியன். நிண்ணயம் - நிர்ணயம்.

திரை பொரல் - அலை அடித்தல். கயம் - ஆழம். தியக்கம் - வாட்டம். விள்ளாமுரண் - விடாது பற்றிக்கொள்ளும் மன உறுதி. கறங்கு - காற்றாடி. எற்றுண்டு - மோதப்பட்டு. வேட்டவை - விரும்பியவை. கம்மியன்—கொல்லன். மனக்கோள் - மனக்கோணல், மனக்குற்றம். மா - மிருகம்.

## மூன்றாம் களம்

நுதிவேல் - கூர்மையான வேல். தரளநீர் - முத்துப் போன்ற கண்ணீர்.

பரிபுரம் அணிந்த பங்கயம் - சிலம்பு அணிந்த தாமரை போன்ற அடிகள். வருந்துபு - வருந்தி. விண் அணங்கு - தெய்வப் பெண்கள்.

தயிரில் - தயிர் போல. நவ்வி - அழகு. பொரு சிலைப் புருவம்-போர் செய்ய வளைந்த வில்லைப் போன்ற புருவம்.

உழுவல் - பேரன்பு. வெய்யோன் - சூரியன். வாரி-கடல். செக்கர் - செவ்வானம்.

ஊர்கோள் நாப்பண் - பரி வேடத்தின் நடுவிலே. உவாமதி - முழுமதி.

மைந்தர் - (இங்கே) ஆடவர். அயர்க்கு மாறிலையே - மறக்கும்படியாகவும் இல்லையே. கைதவன் - பாண்டியன். போன்மே - போதுமே. பொங்கு அலைப் புணரி - பொங்குகின்ற அலைகளையுடைய சமுத்திரம்.

ஒன்னார் - பகைவர். திகிரி - ஆக்ஞாசக்கரம்.

குறும்பர் - குறுநில மன்னர், சிற்றரசர்.

வேம்புஆர் - வேப்ப மாலையை அணிந்த.

பொருந்தலர் - பகைவர். குடங்கை - உள்ளங்கை.

துணுக்குறும் - நடுங்கும். புல்லார் ஈட்டம் - பகைவர் கூட்டம்.

அரவினது அரசு - ஆதிசேஷன். பெளவம் - கடல். வலம் தொட்டு - பலமாய்த் தோண்டி.

மதிற்கணம் - மதிற்கூட்டம். விடயத்து - விஷயப் பொருள்களிலே. புலன்களின் - புலன்களைப்போலே. சாக்கியம் - சாட்சியம். கிழமை - உரிமை. இறுத்து - தங்கி.

உதியனும் - செழியனும் - சேரனும்·பாண்டியனும். கதிர்க் கடுங் கடவுள் - சூரியபகவான். அரிஏறு - ஆண் சிங்கம். தேடு அளி - தேடுகின்றவண்டு. சுரிகுழல் - (இங்கே) மனோன் மணி.

அடியிறை - பாதகாணிக்கை. அரிக்கு - சிங்கத்திற்கு. தென்னன் - பாண்டியன். பகடி - பரிகாசம். பெரும்போர் இலா நாள் பிறவா நாளே: இப்படைவீரன் கூற்று, கடவுளைப் 'பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' என்ற பக்தர் கூற்றை நினைவூட்டுகிறது.

உலண்டு - பட்டுநூலை உண்டாக்கும் ஒருவகைப் புழு.

இக் கலித்துறையில் காதலர் இருவருக்கும் ஏற்பட்ட கனக் காட்சியின் தத்துவ உட்பொருளைக் காணலாம். இதுபற்றிய ஆசிரியர் குறிப்பு வருமாறு: 'பாசத்துக்குட்பட்ட ஜீவர்கள் செய்யும் ஈசுர பக்தியும், ஈசுரன் ஜீவர்களிடத்தில் வைத்திருக்கும் காருண்ணியமும் கேவல சாக்ஷாத்காரத்திற் கேதுவாயினும், அவ்வனுபூதி நிலையில் இல்லாது நீங்குவதுபற்றி அவற்றையும் அஞ்ஞானத் தசையில் தோற்றும் தீர்க்க சொற்பனமான ஜகதாதி திரிபுடியோடு சேர்த்து விவகரித்தல் தத்துவ சாஸ்திர வழக்கம்.

## மூன்றும் அங்கம்—முதற் களம்

ஐயுறல் - ஐயம் அடையாதே. மருளும் - மயங்கும். கன்றும் - கோபிக்கும். திருவும் வெருவும் உருவும் - லட்சுமியும் மனோன்மணியின் அழகுக்குத் தோற்று அஞ்சுகிறுள் என்பது பொருள்.

செறித்திடும் சிறை - அடைத்திருக்கும் அடைப்பு. மம்மர் - மயக்கம். பரிவுறல் - அன்புற்றிருப்பது. ஒருபடித்து - ஒரு தன்மையது.

ஏமாப்பு - இறுமாப்பு, இன்ப உணர்ச்சியோடு கூடிய செருக்கு. பிரபுத்துவம் - பிரபுவின் நிலைமை. நயந்திலன் - விரும்பிலன். வெருவலை - பயப்படாதே.

பொருநைத் துறைவன் - சேரன். வெறுக்கை - செல்வம்.

ஒன்னலர் ஏறே - பகைவர்களுக்கு ஆண்சிங்கம் போன்றவனே. அற்றம் - சமயம். அடையவும் - முழுவதும்.

நண்ணலர் கூற்றே - பகைவர்களுக்கு யமன் போன்றவனே. செருமுகம் - போர்முனை. ஆலவாய் - மதுரை. நிகாதர் - வஞ்சகர்கள்.

தவில் - கொட்டு. விழுமிய - சிறந்த. நிருபன் - அரசன். ஓர்ந்து - ஆராய்ந்து. விதிர்விதிர்ப்பு - நடு நடுக்கம். வெளவும் - அபகரித்துக்கொள்ளும். ஓவாது - நீங்காமல்.

## ரண்டாம் களம்

எற்பாடு - முன்மாலைப் பொழுது.

நமது வேலை: (இங்கே) சுருங்கை அமைக்கும் வேலை. முடுக்குதல் - விரைவுபடுத்துதல். துன்று அரா - நெருங்கிய பாம்பு. காட்சியிற் செவ்விதாம் - காட்சியைக் காட்டிலும் அழகாய் அமைந்திருக்கும்.

எவ்வினையோர்க்கும் - எத்தொழில் செய்வோருக்கும்.

இலக்கு - லட்சியம், குறி.

குறிப்பொடு - குறியே நோக்கமாக. (இங்கே) பாரம்பரிய அபிவிருத்தி குறிக்கப்படுகிறது.

அடி - அடி இதழ்.

பூம்பராகம் - பூந்தாது. பரப்பித்து - பரவச்செய்து.

ஆசிலா - உள்ளீடு இல்லாத.

தூசிடை - ஆடையில்.

தோட்டி - துறட்டி.

சிறூர் நீர் - சிறுவர்களே! நீங்கள் அண்மைவிளி.

அயத்து - ஆடுகளிடம். புலன் - அறிவு.

கண் பனிப்ப - ஆனந்தக் கண்ணீர் துளிக்க.

'தாவர சிருட்டிகளின் செய்கை விசித்திரங்களிலும் தெய்வ அருள் நிறைந்து கிடக்கும் தன்மையை இவ்வரிகள் விளக்கு கின்றன' என்பது இப்பகுதிக்கு ஆசிரியர் குறிப்புரை. தாவர நூல் உண்மைகளை இப்படிப் பயன்படுத்திக்கொள்ளும் கவிஞர் மனோபாவம் பாராட்டத்தக்கது.

சிறு வாய்க்கால் குறித்த நடராஜன் தனிமொழி குறித்து, 'பூத பௌதிகங்களாகிய ஜடபதார்த்தங்களின் சலனங்களிலும் விளங்கும் அருள் விசேஷத்தை இவ்வரிகள் காட்டுகின்றன' என்பர் ஆசிரியர்.

முந்நீர்மடு – சமுத்திரமாகிய மடு.

அண்டயோனி – சூரியன்.

தூங்கியும் – தொங்கியும்.

எழிலியாய் - மேகமாய். பின்னை - பின்னே.

பாடு – உழைப்பு; துன்பம்.

வேதித்து – பேதித்து. பொறை – பொறுமை.

நாங்கூழ்ப்புழுவை நோக்கி நிகழும் தனி மொழியில், 'அற்ப ஜீவ ஜந்துக்களிடத்திலும் பேரருள் அமைவுற்றிருப்பதற்குச் சான்று காணலாம் என்பது ஆசிரியர் குறிப்புரை. இப்படி உயிர் நூல் உண்மைகளைப் பயன்படுத்திக்கொள்வதும் இந்த ஆசிரியரின் விஞ்ஞான மனப்பான்மைக்கு உரியதொரு சிறப்பியல்பாகும்.

அலகிலாத் தோற்றம் – எல்லையில்லாத தோற்றம். சிற்றுடி – சிறு கண்ணுடி. தியன் – (இங்கே) பலதேவனை. மங்குலுக்கு – மேகத்திற்கு. செந்நிறப்படாம் – சிவப்புத் துகில். பொதியில் – பொதியமலை. பொற்பு உறு – அழகமைந்த.

கரு – பொன்னை உருக்கி வார்க்கும் இடம். ஆடகப்பெருக்கு– உருக்கி ஓடவிட்ட தங்கம். அருக்கன் – சூரியன். துவண்டு – அசைந்து. பதாகை - கொடி. வஞ்சியன் – சேரன்.

## வஞ்சித் தாழிசை

அரிகாள் – பகைவர்களே. சஞ்சிதப் பெருவாழ்வு - மிஞ்சி யிருக்கும் பெருவாழ்வு. மஞ்சுளம் – அழகு.

கடிஞை - பிச்சையெடுக்கும் மண்டையோடு. எள் நெஞ்சிலும் நினையார் : தர்ப்பண எள்ளைப் பிதிர்க்கூட்டம் இனி இழந்து விடும் என்பது பொருள். வார்கழல் - நீண்ட வீரக்கழல். வயப் படை – வலிமை வாய்ந்த படை.

வஞ்சித் தொடை – (போருக்குப் புறப்படுவோர் அணிந்து கொள்ளும்)வஞ்சிப் பூமாலை. தண்ணுமைபொருவு - மத்தளத்தை ஒத்திருக்கும்.

பொருப்பில் – மலையில். உருமு – இடி. இருகனல் – (இங்கே) கண்கள்.

முகில் – மேகம். இங்கே முகத்தைக் குறிக்கும். கோபமிகுதியால் கண்கள் சிவக்க, முகம் மேகம் போலக் கறுத்து மின்னல் போல வெளிப்படுகிறதாம் கோபச்சிரிப்பு (சினநகை). குரத்த-காற் குளம்பையுடைய. கொய்யுளைத் திரைக்கடல் – கொய்த பிடரி ரோமங்களையுடைய அலைகடல், (இங்கே) அலை கடல்.

பெய்மத மைம்முகில் ஈட்டம் – மதங்கொண்ட கருமேகங்களின் கூட்டம், (இங்கே) யானைக் கூட்டம். விலோதனப் பெருஞ் சிறை – கொடிகளாகிய பெருஞ் சிறகு.

அசலத்திரள் – மலைக்கூட்டம். (இங்கே) தேர்கள். தேருக்குச் சிறகு கொடி.

படிறன் – வஞ்சகன். மலையன் – சேரன். கேட்டி – கேட்பாய்.

ஆமைப் பலகை – ஆமை வடிவாகச் செய்திருக்கும் பலகை.

குடகன் – சேரன். படியோர் – உலகினர். திருவார் வாணி – லட்சுமியை ஒத்த வாணி. தேற்றமில் – தெளிவில்லாத.

சுகம் தரு மொழி – கிளிப் பிள்ளையின் பேச்சு. முனும் பினும் – முன்னும் பின்னும்.

அங்காடி – கடைத்தெரு. புரைவழி – ஓட்டை வாயிலாக.

உழையுளார் – பக்கத்தில் உள்ளவர்கள்.

## மூன்றும் களம்

கையறு நித்திரை – செயலற்ற உறக்கம். கிண்டலும் – கிளறுதலும்.

சித்திரரேகை – சித்திரலேகை, உஷையின் தோழி. இவள் உருவங்களைச் சித்திரித்துக் காட்டுவதில் வல்லவள்.

பண் இயல் வாணீ – இசையில் வல்லவளான வாணியே.

பாடு – துன்பம்.

## சிவகாமி சரிதம்

ஈயின் – ஈந்தால். பாழ் அடவி இதில் - பாழான இந்தக்காட்டில். உறுவை – மிகுதியாக அடைவாய். சாரும் வரை – அடையும் கோடு. ஆரிருளில் – நிறைந்த இருளில். உடலம் ஆறும்... நெறியருளாய் : இதற்கு இருபொருள் உண்டு. முத்திநெறி அருளாய் என்பது தொனிப்பொருள்.

சிந்தையற......பந்தம் : விடுதலை நெறி விரும்பியவனுக்கு விடை இது. சிந்தை என்பதே அற்றுப் போகும்படிச்செய்து கொண்டவருக்கு வீடுவாசல் என்ற பந்தங்கள் சேர்வதற்கு இல்லை என்பது பொருள். பணிப்பாய் – அலங்காரமாகச் செய்யப்பட்ட பாய். பூஅணை – மலர்ப் படுக்கை.

என்பாலுறுவது – என்னிடம் பொருந்தியிருப்பது. பனித்து – நீர் துளித்து. வணங்கா – வணங்கி. தாரகை – நட்சத்திரம். அன்றில் - ஒருவகைப் பறவை. விளிப்பவரில் வாவல் – அழைப்பவரைப்போல வாவல் - வௌவால்.

– அரசி. இறுத்தனள் – தங்கினாள். பொறியரவு – புள்ளிகளையுடைய பாம்பு. சுடிகை – முடி.

பொலன்மணி – அழகிய நாகரத்தினம். கறையடி – யானை. (உரல் போன்ற அடிகளையுடையது) புலை-இழிவு. மறுப்பு – கொம்பு. அறிவரிய – அறிதற்கரிய. உழுவை - புலி. அடவியிடை– காட்டிலே.

ஒருங்கு ஆர – ஒன்றாக நெருங்கியிருப்பதால். நிறைமுளரியுழை – நிறைந்த முட்காடுகளை. சார்பு இலர் – பற்றுக் கோடு இல்லாதவர். தனித்துணை – ஒப்பில்லாத துணை. நேர்ந்தவரை – அடைந்தவரை. நும் நிறுவு–நுட்பமாகப் பொருந்திய. நிமல விறகு – சுத்தமான விறகுகள். ஒன்றிய மெய்ப்பத்தரில் – மெய்ம்மை வாய்ந்த பக்தர்களைப்போல.

பனிப்பு – நடுக்கம்.* பலமூலம் – இது பழமும் கிழங்குமாகிய உணவு.

தம் நாவில் ஒரு விரலை – தம்முடைய நாவினாலே ஒரு விரல் கடை தூரத்தை. நாவினாலே கிண்டொலியை எழுப்பி ஒரு விரற் கடை தூரத்தை தாண்டிவிட்டால் அமுத கலையை உண்ண வகை யுண்டு என்பது ஹடயோகியர் கொள்கை.

கந்தம் முதல் அனந்த இனம். கிழங்கு முதலிய அளவற்ற வகைகளை. வகுத்து – ஒழுங்கு படுத்தி. வருந்தினவ – வருந்தின வனே. இருவருமே ஒருவர் - இது வேததாந்தக் கொள்கை. செறிந்து - நெருங்கி, உறைதிட உறைவாய் – தங்குவாய். மனம் இறந்து - (இங்கே) மனம் ஒடுங்கி. மலைவு - மயக்கம்.

வெளிவரும் வகை – உள்ளத்தில் உள்ளது வெளிவரும் வித மான வார்த்தைகளை. பதுமம் – தாமரை. கருதிடுவான் - எண்ணு வான். இவன் - இங்கே. மெய்விடுத்துக் கழறாய் – உண்மையை மனம்விட்டுச் சொல்வாய்.

கையாரும் - கை நிறைந்த. இலவு-இலவம்பழம். இலவு காத்த கிளிபோல் என்பது பழமொழி, வறிதே – வீணாதே. இடுகலன் – இட்டு வைத்த பாண்டம். பிறங்கும். விளங்கும். ஏதிலன் - அந்த அன்னியன். யதி – துறவி. இறும்பூது. அதிசயம். ஆன – ஆயின. நின்மல விபூதி – தூய்மையான விபூதி. நீறுபடி – சாம்பல் பூத்த. உள் கூசி – உள்ளம் கூசி. தெரிக்கும். தெரிவிக்கும்.

வீசு உலையின் மூக்கு – காற்றை வீசும் உலைக்களத்திலுள்ள துருத்தியின் மூக்கு. விம்மிய – அதிகரித்த. வெய்து உயிர்ப்பு – வெம் மையான பெருமூச்சு வீங்க.

அடல் பெரியர் – வலிமையால் பெரியவர். அலகில் வடிவுடை யவர் – அளவில்லாத அழகையுடையவர். புளகம் மூடி – மயிர்க்கூச் செறிய. இளம்பிடி – இளம்பெண்யானைபோன்ற இப்பெண். தலை தடுமாறு–தலைதடுமாறி, ஒழுங்கு தவறி. தமியளது–தனியாளாகிய எனது. தகைமை – பெருந்தகைமை. படிறு - வஞ்சகம். பொலம்– அழகு.

திருவாருஞ்சேடியர் - அழகு பொருந்திய தோழிமார்கள். ஆயத்தார் - தோழிமார்கள். வேலை - கடல். அகோராத்திரம் – பக லும் இரவும். காலும்-காற்றும். கட்டம்-கஷ்டம். ஒல்லை. விரைவில்.

இல்லிடம் – வீட்டினிடம். கதுவ – பற்ற. கரந்து – மறைந்து. திருக் கறு – மயக்க மற்றிருக்கிற. பல்குருக்கள் – பலகுருமார்கள். மன்று அனைத்தும் – அம்பலங்கள் எல்லாவறியம். – (அவர் இல்லாமை யால்) வறுமையுற்றனவாய்க்காணப்பட்டன.

மறுத்துறங்கும் – மயக்கநித்திரையை மறுத்து யோகநித்திரை கொள்ளும்.

மான் மறவா – பெண்மானை மறவாத. கலையினமே – ஆண் மானின் கூட்டமே. பிடி – பெண்யானை.

மதம் பெருகும் மாகுலமே – மதம் பெருகுகின்ற ஆண் யானை யின் கூட்டமே. வன்பிகமே – வண்மையுள்ள குயிலே. சுகமே – கிளியே. எஞ்ஞான்றும் – எப்பொழுதாவது. நவில்விர் – சொல்லு வீர். நாள் அனந்தம் – பல தினங்கள்.

இப்பகுதிக்கு ஆசிரியர் குறிப்புரை. அஞ்ஞான மயக்கம் விடாத அறுபத்து நான்கு கலை ஞானங்களே! பிடிவாதமே வாழ்க் கையாக்கொண்ட மதச்சச்சரவுகளா லெழும் ஆரவாரமே! அனிர்த சட துக்கரூபமாகிய இஹலோகமே! சுகம் சுகம் என்று கூறப் படும் இந்திராதிபத மோக்ஷங்களாகிய பரலோகமே, என்னும் தத் வார்த்தம் ஒருவாறு தொனித்தல் காண்க.

காயம் – (இங்கே) உடம்பு. உளதே – உளதோ. சிற்சாயை – (உருவத்தின்) சில சாயை. மூதுருவம் விளக்கி–பழைய உரு வத்தை நன்றாகக் காட்டி. முந்திமொழி குளறி – முற்பட்டு மொழி கள் தடுமாறி. சுருதி – வேதம்.

பாரதி – சரஸ்வதி. கஞ்சப் பார்க்கவி – செந்தாமரை மலரில் தங்குகிற லட்சுமி. அருங்கதி – வேறு யார்க்கும் கிடைத்தற்கு அரிய கதி அல்லது அன்பு நிலை. ஆர்க–நிறைவதாக. ஆரணங்கள்–வேதங் கள். ஆர்த்த – ஆரவாரம் செய்தன.

நலம் மேவ – நன்மையடைய. பந்தனைகள் சிந்த – கட்டுகள் (இங்கே) துன்பங்கள் கெட. உணர்வைகொல் – உணர்வாயோ, தெரிந்திருக்கிறாயோ. சிறுகாற் செல்வன் – தென்றற்காற்றாகிய அருமைச்செல்வன். கடிபுரி – கட்டுக்காவல் அமைந்த கோட்டை. எதிர்ச்சையா – எதிர்பாராத நிலையில். தெண்ணீர் கன்னி–தெளிந்த

சீராகிய பெண். நிலாநிழற் சிற்றில் - நீரில் பிரதிபலிக்கும் சந்திரனது நிழலாகிய சிறு வீடு.

"சிற்றில்சிதைத்தல்" என்பதைப் பிள்ளைத்தமிழ்ப்பிரபந்தத்தில் ஓர் உறுப்பாகக்காணலாம். காவி - நீலமலர். அடர்த்து - கொய்து. உள்மணம் உகந்திலன் - அந்தப் பூவின் மணத்தை நான் உகந்தேன் இல்லை, அதாவது அந்தப் பூவை. அடிக்கடி மோந்து பார்த்து அம்மணத்தில் எனக்குள்ள உகப்பை வெளிப்படுத்தவில்லை."

அறியார்மான - அறியாதவர் போல். தீம்புனல் மாடே-இனிய நீர் பெருக்கிலே.(மாடு-பக்கம்)பூதப்பொருட்கே-ஸ்தூலப்பொருள்களுக்கே. போகப்பொருள் - ஞானப்பொருள். இரவி - சூரியன். துவக்கு இந்திரியம்-தொட்டு உணரும் புலன்.

சேய்த்தாம் - தூரத்தில் உள்ளதாகும். களங்கம்........அங்கு எதுவும் : 'கள்ளம் போனால் உள்ளது காணும்' என்று நந்தனார் சரித்திரக் கீர்த்தனையில் நந்தனார் கூறுவதை நினைவூட்டுகிறது. உண்மையாய்........சென்றிடும்—'அமுது முறையிட்டால் அம்பலத்தே கேட்கும்' என்ற கீர்த்தனை நந்தனார் கூற்றை நினைவூட்டுகிறது.

வடக்கு நோக்கி. திசையறிகருவி. ஏய்ப்ப-ஒப்ப.அனுமானாதி-(அனுமான ஆதி) அனுமானம் முதலிய அளவுகள். வெஞ்சரம் - கொடிய அம்பு. நிற்கலை - நிற்கவில்லை. திர நற்றிருவே! - திரமுள்ள அழகிய லட்சுமிபோன்றவளே.

## நான்காம் களம்

குரூரக் கூற்றின் விருபம் - குரூரமான யமனது ஓர் அவலட்சண வடிவம். பல்குழி - பல்குழிகள். பசையறு-இரக்கமற்ற அல்ல-இருள். பேழ்வாய் - பெரியவாய். கருக்கொளுஞ் சினை ஈ - கர்ப்பமாக இருக்கும் ஈ. வெருக்கொள - பயப்படும்படி. வெந் - முதுகு. இசித்து - இழுத்து கறிக்க-கடிக்க. மிகின்-மிகுதியாக இருந்தால்.பஞ்சாசத் கோடி - ஐம்பது கோடியோசனை விஸ்திரணம் உள்ளது உலகம் என்பது புராணக் கொள்கை. அலகிலை-அளவில்லை.

உந்தியந் தடாகம் - கொப்பூழாகியகுளம். நான் முகச்சிலந்தி - பிரமனாகிய சிலந்திப்பூச்சி. நாற்றிய - தொங்கவிட்ட. பேய்த்தேர் - கானல்நீர். மகோததி - பெருங்கடல் (மகா உததி). புற்புதம் - நீர் குமிழி. திரிகை - திரிக்கும் இயந்திரம். ஆர்க்கும் - ஆரவாரம் செய்கின்ற. பிரத்தியக் பிரபோதோதயம் - உள்முகமான பிரபோதம் அல்லது மெய்ஞானத்தின் உதயம். அகண்ட சித்கனம் - எல்லையற்ற அறிவின் நிறைவு.

நிருபாதிகம் - காலதேச விவகாரங்களைக் கடந்து நிற்கும் நிலை. பதையாதிருந்து - அமைதியாக இருந்து. சுதமாம் - தானே பலிக்கின்ற. அநுபூதி - அனுபவஞான நிலை. ஈனனும்- இழிந்தவனாகிய. புரையறு குறவன் - குற்றமற்ற குரு. நிமல வீடு - தூய விடுதலை. வனைற்றி - செய்து. சினகரம் - கோயில். பரிசின்றி - தன்மையின்றி. கையறு - உதவியற்ற. சங்கேதம் - குறியீடு. கரதலாமலகம் - உள்ளங்கை நெல்லிக்கனி (கரதல + ஆமலகம்).

விண்டிடாவண்ணம் - பிரிந்து போகாத வண்ணம். வீக்கிய- கட்டிய. பாதம் - கயிறு. ஆகருஷணம் - இழுத்து நிற்கும் சக்தி, யாப்புற்று - கண்டுண்டு அமைந்து. குயிற்றிய - இயற்றிய. பூரிய உயிர் - இழிவான உயிர். அக்கரம் - அட்சரம்.

அத்தனை துயரும்... அக்கினி: 'சுடச் சுடரும் பொன்போல் ஒளிவிடுந்துன்பம், சுடச் சுட நோற்கிற்பவர்க்கு பாரிசாதாதி பனி மலர் - பாரிஜாதம் முதலான குளிர்ந்த மலர்கள். அலர்தல் - மலர்தல். விளர் - வெழுத்த, உறுகாரணம் - பொருந்திய காரணம். நிசி - இரவு.

'பாரிஜாதம் - முல்லை' முதலிய பூக்கள் வெண்மை நிறமும் சுகந்தமும் உடையனவாயிருப்பதற்கு அவை இராக்காலம், அலர்தலே காரணம் என்பது ஜீவசாஸ்திரிகளின் கொள்கை' என்பது ஆசிரியர் குறிப்பு. உறுகண் - துன்பம். அருங்கை - அருமையான கை. எய்ப்பினில் வைப்பு - இளைத்த காலத்தில் உதவுவதற்கு வைக்கப்பட்ட பொருள். சேமநிதி.

### கலித்துறை

ஆபதம் - ஆபத்து. கற்படை-சுருங்கை. மாற்றம் - சொல்.

இக் கலித்துறை 'சுந்தரர் சமைத்த சுரங்கத்தைத்தத்துவோப தேசமாக உருவகப்படுத்தி அனுபூதியாலன்றி உபதேசார்த்தம் வெளிப்படாதென்று வற்புறுத்துகிறது' என்பது ஆசிரியர் குறிப்பு

## நான்காம் அங்கம்—முதற்களம்

காண்தகும் – காணத்தக்க வலிமையும் வனப்பும் வாய்ந்த. கடம்பாடு – கடமை,(கடன்படுதல்) கொக்கென அடங்கி: 'கொக்கு ஒக்க கூம்பும் பருவத்து மற்று அதன் குத்து ஒக்க சீர்த்த இடத்து' என்பது குறள்.

சம்பவம் சங்கதி - சம்பவம் நேரிடுவது. சங்கதி- தொடர்பு. காப்பு – காவல். இதக்கேடு – நன்மைக்குக் கேடு. அதிர்கழல்— முழங்குகின்ற வீரக் குரல். பாற்றினம் - கழுகுக்கூட்டம் (பேரிரு+இனம்). நிணைப்புலால்-கொழுப்போடு கூடிய மாமிசம். பிணைத்து – பருத்து. பருதிவைவேல் – பிரகாசிக்கும் கூர்மை. யானவேல். கூற்றின் நா – யமனுடைய நாக்கு. மாற்றலர்ப் பருகியும் - எதிரிகளின் உயிரைக் குடித்தும். குறுவாள் – சிறு வாள். பகழி – அம்பு. மல்கிய – மறைந்த. உரும் – இடி கலினம் - கடிவாளம். குரத்தால் - காற்குளம்புகளால். புரவி கள் – குதிரைகள்.

கூன்பிறைத் துணைமருப்பு - வளைந்த பிறைச் சந்திரனைப் போன்ற இரண்டு கொம்புகள். மர்மம் - மயக்கம். வாரணப் புயலினம்: மேகம் போன்ற யானைக் கூட்டம். கறுவி-கோபித்து. வெற்றிட்டு – முதுகு காட்டி. புரந்தரன் – தேவேந்திரன்.

இந்திரனை முதுகாட்டி ஓடச்செய்த பாண்டியன் உக்கிர குமாரன் என்பது விளையாடற் புராணம். பொருப்புகள் – மலை கள். இந்திரன் தன் வச்சிராயுதத்தால் மலைகளின் சிறகுகளை அரிந்தான் என்பதும், மைநாகம் போன்ற சில மலைகள் தப்பி மறைந்தன என்பதும் புராண கதை. கொடிஞ்சி – தாம

ரைப் பூப்போல் செய்து தேர்தட்டின் முன்னே வைக்கப்படுவது. இருஞ்சிறை – பெரிய சிறகுகள்.

யாக்கையின் – உடம்பின். சோரி – இரத்தம். பொன்றிடும் அளவு – சாகும் அளவும். விந்தம் அடக்கினோன் – விந்திய மலையின் கர்வத்தை அடக்கிய அகத்திய முனிவன். சிறுகால்–இளங்காற்று, கோட்டமில் – கோணல் இல்லாத. திருவனையார் – லட்சுமி போன்ற மனைவியர். அரி – சிங்கம். இந்தனம்–விறகு. உகம் – யுகம். திருந்தலீர் – பகைவர்களே. இறந்துகோட்டத்து – இறந்தும் கொள்ளத்தக்கது. உதும்பரதரு – அத்திமரம். இறும்– இறக்கும். மசகம் – கொசு.

குறளடி வஞ்சிப்பா

தமர் – சுற்றத்தார். நந்தா – கெடாமல். நிந்தா நெறி – நிந்தையாகிய வழி. தந்தாவளி – பல்வரிசை. சிந்தா விழ – சிந்தி விழ. அடல் – வலிமை பெயருமின் – புறப்படுங்கள். கரு முகில் – கருமேகம்.

)சை

செருக்கொழிமின் – கர்வத்தை ஒழித்துவிடுங்கள். தெவ்வீர் காள் – பகைவர்களே. சின்னமதி – அப்படிச் செய்யாமலிருப்பது சொற்ப புத்தி. சயிக்கும் எமன் எனச் செருக்கு – எமது அரசன் ஜெயிப்பான் என்று கர்வம் கொண்டு (யமன்–எம்மன்)

இரண்டாவது கலித்தாழிசைக்குப் பொருள்: விஜயலட்சுமி இந்த ஊர்க்காக்கும் வீரர் புயமே தம் குடியிருப்பாக உடையவள். ஆதலால் ஓடிப்போய்விடுங்கள் பகைவர்களே. இவர்களுடைய வாள் விஷமாகுமா என்று ஓடாமல் நிற்பீராயின் எமனுடைய திசையை நீங்கள் மறக்கமாட்டீர்கள் அத்திசையை உங்களுக்கு வழங்கினோம். 'இவர் வாள் உறைவிடம்' என்ற சொற்களுக்கு இருபொருள் உண்டு.

மூன்றும் கலித்தாழிசையின் பொருள் நம்மனையைக் காக்க உருவிய வாளுக்குப்பின் இடும்படியான உறை இல்லை, அதாவது நோக்கம் நிறைவேறுவதற்கு முன் சமாதானப்படுவதில்லை. இதனை எதிரிகள் சிந்தைசெய்ய வேண்டும். அப்படி சிந்திக்காமல்

நாங்கள் முன் வைத்த காலை பின்வாங்க மாட்டோம் என்று பகைவர்களே நீங்கள் திரும்பாமல் நின்றுகொண்டிருப்பீராயின், இந்த வாள் தூரத்திலிருக்கும் உங்கள் மனைவியரின் மங்கள நாணை அறுத்துவிடும். இதை முன்கூட்டியே சொன்னோம்.

## ரண்டாம் களம்

அடுகளம் - போர்க்களம். குரோதம் - கோபம், விரோதம். உன்னுதி - நினைத்துப் பார்ப்பாய். சுதேச அநுராகம் - சுதேசப் பற்று, சொந்த நாட்டபிமானம். புரையற்றோர் - குற்றமற்றவர்கள். உறுபணி - பொருந்திய பணி. ஏலும் - இயலும். நம்பாலாய் - நமது வசமாய். பரி - குதிரை. வாம்பரிய மர்மின் - தாவும் குதிரைமீது அமருங்கள். உன்னுழை - உன்னிடம். வீதல் - கெடுதல், சாதல். வயப்பரி வீரர் - வலிமை வாய்ந்த குதிரை வீரர்கள். இமைப்பளவின்கண் - கண் இமைக்கும் அளவில். செம்மல் - (இங்கே) அரசன்.

## மூன்றும் களம்

கைதவற்கு - பாண்டியனுக்கு. தமியள்—தனியளான மனோன்மணி, ஒன்றியாய் இருப்பவள்.

மதிவருகுலம்—சந்திரகுலம். மறுவறு—குற்றமற்ற. நறவே—தேனே. இன்னார்க்கு—பகைவர்க்கு. இரிந்து—நிலைகெட்டு. பதடி—பதர் போன்றவன். கார்முகம்—வில். கடிவாள்—கூர்மையான வாள். பேசன்மின்—பேசாதீர்கள். வீசுமின்—வீசுங்கள். அகன்மின் — விலகி நில்லுங்கள். செருமுகம் — போர்முனை. செகுத்து—அழித்து. ஓம்பவோ—காப்பாற்றவோ. மருந்தாய்—அமிர்தமாய். அஞர்—துன்பம். தனயள்—புதல்வி.

சூதக—அசுத்தமான உடம்பு. எம்மனீர்—எம்மைச் சேர்ந்தவர்களே. அழுங்கார்—துன்பமுறாதவர். இழந்திலம்—இழந்தோமில்லை. அழகு ஆர் அம்புயம்—அழகு நிறைந்த தாமரை. எவ்வும்—எழுந்து துள்ளுகிற. அணியார் பந்து—அழகு

பொருந்திய பந்து. உறும் அடிபோல்—அடைகின்ற அடிபோல. தக்கோர் சார்பு—தகுந்தவர்களின் துணை. ஊழை—விதியையும். மண்டு அமர்—நெருங்கிப் புரியும் போர். தேறுமாறு—தெளியும் விதம். வஞ்சியர்—சேர மன்னனைச் சேர்ந்தவர்கள். கிளர் போர்—எழுகின்றபோர். யாண்டு—எங்கே எப்பகுதியில். உரத்திடை—மார்பில். உய்ப்பையேற்—என்னை உய்ந்து போகச் செய்வாயானால். சழக்கு—குற்றம்.

வெலற்கு—வெல்வதற்கு. உழையுளார்—பக்கத்திலுள்ளவர்கள். மதிகுலமருந்தே—சந்திரகுலமாகிய பாற்கடலில் அமுதம் போலத்தோன்றியவனே. மடங்கல்—சிங்கம்.

விரிதலை—இடம் அகன்ற திருவனந்தபுரம். இவ்வயின் உற்றது—இங்கே நடந்தது. சிங்கச் செருத்திறம்—சிங்கங்கள் போல நாம் செய்து முடிக்கும் போர்த்திறம். உனி—உன்னி. உதியன் — சேரன். அற்றன்—சமயம். தெருள் — தெளிவு. தொடை—மாலை. தூதுவனு—தூதுவனுக.

கும்பநீர்—குடம்நீர். நிம்பமாலை—வேப்பமாலை. மதில்திறம் மதித்து—கோட்டை மதிலின் பலத்தை மதித்து. மட்பரி—மண் குதிரை. தாரும்—மாலையும். ஒறுத்திட—தண்டிக்க. உழிஞை—பகைவருடைய அரணை முற்றுகையிடுபவன் சூடிக்கொள்ளும் பூமாலை. உரையாதே—உரையாமலே. அவாவிய—விரும்பிய. சுரும்பார் வேம்பும்—வண்டுகள் மொய்க்கும் வேப்பமாலையும். விதுகுலம் — சந்திர குலம். நொச்சி — முற்றுகையிடப்பட்ட கோட்டையைக் காப்பவர் சூடும்பூமாலை. என்மதி—என்ன புத்தி. உன் இறை—உன் தலைவன், உன் அரசன். ஏதம் இல்—குற்றம் இல்லாத. என்வோ—என்னுடையனவோ. ஒல்கலை—தளராதே. உரவோர்—மனவலிமையுடையவர்கள். உம்பல்—யானை. நாணல்—கயிற்றால். பாவை—மரப்பொம்மையை.

உயிர் மருட்டுதல்—உயிர் இருப்பது போல் அசைத்து மயங்க செய்வது. நட்டார்—பகைவர். தப்பிலி—போக்கிரி. பாழ் வாய்—பாழான வாய். பகைக்கலை—பகைத்துக்கொள்ளாதே. பிரியப் படுகை—பிரியம் கொள்ளுதல் (காம வழி நேரிட்ட பகையாதலால்) என்பது ஆசிரியர் குறிப்பு. மிண்டலை—பேசாதே (மலையாளச் சொல்).

## நான்காம் களம்

மருவரு—அணுகுவதற்கு அரிய. அடங்கலும்—முழுவதும். மா—குதிரை. கடகயம்—மதயானை. ஆஞ்ஞை—கட்டளை. அகழ்கணம்—அகழ்கூட்டம். உரம் நோக்குதி—மார்பைப் பார்.

என் தங்கையின் இழிவு இப்படி எனக்கே: 'இது பலதேவனுடைய சேரர காதலியின் சகோதரன் பலதேவனை வேலால் குத்தியபோது கூறிய மொழி என்பது ஆசிரியர் குறிப்பு.

மேவருந்தொடி—பொருந்துதற்கு அரிய வளையல். ஒவலில்—நீங்குதலில்லாத. கனைகழற்படை—ஒலிக்கும் வீரக்கழலையுடைய காலாட்படை. வறிதே—வீணே. பிழைத்தனர்—பிழை செய்தனர். ஆர்த்திட—ஆரவாரிக்க. என் போலிகள் — என்னைப் போன்றவர்கள். பொருதுளேன் — போர் புரிந்துள்ளேன். இல்லிடை — வீட்டில். நடுமயிர்த்தூக்கின் — நடுவிலே கட்டி இறக்கிய மயிர் உரியைப் போலும். கருமருந்து—வெடிமருந்து. இரந்தேன்—யாசித்துக் கேட்டுக்கொண்டேன். அற்றமில்—முடிவில்லாத. கருத்திருப்பு—கருத்தின் நிலை. நுஞ்சொல் என் சிரம் ஆயினும்—உம்முடைய சொல்லை என் தலைமேல் நான் கொண்டிருந்தாலும். உன்னினன் சூதே—நாராயணன் சூதே நினைத்தான். செயினும் எளியன் — அரசன் குழந்தையைக் காட்டிலும் அறிவில் எளியவன்.

## ஐந்தாம் களம்

வேய்—மூங்கில். முளையும்—மூங்கிலும். அகத்தே வைரம் இல்லாமல் புறத்திண்மை உள்ள மூங்கிலை புல்லினத்தைச் சார்ந்தது என்பர். காழ்பெறுந்தரு—அக உறுதி பெற்றிருக்கும் மரம். சேணுயர்—மிக உயர்ந்த. சூறை—சூறவளி. காழறு—வைரம் இல்லாத. ஒருயிர்ப்பேனும்—ஒரு மூச்சேனும். அறைதி—சொல்லுவாய். வெருவுத்திக்குருவி — பயப்படுகிற 'ஆஸ்திரிச்' என்னும் நெருப்புக் கோழி என்ற பறவை. வெருவார் மான—

அஞ்சாதவர் போல. இலக்கமில் முறை—எண்ணிக்கையில்லாத தடவை. துயர்க்கணம்—பல துயரங்கள். மாநிதி வழிஞர்—பெருஞ் செல்வத்தோடு பிரயாணம் செய்வோர்.

ஆர்கலன் —.பொருந்திய மரக்கலம், புயல்கால்—புயல் காற்று. திரிந்து தியங்குமேல்—மாறிக் கலங்குமானால். மீகான்—கப்பல் ஓட்டி மீகாமன். வதிந்து—வசித்து (இங்கே) தங்கி. தக்க கால்—தகுந்த காற்று. ஒன்றுவன்—பொருந்துவன். உழையுளார்—பக்கமுள்ளவர் (இங்கே) மரக்கலத்திலுள்ளவர்கள்.

திமில்—மரக்கலம். (இங்கே) அரசாகிய மரக்கலம். பாய் மரம்: குடிலனைக் குறிப்பாக சுட்டிக்காட்டுகிறார்.

துவாதசாந்தத் துறை—மதுரைக்கு ஒரு பெயர்.. நிவாதமா—நிவாதமாக, உறைவிடமாக. நிவாதம் என்பது காற்றின்மை என்றும் பொருள்படும். நயப்பிற்கு—அன்புக்கு. என் செய—நான் என்ன கைம்மாறு செய்வது.

குடிலனை சுட்டிக் கூறிய பாய்மரம் நாராயணனைக் குறிப்பதாக மயங்குகிறான் ஜீவகன்.

தெருட்டிட—தெளிவிக்க. வேற்றுமையுருவாய்—மாறுபாடு செய்தலே இலக்கணமாக உடைய என்பது ஆசிரியர் குறிப்புரை. ஓர் இயல்—ஓர் அரசியல் உபாயம்.

அவர் ஆண்ட நாட்டு எல்லை காட்டுமோ. கொடிய காலக் கரப்பே—அவரது ஆட்சி காலகதியில் மறக்கப்பட்டு ஒழிந்து போகாமல் என்றும் நிலையில் விளங்கித் தோன்றுமோ? என்பது கருத்து.

பொன்றினும்—அழிந்தாலும். பொறித்த—நிறுவிய. அற்றதோர் கவந்தம்—தலையற்றதொரு முண்டம். பெற்றி—தன்மை. பேசாய் விடுத்தே—மனம் விட்டுப் பேசுவாய். சேய்மையுனி—தூரத்தை நினைத்து. நீ தொடர் இயல்—நீ பின்பற்றிவரும் ராஜ்ய தந்திர நயம். மருங்கு — இடம். மனக்கோள்—மனக் கொள்கை. பொன்றிட—அழிந்திட. பின் பொன்றுதல்—பின்

யானும் அழிந்து போவது. தாதான்மிய பலம் : ஒன்று மற்றொன் றின் தன்மையாதல், சேர்க்கை வாசனை.

வெங்கரா—கொடிய முதலை. பிற்கிளை—சந்ததி, குழந்தை முதலியன. நின்னுழை — உன்னிடம். பெயர்ந்துழி — மாறிய போது. கோடல் — கொள்ளுதல். சுருங்கை — நிலத்துக்குள் குடைந்து தோண்டிய வழி. சாலிபுரம் — திருநெல்வேலி.

அதன் புறம் அடர் புலப்படை—அதன் வெளிப்புறத்தினிடத் திலே வந்து முற்றுகை செய்யும் சேனை.

மாபதி — (இங்கே) மதுரை. அளித்தருளுதிரேயல் — காப் பாற்றுவீரானால். மறலி—யமன். அணையிலா—தாமில்லாத. கற் படை—சுருங்கை. பிரதிபந்தம்—தடைகள். கொன்லோ—வீணாக. இமைக்கொட்டும்—இமை கொட்டும் பொழுதும். குகுநாள்— அமாவாசை நாளில். பரவை—சமுத்திரம். கமழ்ப்பு—குற்றம், நாணம். நளி—தேள். ஒறுத்து—வருத்தி. முறி—அறை (மலை யாளச் சொல்)

குணப்பிரதம்—நன்மை தருவது. தேனூர் தெரியல்—வண்டு கள் மொய்கின்ற மாலை, இங்கே மணமாலை. கருநா—விஷ நாக்கு. காண்டும்—காண்போம். அல்—இரவு. நுவல்தரு—சொலப் படும்.

பாண்டமேல்—மட்கலம் 'கடையிற் கொண்ட பொருள்களைக் கொடுத்து மாறிக்கொள்ளலாம்; அப்படியன்றே விவாகத்தில் கொள்ளல். இது ஓர் கிராமியப் பழமொழி' என்பர் ஆசிரியர்.

உசாவி—விசாரித்து. விருத்தமாய்—எதிரிடையாய். கலு முறள்—அழுகிறாள். நலம்—அழகு. ஒவா—நீங்காத. மீட்குதும்— மீட்டுக்கொள்வோம்.

## ஐந்தாம் அங்கம் : முதற் களம்

இருசரம்—வில்லின் இரண்டு சரங்கள்; (இங்கே) இருவகை உபாயம். அணைந்து—அணுகி. மனக்கோள்—மனக்கொள்கை.

பாண்டில் — வண்டி. கேளோடு கிளைஞர் — நட்புரிமை கொண்ட சுற்றத்தராக அமைந்திருக்கிறார்கள். துன்இருள்— நெருங்கிய இருள். சாத்தியாசாத்தியம்—(சாத்திய அசாத்தியம்) இது சாத்தியம் இது அசாத்தியம் என்பது. சும்மை—ஒலி. பொங்கு கால்—வீசும் காற்று.

## இரண்டாம் களம்

கிழவி பேச்சு......கின்னரக்காரிக்கு: 'இது ஒரு கிராமியப் பழமொழி' என்பது ஆசிரியர் குறிப்பு.

பாங்குள—பக்கத்திலுள்ள. அமளி—படுக்கை. தத்து—(இங்கே) விபத்து. கோட்டியே—வளைத்தே. கொன்னே—வீணுகி. அண்ணிது—அண்மையில் உள்ளது. பாதாதரவு—பாதத்தின் ஆதரவு. சுரத்து—காய்ச்சலில். உறுங்கால்—நடக்கும் போது. பாயிருள் — பரவிய இருள். மண்ணிய — கழுவிய. சேக்கை—படுக்கை. தொழும்பு செய்—அடிமையாக்குகிற. சூழ்—சபதம். வெள்ளில்—விளா, (இங்கே) விளங்கனி. வேதகம் செய்த—வேறுபடுத்திய. போதகயூதபம்—யானைக் கூட்டத்தில் தலைவனுயிருக்கும் யானை. வஞ்சாவசம்—அன்பின் வசம். கடபட சடம்—பலவகை ஜடப் பொருள்கள் (இடம்—குடம். படம்—துணி. சடம்—உடம்பு).

## மூன்றும் களம்

அரிவையர்—பெண்கள். கோண் இலா—குற்றம் இல்லாத. அவ்வுழி—அந்த இடம். பொருவரும்—ஒப்பற்ற. நமர்காள்—நம்மவர்களே. மந்திரமாயின்—மந்திராலோசனையாயின். எள்ளரும்—இகழ்தல் இல்லாத. காப்பின்—காவலின். மானும்—ஒக்கும். விதைபடும்—விதை பொருந்தும், சந்தி நிலைமை, காலம்.

இறும்பூது அணையார்—அதிசயம் அடையாதவர்கள். ஆரா ஆர்வம்—நீங்காத அன்பு. ஆள்வினை—முயற்சி. கேள்வன்—துணைவன், தலைவன். வாரம்—அன்பு. வீர ஆசாரம்—வீர

ஒழுக்கம். தற்பிரதிமை-அவனுடைய பிரதி ரூபம். பலிதமாம்—பலனைத் தருவதாகும். அயிர்ப்புறார்—சந்தேகமடைய மாட்டார்கள். தாபதப் —தவப்பள்ளி. ஆபதம்—ஆபத்து. அருட்கடல் அடிகள்—சுந்தர முனிவர். செய—செய்க. .தினமணி—சூரியன்.

ஆர் துயர் அளக்கர்—நிறைந்த துயரக்கடல். பிறகிடல்—பின்வாங்குதல். மறலி—எமன். வெறி கழுமி—வெறி நிறைந்து. பொறி அழியும்—ஐம்பொறிகளின் ஆற்றலும் வீணாக அழிந்து கொண்டிருக்கும். வெம்பாவி—கொடிய பாவி. விரவுதற்கு—சேர்வதற்கு. அகன்மின்—விலகிப் போய்விடுங்கள். அடிகாள்—சுவாமிகளே. தெருட்ட—தெளிவிக்க. யாண்டும்—எப்பொழுதும். வேட்பையேல்—விரும்புவாயானால். ஞாட்பிடை—போர்க்களத்தில். நாட்பு—வலிமை. தாரா—தார் ஆக, மணமாலையாக. 'மணமாலையாகத் தன் கையிரண்டும் சூட்டி' என்பது ஆசிரியர் குறிப்பு. விள்ளா—விடாத, விட்டுப் பிரியாத. இங்கிசியாக: 'இன்றென இருத்தி' என்று சிதை அநுமனை வாழ்த்தியதை இது நினைவூட்டுகிறது.

கலித்துறை

திருக்கு—குற்றம், மாறுபாடு.

'இக்கலித்துறை தற்சுதந்தரம் விடுத்து அருள் வழி நின்ற போதம் அதீதப்படு முறையை விளக்குகின்றது' என்பது ஆசிரியர் குறிப்பு.

முற்றிற்று.